தமிழ்ச் சிறுபத்திரிகைகளில்
நவீன இலக்கியம்
வளரக் காரணமாயிருந்த
படைப்பாளிகளுக்கும்
வாசகர்களுக்கும்
விமர்சகர்களுக்கும்

## அத்தியாயம். 1

இருள் பின்வாங்கி விலகும் தகவல் முதன்முதலில் எட்டியது ஒரு பறவையை. அது தன் கூட்டத்தாரைக் கூவி எழுப்பியது. பறவைக் கூட்டத்தின் ஓசையில் மிருகங்கள் விழிப்புக் கொண்டன. ஒளியை மறைத்திருந்த மாயக் கரம் விலகிக்கொண்டது. வெளிச்சம் சிறுகச் சிறுக வஸ்துக்களாக மாறிக்கொண்டே வருகிறது. கம்பிக் கிராதியாக. ஆலமரமாக. ஊருணிக் கரையாக. வாசல் தெளிக்கும் பெண்களாக. பார்வை கொள்ளும் கண்களாக. வெளிச்சம் தன் வல்லிசையைத் தொடங்கிவிட்டது. வெளிச்சம் யோசனைகளாக மாறுகிறது. இருளில் இழந்திருந்த சுய அடையாளத்தை வெளிச்சத்தின் முன்னிலையில் மீட்டெடுக்கிறது பொழுது.

விழிப்புத் தட்டியவுடன் எழுந்த முதல் கேள்வி, நான் எங்கிருக்கிறேன் என்பதுதான். இடவலம் குழம்பிக்கிடந்த பிரக்ஞை வெளியில் மின்னல் வேகத்தில் யாவும் அதனதன் இடத்தில் பொருந்தி அமர்கின்றன.

அருகில், சற்றுப்பிளந்த வாயுடன், முகத்தில் மாறாத வெகுளியுடன் உறங்கிக் கொண்டிருக்கும் சிகப்பியின் முகத்தைப் பார்த்தார் ராம. பழனியப்பன். முன்னந்தலை நரைக்க ஆரம்பித்தவுடன் சிகப்பியின் அழகு சற்றுக் கூடிவிட்டது என்று தோன்றியது. அவள் வயதுடன் சமமாக வளர்ந்துகொண்டிருக்கும் தன் ரசனையின் வயதை வியந்துகொண்டார். உறக்கத்தில் சிகப்பியின் முகம் பேரழகு கொள்கிறது. கைகளில் ஏந்திக்கொள்ள ஆசையாய் இருக்கிறது. காமம் உதிர்ந்து காதலின் பாதையில் நகர்ந்துவிட்டது உறவின் தன்மை.

சிகப்பி நல்ல கறுப்பு. கருவறையிலிருந்து இறங்கி வந்த விக்கிரகம்போல இருப்பாள். தீர்க்கமான மூக்கு, பருத்த உதடுகள், மிகப் பெரிய கண்கள். நடக்கும்போது கால்கள் ஒன்றையொன்று பின்னுவது போல நடப்பாள். பேச்சில் வெகுளித்தனம் வழியும். வீங்கின குழந்தை என்றுதான் சொல்ல வேண்டும் அவளை.

ஆரம்ப நாட்களில் அவளை விட்டு விலக மனம் சம்மதியாது.

சதைவேகம் கொண்டு விழித்திருந்த இரவுகள் அநேகம். அவள் உடலிலிருந்து கிளம்பும் வேர்வை வாசனையில் கிறங்கிக் கிடப்பார். இரண்டாவது வருட ஆரம்பத்திலிருந்தே இருவர் மனதிலும் ஏக்கம் படர ஆரம்பித்துவிட்டது...

ஓசையெழாமல் எழுந்து நாதாங்கியைத் திறந்து வெளியில் வந்தார். இருள் மெல்ல விலகிக்கொண்டிருக்கிறது. கிராதிக் கதவின் இடைவெளியில் கையை நுழைத்து உட்புறம் தாழிட்டுவிட்டு, வெளிச்சம் பரவும் தெருவில் இறங்கினார். குளிர்ந்த காற்று முகத்தில் படர்ந்தது. ஓரிரு வீடுகளில் வாசல் தெளிக்கிறார்கள். கிழக்கை நோக்கி நடக்க ஆரம்பித்தார். மாளிகை மாதிரி வீடுகள் இருபுறமும். ஒரு வீட்டிலும் உரிமையாளர் குடியிருக்கவில்லை. புழக்கத்துக்குத் திறந்துவிடப்பட்ட ஓரிரு அறைகளில் குடித்தனம் நடத்திக்கொண்டு, ஒட்டு மொத்த வீட்டுக்கும் பொறுப்பாளர்கள் இருக்கிறார்கள். கழிவறை வசதி அற்ற வீடுகள்.

ஊருக்கு வெளியில் வந்து, கருவேலம் புதர்களின் ஊடாக நடந்து, வாயில் கடித்த வேப்பங்குச்சியுடன் ஒரு புதரின் பின்புறம் குந்தினார். மறைவிடங்களில் காற்று வருடியபோது உடல் சிலிர்த்தது. உதறிய நடுக்கத்துடன் பீய்ச்சிய சிறுநீர் தரையில் வரைந்த கோலத்தை வெறித்தார் பழனியப்பன்.

முந்தின இரவில் குழைந்து முயங்கிய சிகப்பியின் முகம் நினைவில் எழுந்தது. ஆவேசமாக இசைந்தாள் அவள். கரட்டுப்பட்டிக்காரர் உத்தரவாதம் கொடுத்திருக்கிறார்.

> அடுத்த வருஷம் இதே தேதியில் பாலமுருகன் விளையாடுவான் ஒங்க வீட்ல. அவனைத் தூக்கிக்கிட்டு வருவீக என்னெப் பார்க்க. வரும்போது எட்டு முழம் வேட்டியும் ஒரு சீப்புப் பழமும் வாங்கியாங்க.

சிகப்பியின் உற்சாகத்துக்கு அதுதான் காரணம். சிறுகச் சிறுக உடற்சேர்க்கையில் ஆர்வம் குறைந்துகொண்டே வந்து, மாதத்தில் ஒரு தடவை சேர்ந்தால் அதிகம் என்றிருந்த சமயத்தில், கரட்டுப்பட்டி செல்ல வாய்த்ததும் ஒரு விதத்தில் நல்லதாகப் போயிற்று. இனி, கொஞ்ச நாட்களுக்காவது, முன்னிரவுகளில் சிகப்பியின் விசிப்பைக் கையாலாகாமல் பார்த்துக்கொண்டும் கேட்டுக்கொண்டும் இருக்க வேண்டாம்.

வேறு எந்த ஜீவராசிக்காவது இனப்பெருக்கம் இத்தனை பெரிய

மனச்சுமையாக இருக்குமா?

இறைந்து கிடந்த கருங்கல் ஜல்லிகள் இரண்டு மூன்றை எடுத்துச் சுத்தம் செய்துகொண்டு வீட்டை நோக்கி நடந்தார். ஊருணியில் தண்ணீர் இல்லை. நல்ல தண்ணி ஊருணியில் இருக்கும் தண்ணீரின் அளவும் குறைந்துகொண்டே போகிறது.

பலசரக்குக் கடை செல்வம் ஒவ்வொரு பலகையாகக் கழட்டிக் கடையைத் திறந்துகொண்டிருக்கிறான். மேல வீட்டு உண்ணா மலை ஆச்சி திண்ணையில் வந்து அமர்ந்துவிட்டாள். கையில் எடுத்த வெற்றிலையைச் சிசுவைப் போலச் சீராட்டுகிறாள். பக்கத்தில் இரும்பு வெற்றிலை உரல் இருக்கிறது. பழனியப்பனைப் பார்த்துச் சிரிக்கிறாள். சிகப்பிக்கு இந்த ஆச்சியிடம் மனத்தாங்கல். பேச்சு வார்த்தை கிடையாது சமீபகாலமாக.

வீட்டு வாசலில் பால்காரக் கோபாலின் சைக்கிள் நிற்கிறது. தலை வெட்டப்பட்ட சிவலிங்கம்போல அலுமினியப் பால் கேன் இருக்கிறது கேரியரில். வீட்டுச் சுற்றுச் சுவருக்குள்ளிருந்து கை நிறைய முருங்கை இலைகளுடன் வெளிவருகிறான் அவன்.

கோவாலு.

சொல்லுங்கய்யா.

நாளைக்கிக் காலைல வரும்போது, கோமியம் கொண்டு வா.

ஆகட்டுங்கய்யா, ஆச்சியம்மாவும் சொன்னாங்க.

சிகப்பி நீட்டிய துவாலையை வாங்கியபடி கொல்லைப்புறம் போனார் பழனியப்பன். சிகப்பியின் குரல் முதுகுப்பக்கம் ஒலித்தது.

என்னாங்க, செய்யது அண்ணன் வந்திருக்காஹளாம். கோவாலு தாக்கல் சொன்னான். சாயங்காலம் வாராஹளாம். பாத்தீஹளா, அதான் முந்தாநாத்துலேருந்தே காக்கா சொல்லிக்கிட்டேயிருக்கு.

சிகப்பியின் குரலில் தனீ உற்சாகம் ஏறியிருந்தது. பாவம், பிறந்த வீடு என்ற உரிமையில் ஒரு ஈ காக்காய் இல்லாதவள். இருந்தும் இல்லாமல் போய்விட்டார்கள். இவளுடைய புலம்பல்களைப் பொறுமையாய்க் கேட்டு ஆறுதல் சொல்ல ஆள் வந்தாகிவிட்டது. முந்தின மூணு நாலு மாசக் கதைகளைச் சொல்லித் தீர்த்துக்கொள்வாள். ‘அது சரி, நான் மட்டுமென்ன, நானும் அதைத்தானே செய்கிறேன்’, என்று நினைத்தவாறு குளிக்கப் போனார் பழனியப்பன்.

மனது துள்ளலாக இருந்தது. இன்று இரவு வெகுநேரம் பேசிக்கொண்டிருக்கலாம். செய்யது இரவுப் பறவை. ஃப்ளாஸ்க்கில் ஊற்றி வைத்த டீயையும், சிகரெட்டுகளையும் மாறிமாறிக் குடித்தபடி சலிக்காமல் பேசுவான். அவனுடைய அப்பா முத்தலீப் வாத்தியார் அப்பாவுக்கு நண்பர். இவன் எனக்கு. முத்தலீப் வாத்தியார் நினைவுடன் தவிர்க்க முடியாமல் நினைவு வந்துவிடுகிறது அந்தப் பாட்டு.

பேராசைக் காரனான ஒருவனிடம்

அதிசயமான தொரு வாத்து உண்டு.

அதிசய வாத்து தினந்தோறும்

ஒவ்வொரு பொன் முட்டை தனையிட்டது...

முத்தலீப் வாத்தியார் படிக்க வைப்பதில் பேராசை உள்ளவர். செய்யதை யெம்மே வரைக்கும் படிக்க வைத்தார்.

செய்யது ஆறாவது ஃபாரம் வரையும் கூடப் படித்த தோழன். அதற்குப் பிறகு எஸ்ஸெஸ்ஸெல்ஸி வந்தது. இப்போதுதான் எஸ்ஸெஸ்ஸெல்ஸியையும் எடுத்துவிடப் போகிறார்களாமே. ப்ளஸ் டூ என்று சொல்கிறார்கள் புதுப் படிப்பை.

செய்யது நன்றாகப் படித்தான். மதுரையில் பேராசிரியராகி விட்டான். நானானால் கைக்கும் வாய்க்கும் கரெக்ட்டாகச் சம்பாதித்து, இதோ சிங்கியடித்துக்கொண்டிருக்கிறேன். அப்பச்சி பார்த்த பார்வை. அந்த மனுஷன் கொஞ்சநாள் குடும்பத்தோட இருந்து சம்பாரிச்சுப் போட்டிருந்தால் இன்னும் கொஞ்சம் உருப்படியாக உத்தியோகம் பார்த்திருக்கமாட்டேனா. படிப்பு என்ன வரமாட்டேன்னா சொல்லிச்சு.

சிகப்பி காலைப் பலகாரத்துக்கு இடியாப்பமும் குழிப்பணியாரமும் செய்து வைத்திருந்தாள். இன்னும் கொஞ்ச நாளைக்கு வீட்டில் சமையல் தடபுடலாகத்தான் இருக்கும். இந்தக் கரட்டுப்பட்டிக்காரர் மாதிரி யாராவது அவ்வப்போது தலை நீட்டி ஏதோ ஒரு நம்பிக்கையை ஊட்டிவிடுகிறார்கள். இவள் உடனடியாகக் குமரிப்பெண்ணாக மாறிவிடுவாள். பிறகு, ஸ்ரீவில்லிபுத்தூர் ஸ்நானப் பொடிதான். ராத்திரிகளில் இனிப்பு சேர்த்த பலகாரம்தான். கோணச் சிரிப்புதான். கொணட்டல்தான். சளசளவென்று பேச்சுதான். ஒருவாரம் பத்து நாள் ராஜபோகமாகக் கழியும்... அவள் கொடுத்த கருப்பட்டிக் காப்பி அமிர்தமாய் இருந்தது.

சைக்கிளை எடுத்துக்கொண்டு,

ஆத்தா, வாறேன்.

என்று வீட்டின் உள்புறம் நோக்கிச் சத்தம் கொடுத்தார் ராம. பழனியப்பன்.

# அத்தியாயம். 2

மொட்டை மாடியில் இதமான குளிர்காற்று வீசுகிறது. வராக நதியில் நிரம்பி ஓடும் நீர் தொட்டு வரும் காற்றில் லேசான ஈரப்பதம் இருக்கிறது. நிர்மலமான ஆகாயம். வழக்கத்தை விடவும் அடர்த்தியாகவும், மிகுந்த எண்ணிக்கையிலும் நட்சத்திரங்கள் இறைந்து கிடக்கின்றன. வடக்கு அக்ரஹாரத்தின் எல்லையில் இருக்கும் சிவன் கோயிலிலிருந்து ஆலாட்ச மணியின் காத்திரமான ஒலி எழுந்து அடங்குகிறது. அதன் ரீங்காரம் சன்னமாகத் தொடர்கிறது.

அம்மா எதுவுமே கேட்கவில்லை. நாமக்கல்லிலிருந்து எதிர்பாராத நேரத்தில் ஹாலாஸ்யம் வந்திறங்கியதைப் பற்றி ஆச்சரியமோ சந்தேகமோ படவில்லை அவள். சென்றமுறை பார்த்ததை விடவும் இளைத்திருக்கிறாள். அம்மா தேயத் தொடங்கிவிட்டாள் என்று தோன்றியது. எத்தனை வருடங்கள் மாடாக உழைத்திருக்கிறாள். ஒருவேளைச் சாப்பாட்டுக்குப் பகல் பூராவும் வேலை பார்க்கவேண்டிய ஜாதகம் அவளுக்கு.

இரவு சாப்பிட்ட பிறகு ஹாலாஸ்யமே முன்வந்து சொன்ன போதும், அவள் முகத்தில் அதிர்ச்சி ஏதும் தென்படவில்லை. நிதானமாகச் சொன்னாள்:

> சரி, போறது விடு. உனக்கு ஞாயம்னு பட்டதைத்தானே செஞ்சே, அதுதான் முக்கியம். எங்கேயோ குடிசைலேயிருந்துட்டு, இப்பொக் காரைவீட்லே வந்து குடியிருக்கலையா. இதெல்லாம் தானாகத்தானே நடந்தது. மரம் வெச்சவன் ஜலம் விடுவான். போ. போய்த் தூங்கு.

தூக்கம்தான் வர மாட்டேனென்கிறது.

அம்மாவை எந்தத் துயரமும் எதுவும் செய்துவிடாது என்று தோன்றியது. ரணங்கள் பட்டுப் பட்டு மரத்துவிட்ட ஹிருதயம், கட்டாந் தரை போல இறுகிவிட்டது. சிரித்தாலும் அளவோடுதான் சிரிப்பாள். கேட்டால்,

ஆமாண்டா, மெத்தக்காலம் கழிச்சாச்சு, இன்னும் சித்தெக் காலம்தானே. உங்கப்பாகிட்டெப் போய்ச் சேர்ற யோசனையைத் தவிர, வேற எதுலெயும் மனசு ஒட்ட மாட்டேங்கறது .

என்பாள்.

அப்பாவும் கடைசிவரை உழைத்துப் பிழைத்தவர்தான். சாதாரண சரக்கு மாஸ்டராக இருந்து குடும்பத்தை நடத்துவது எவ்வளவு கடினமான காரியம். சம்பாத்தியத்துக்கு வழிகாட்டாத இயற்கை, புத்திர பாக்கியத்தை வாரி வழங்கியிருந்தது. ஆறு குழந்தைகள். அரை வயிற்றுச் சாப்பாடு, கந்தல் உடுத்தி வாழ்ந்தவர் அப்பா.

ஆரம்ப நாட்களில் கரட்டுப்பட்டியில் குடித்தனம். வாடிப்பட்டியில் லெக்ஷ்மணய்யர் ஓட்டலில் உத்தியோகம். வண்டிப்பாதை வழி நடந்து வந்தால் மூன்று மைல் தூரம். கரட்டிப்பட்டியிலிருந்து வாடிப்பட்டி நோக்கி விரையும் முல்லையாற்றின் கரையோடு நடந்தால் ஒன்றரை மைல்.

அப்பாவுக்குத் தொடர்ந்து நடக்க முடியாது. தொடைவாளை என்ற அபூர்வமான வியாதி அவருக்கு. தொடர்ந்து நடந்தால் தொடைகள் இரண்டும் கல்லாகக் கனத்துவிடும். பிறகு ஒரு வாரத்துக்காவது காய்ச்சலில் போட்டுவிடும். தரையில் உட்கார்ந்தபடி தேய்த்துத் தேய்த்து இழுத்து நகர வேண்டும். வண்டிச்சத்தம் காலணா. ‘அது இருந்தால் ஒரு வேளைக்கு ஆகுமே’ என்பார் அப்பா.

நீச்சல் வீரர் அவர். மிதவை நீச்சலில் சூரர். வேஷ்டியை எடுத்துத் தலைப்பாகையாகக் கட்டிக்கொண்டு முல்லையாற்றில் இறங்கிவிடுவார். இழுத்துச் செல்லும் நீரில் மிதந்தவாறே வாடிப்பட்டிவந்து சேர்ந்து தலைப்பாகையை அவிழ்த்துத் துவட்டிக்கொண்டு ஓட்டலுக்குப் போவார். திரும்பும்போது வேறு வழியில்லை. நடந்துதான் வந்தாக வேண்டும்.

கார்த்தாலே கிழக்கே போற நதி, சாயங்காலம் மேற்கே திரும்பினா எவ்வளவு நன்னா இருக்கும். ஆனாக்கெ, அது ஏன் திரும்பணும்? அதுக்கென்ன பொண்டாட்டியா, பிள்ளையா குட்டியா, இல்லே, அதும் பேருதான் முத்துராமலிங்கமா...

என்று சொல்லிச் சிரிப்பார் அப்பா. அம்மாவும் சிரித்துக் கொள்வாள்.

ஒரு முறை வேலை முடிந்து வந்துகொண்டிருக்கிறார். நள்ளிரவு. அன்றைய கூலியையும், நாலைந்து மைசூர்ப்பாகுகள் மடித்த காகிதப் பொட்டலத்தையும் மடியில் கட்டியிருக்கிறார். ரெட்டை ஆலமரத்தருகில்

வண்டிப்பாதை கரட்டுப்பட்டியை நோக்கித் திரும்பும். மறைவில் நின்றவன் தடியை ஓங்கிவிட்டானாம்.

அப்பா அவனிடம் சொன்னார்:

> போட்டுர்றா. அப்படியே போட்டுரு. என் கஷ்டமெல்லாம் விடிஞ்சுரும்.

அவன்,

> சாமீ… நீங்களா…

என்று பதறிவிட்டு ஊர்வரை துணைக்கு வந்து விட்டுத் திரும்பினானாம். அப்பாவின் இதமும், வறுமையும் அவ்வளவு பிரசித்தம்.

மகோதரம் வந்து அப்பா இறப்பதற்குக் கொஞ்ச நாள் முன்பு, மூத்த அண்ணாவுக்குப் பெரியகுளத்தில் வேலை கிடைத்தது. குடும்பம் ஊர்பெயர்ந்தது. அதன் பிறகு ஏறுமுகம்தான். சின்ன அக்காவுக்குக் கல்யாணம் ஆனதையோ, ஹாலாஸ்யம் பட்டணத்தில் ப்ரெஸிடென்ஸி காலேஜில் பி.ஏ. ஹானர்ஸ் (ஹிஸ்டரி) முடித்துவிட்டு நாமக்கல்லில் போலீஸ் இலாகாவில் வேலைக்குச் சேர்ந்ததையோ பார்க்கக் கொடுத்துவைக்கவில்லை அப்பாவுக்கு.

வேலையை ராஜினாமாச் செய்துவிட்டு வந்ததில், தொடங்கிய இடத்துக்கே மீண்டும் வந்து சேர்ந்துவிட்டோம் என்று தோன்றியது ஹாலாஸ்யத்துக்கு.

தூக்கம் பிடிக்கவில்லை. எழுந்து உட்கார்ந்தார். வெற்றிலை சீவல் வைத்திருந்த காகிதப் பொட்டலத்தைப் பிரித்தார். செம்பிலிருந்த தண்ணீரை உள்ளங்கையில் ஏந்தி, உட்கார்ந்த இடத்திலிருந்தே கொப்பளித்துத் துப்பினார். நேர்கோடாகப் பாய்ந்த நீர்த்தாரை வளைந்திறங்கிக் காணாமல் போனது. வெற்றிலையை வலது உள்ளங்கையால் நீவினார்.

அம்மா சொன்னது ஞாபகம் வந்தது:

> உன்னுடைய சிநேகிதன் முத்துச்சாமி இங்கேயே வந்துட்டான் தெரியுமோ. ஏதோ உபாஸனையிருக்காம்… அவன் வீட்டுத் திண்ணையிலே ஏகக்கூட்டம். சிவகாமியோட நானும் போய்ப் பார்த்துட்டு வந்தேன். வடகரையிலே நாயக்கர் தெருவிலேதான் ஜாகை. நெறையப் பெரிய மனுஷாள்ளாம் வந்து பாக்கறாளாம்…
>
> அவன் எங்கே இங்கே வந்தான்?

வந்து ரொம்பநாள் ஆச்சு. நீ ட்ரெய்னிங்குக்கு அந்தப் பக்கம் போனே. அவன் இந்தப் பக்கம் வந்து சேர்ந்தான்.

நீ எதுக்குப் போனே.

யாரோ சாமியார்னு கேள்விப்பட்டு சும்மாப் பாத்துட்டு வரலாம்னு போனேன். பார்த்தா இவன். சும்மாச் சொல்லக் கூடாது. சட்டுன்னு அடையாளம் கண்டுனுட்டான். உன்னைப் பத்தியும் விஜாரிச்சான். தன்மையான பையன்.

முத்துச்சாமி சோழவந்தான்காரன். அவனுடைய அப்பா, 'பொய்யாப்புலவர் ஜோதிஷ நிலையம்' என்று ஒரு கூரைக் கொட்டகையில் தொழில் நடத்தினார். அதில் வந்த வருமானத்தை வைத்தும், பரோபகாரிகள் உதவியதை வைத்தும் மகனைப் பட்டணத்துக்கு அனுப்பினார். முத்துச்சாமி ஹாலாஸ்யத்துக்கு வகுப்புத் தோழனானான். ரொம்பத் தன்மானம் உள்ளவன்.

இடைக்காலச் சரித்திரம் நடத்த வந்த அனந்தசயனம் அய்யங்கார் ஒருமுறை இவனை,

மிஸ்டர் முத்துஸ்வாமி...

என்று விளித்தபோது, பந்துபோல எழுந்து சொன்னான்.

நான் முத்துஸ்வாமியில்லை. முத்துச்சாமி.

என்ன வித்தியாசம்?

நான் பார்ப்பனன் இல்லை. வள்ளுவன்.

மதறாஸ் பட்டணத்தின் பல பகுதிகளிலும் நடக்கும் சுய மரியாதைக் கட்சிக் கூட்டங்களுக்கு ஹாலாஸ்யத்தையும் அழைத்துப் போவான். மதறாஸின் பல மூலைகளையும் நடந்தே கடந்திருக்கிறார்கள் இருவரும். மெரீனாவின் நீண்ட கடற்கரையில் நடக்கும்போது ஒரு முறை முத்துச்சாமி சொன்னான்.

ஆலாஸ்யம், இந்த மணல் பரப்பின் ஒவ்வொரு துகளுக்கும் ஒரு பிரத்யேக சரித்திரம் உண்டு, தெரியுமா.

ஹாலாஸ்யத்துக்குப் புரியவில்லை. என்ன சொல்கிறான் இவன்?

முத்துச்சாமி தொடர்ந்து சொன்னான்:

> மனுஷ்யனை மையமாக வைத்து யோசித்துப் பழகிவிட்டோம். பூமியின் ஆண்டைகள் நாம்தான் என்கிற மாதிரி. தெருவில் தேங்கிய சாக்கடைக் குட்டையிலிருந்தும் சரி, இந்த மகாசமுத்திரத்தின் பரப்பிலிருந்தும் சரி, மேகமாகி உயர்ந்து, தாரையாகப் பொழியும் ஒவ்வொரு துளி நீருக்கும் ஒரு தனி சரித்திரம் இருக்கிறது.
>
> உபயோகம் கருதி மட்டுமே சிந்திக்கக்கூடியவர்களாய் மனுஷ இனம் மாறிவிட்டபடியால், இதையெல்லாம் யோசித்துப் பார்க்க நேரமில்லாமல் போய்விட்டது.
>
> அதை விடு, ஜகதீஸ சந்திர வஸூ என்ன சொல்கிறார் தெரியுமா. தாவரங்களுக்கும் பிராணிகளைப் போலவே உணர்வு உண்டாம். விருப்பு வெறுப்பு எல்லாம் உண்டாம். சித்தப்பா, பெரியப்பா, முறைப் பெண் எல்லாமும்கூட இருக்கலாம். நமக்குத்தான் தெரிவதில்லை!

அவன் வேடிக்கைக்காகச் சொல்கிறானோ என்று அவன் முகத்தைப் பார்த்தான் ஹாலாஸ்யம். முத்துச்சாமியின் முகம் மிகத் தீவிரமாக இருந்தது. மேலும் சொன்னான்.

> யாரும் தெரிந்துகொள்ளக் கூடிய, ஆனால் யாருமே தெரிந்து கொள்ள ஆசைப்படாத, ஒரு திறந்த ரகஸ்யம் இருக்கிறது ஆலாஸ்யம். அதை அறிவதுக்கு முயலப் போகிறேன்.

முத்துச்சாமிக்குப் பாவம், படிப்பு அவ்வளவாக ஏறவில்லை. எப்போதும் எதையோ பறிகொடுத்த மாதிரி இருக்க ஆரம்பித்தான். இரண்டாமாண்டுத் தொடக்கம் முதலே, மடியில் விரித்து வைத்த பாடப் புத்தகத்தை வெறித்துப் பார்த்தவாறிருப்பான்.

> ஆலாஸ்யம், நாம் சரித்திரம் என்று படிப்பதெல்லாம், சரித்திரா சிரியனின் பார்வையையும் அபிப்பிராயத்தையும்தானே. எழுதப் படாத சரித்திரங்களிலிருந்து ஒருவன் தன்னிஷ்டப்படி உருவி எடுத்ததுதான் எழுதப்பட்ட சரித்திரம். விடுபட்ட சரித்திரத்தை அறிவதற்கு உள்ளுணர்வைத்தான் உபயோகப்படுத்த வேண்டும் என்று தோன்றுகிறது. என்ன சொல்கிறாய்?

நாளைக்குப் போய்ப் பார்க்கவேண்டும் அவனை. ஹாலாஸ்யத்துக்குத் தூக்கம் வருகிற மாதிரி இருந்தது.

## அத்தியாயம். 3

சுருட்டுப் புகை சூழ்ந்த முற்றத்தில் நுழைகிறார்கள். அப்பச்சி தன் வேஷ்டியின் சொருகு நுனிப் பொட்டலத்திலிருந்து உறையூர் சுருட்டுக் கட்டுக்கள் இரண்டை எடுத்து வெங்கடேஸ்வரய்யரிடம் தருகிறார். அவர் பிரியமான பார்வையுடன் வாங்கிக் கொள்கிறார்.

உக்காரு ராமநாதா. நீயும் உக்காரு தம்பி.

அய்யர் தென்னை நார்க்கட்டிலில் அமர்ந்திருக்கிறார். நாளானதால் தொய்ந்த பள்ளத்தில் அவரது கனத்த சரீரம் பதிந்திருக்கிறது. பள்ளத்தின் இடது உட்சரிவில் கனத்த புஸ்தகம் ஒன்றும் வெற்றிலைச் செல்லமும் கிடக்கின்றன.

தரை விரிப்பில் அரைவட்டமாக அவர் முன் உட்கார்ந்திருந்தவர்களில் ஓரிருவர் சற்று நகர்ந்து இடம் தருகிறார்கள். வந்தவர்களைக் கோர்த்த அரைவட்டம் சற்றுப் பெரிதாகிறது. அய்யர் சுருட்டை ஆழ்ந்து உள்ளிழுத்துவிட்டுப் புகையோடு வெளியேற்றும் சொற்களில் மூச்சுக் கமறுகிறது கேட்பவர்களுக்கு.

பழனியப்பன் என்ன படிக்கிறான்.

ஆறாவது பாரம் முடிச்சிட்டான். அடுத்து என்ன செய்யலாம்னு யோசிச்சிட்டிருக்கேன்.

நம்மகிட்டேயே வந்துறலாமே.

தாராளமா, நீங்க சொல்றதுக்கு அட்டியேது.

பேச்சு எங்கெங்கோ அலைகிறது. வழக்கம்போல அய்யர்தான் அதிகம் பேசுகிறார். மற்றவர்கள் அவருடைய பேச்சைத் தடி போட்டுத் திருப்பும் விதமாக ஓரிரு வார்த்தைகள் சொல்கிறார்கள், அல்லது கேட்கிறார்கள். எதிர்பார்த்தபடியே பேச்சு பர்மாவில் சென்று நிலைக்கிறது.

எல்லாருக்கும் ஒரு ஆச்சரியம். அய்யர் ஏன் கலியாணம்

பண்ணிக்கலேன்னு. ஆளாளுக்கு வதந்தியைப் பரப்புறான்கள். சரி, பரப்பு. பெரிய ஆளுகளைப் பத்திப் பொறணி பேசினியானா, அது ஞாயம். என்னை மாதிரி சாமான்யனைப் பத்தி ஏன் பேசறே. கொழுப்புதானே ஒனக்கு.

பட்டணத்திலே என்ன பேசறான்கள் தெரியுமோ? நான் காபி கிளப்பு வைக்கிறதுக்கு ஒரு துலுக்கன்தான் காரணமாம். அவனெ வெள்ளெக்காரப் போலீஸு தொரத்தறதாம். ரயிலடி வழியா ஓடி வர்றானாம். அவன் தங்க யாவாரியாம். அங்கெ நின்னுட்டிருந்த என்கிட்ட ஒரு துணிக்கடைப் பையைக் குடுத்துட்டு ஓடீட்டானாம். நான் பிற்பாடு திறந்து பார்த்தா, உள்ளே இருந்தது அம்புட்டும் தங்கக் கட்டியாம். அந்தத் துலுக்கன் திரும்ப வரவேயில்லையாம். அவனோட ஐசுவரியத்தை வச்சு நான் கோடீஸ்வரனாய்ட்டேனாம்.

என்னை யாருன்னே தெரியாமல் ஒரு பட்டுநூல்காரன் ரயில்லே வரும்போது என்கிட்டேயே சொல்றான் இந்தக் கதையெ. ‘கேழ்வரகுல நெய் வழியறதுன்னு சொல்றவன் சொன்னா, கேக்கறவன் புத்தி எங்கேய்யா போச்சு’ன்னு மட்டும் கேட்டுட்டு விட்டுப்பிட்டேன் அதோட… குண்டி தேயத்தேய பர்மாவில் அய்யன் ஒழைச்சது யாருக்குத் தெரியும்?

பாரு, எங்கியோ ஆரமிச்ச எங்கியோ போயிட்டேன். இல்லியா.

ஒங்க கல்யாணத்தெப் பத்தி வதந்தி…

ஆமா. அய்யர் நபும்ஸகனோன்னு சம்சயம் வந்தாச்சு ஊருக்குள்ளே. இருந்துட்டுப் போகட்டுமே. உனக்கு என்ன கொறைஞ்சு போச்சுங்கறேன். அய்யன் ஆறேழு கல்யாணம் பண்ணிக்குவான், இல்லே கட்டைப் பிரம்மச்சாரியா இருந்து சாவான். சொத்தையெல்லாம் சிவன் கோயிலுக்கு எழுதி வைப்பான். ஒனக்கென்ன ஆச்சூங்கறேன். அறுபத்தஞ்சு வயசாச்சு. ஆம்பளையா இருந்தா என்ன, அலியா இருந்தா என்ன.

கல்யாணம் பண்ணிக்கறதில்லேன்னு எடுத்த முடிவுக்குக் காரணமே வேற. யார்ட்டயும் இதுவரை சொன்னதில்லே. என்னமோ இன்னிக்கிச் சொல்லணும்னு தோணறது. ராமநாதா, ஒம் பையன் இருக்கானே, கொஞ்சம் விவகாரமான விஷயமாச்சே, சொல்லலாமா நான்?

அப்பச்சி நெளிந்தார். இன்று அய்யர் சொல்லாமல் விடமாட்டார். அத்தனை பெரிய பணக்காரனை, அதுவும் முதலாளியை, எதிர்த்துப் பேச

முடியுமா.

> சரி. இருக்கட்டுமே, அவனுக்கும்தான் மீசை அரும்பியாச்சே. நல்லது பொல்லாததுகளை நாமதானே கொழந்தைகளுக்குப் புகட்டணும்... வேம்பூ, எல்லாருக்கும் டீ போட்டு எடுத்துண்டு வாப்பா...

வீட்டின் உட்புறம் நோக்கிக் குரல் கொடுத்துவிட்டுத் தொடர்ந்தார் அய்யர்.

...1941ஆம் வருஷம் டிசம்பர் மாசக் கடைசியில் ஜப்பான்காரன் ரங்கூன் மேலே குண்டு போட்டான். நான் அப்போ வேலை பார்த்து வந்த இடத்துக்குப் பேரு காலாபஸ்தி. அங்கேயிருந்து கொஞ்சம் தொலைவு தள்ளி, பக்டோங்கிற இடத்திலே குடியிருந்தேன். குண்டு போட்டன்னைக்கி ராத்திரி, தனியாப் படுத்திருக்க பயமாய் இருந்தது.

நீ என்னதான் சொல்லு, இன்ன சந்தர்ப்பத்திலே, இன்ன உணர்ச்சி தான் பொங்கும் மனுஷனுக்குன்னு கணிக்கவே முடியாது. இப்பொவரைக்கும் எழவு வீட்டுக்குள்ளே நொழஞ்சிட்டேன்னா, காமம் வெறியா ஏற ஆரம்பிச்சுரும் எனக்கு. ஊதுபத்தி வாசனையும், பூ வாசனையும், அலங்கோலமாப் பொம்பளைகள் ஒக்காந்திருக்கறதும் பாத்தா சாந்தி முகூர்த்த அறை மாதிரித் தோணும். தவிர, பொண வாசனையிலேயே ஏதோ சமாச்சாரம் இருக்குன்னுதான் தோணறது...

ஓரிருவர் சிரித்தார்கள்.

...அட, நான் வெளையாட்டுக்குச் சொல்லலேய்யா. மனுஷனுக்குத் தோணறதைத்தானே சொல்லறேன். ஆச்சு, குண்டு விழுந்திருச்சா, ரெண்டாயிரம் பேருக்கு மேலே செத்துட்டாங்க. எனக்குத் தொப்புள்லேர்ந்து பயம் ஏறிச்சு, வெங்கிடு, எத்தனை நாளைக்கி ஓடும்னு தெரியலையேடா. இன்னிக்கிச் செத்தா நாளைக்கிப் பால்ங்கிற மாதிரி, சாவு தொரத்தி வர்ற சத்தம் கேக்குதே. இருக்கிற வரைக்கும் முழுக்க வாழ்ந்து தீத்துற வேண்டியதுதான்னு நெனைச்சுக்கிட்டேன்.

அந்த பர்மாக்காரி ஞாபகம் வந்துச்சு. நாலைஞ்சு தபா போயிருக்கேன் அவ கிட்டே. அன்னிக்கு ராத்திரி அவளைத் தேடிப் போனேன். ஆறணா கேட்டா அவ. நான் ரெண்டரையணாவுக்கு மேல் ஒரு தம்பிடி தர மாட்டேன்னு சொன்னேன். வாதாடிப் பாத்தா, நான் மசியலே. இருக்குற வரைக்கும் அனுபவிக்கப் பணம் வேணும் எனக்கு. மறுநாள் பாட்டுக்குப் பணம் வேணும் அவளுக்கு.

கடேசில ஒத்துக்கிட்டா. மாடிக்கி அழைச்சிட்டுப் போனா. மர

அலமாரியிலே இருந்து ஒரு புஸ்தகத்தை எடுத்தா. இப்பொ எதுக்குப் புஸ்தகம்னு நெனைச்சுக்கிட்டேன். கேக்கலே.

மேல்சட்டைப் பித்தான்களைக் கழட்டினா. மல்லாந்து படுத்து சாரத்தைத் தொடைக்கி மேலே இழுத்து விட்டா. கனத்த வாழைத்தண்டுகள் மாதிரி இருந்த தொடைகளைப் பார்த்தும் எனக்குள்ளே ஒரு பிசாசு உசுரோட எந்திரிச்சது.

அடுத்து அவ என்ன செய்ஞ்சான்னு நெனைக்கிறே, கையிலே இருந்த பர்மியப் புஸ்தகத்தை விரிச்சு வலது கையிலே பிடிச்சுப் படிக்க ஆரம்பிச்சுட்டா. எனக்கு ஆத்திரம் தலைக்கேறிடுச்சு.

என்னடீ செய்யறேன்னேன். ரெண்டரையணாவுக்கு இவ்வளவு தான் கிடைக்கும்னு திமிராச் சொன்னா. ரத்தம் கொதிச்சது எனக்கு. சட்டைப்பையிலிருந்து ஆறணாவை எடுத்துத் தரையிலே விசிறியடிச்சுட்டு வெளியேறி வந்துட்டேன்.

அம்புட்டுதான். பொம்பளைங்கிற ஞாபகம் வந்தாலே, பர்மிய பாஷைப் புஸ்தகமும் வெறுப்போட திருப்பிக்கிட்ட மொகமும் விரிஞ்சுடுது கண்ணுக்கு முன்னாலே.... அப்புறம் கல்யாணம் எங்கே பண்ணிக்கிறது...

அய்யர் இன்னொரு சுருட்டை எடுத்துப் பற்றவைத்தார். அது லேசில் பற்ற மறுத்தது. தொடர்ந்து போராடிப் பற்ற வைத்ததும், ரயில் இஞ்சின் போல குப்பென்று புகைக் கொத்து வெளியேறியது. முற்றத்தில் சுருட்டின் கடும் நாற்றம் ஆவேசமாகப் பரவியது.

# அத்தியாயம். 4

சோழவந்தானில் பஸ் மாறியபோது அந்த ஈ வந்து கையில் உட்கார்ந்தது. எத்தனை முறை விரட்டியபோதும் திரும்பத் திரும்ப வந்து உட்கார்ந்தது. அதே பஸ்ஸில் பிறந்து வளர்ந்த மாதிரி சுவாதீனமாய் பஸ்ஸின் நீள அகலங்களுக்குள் திரிந்தது. யார் யார் மேலோ உட்கார்ந்துவிட்டு, இதுதான் என் இடம் என்பது போலப் பிடிவாதமாக முன்னங் கையில் வந்து அமர்ந்தது. வழக்கமான ஈக்களை விடவும் அளவில் மிகப் பெரியது. தலையில் ஆரஞ்சு நிறமும், உடலில் நீலங் கலந்த ஒளிர் பச்சை நிறமும், துல்லியமாக வடிவம் தெரியும் கண்ணாடிச் சிறகுகளுமாய் வந்து வந்து அமர்ந்தது. கரட்டுப்பட்டியில் இறங்கியதும், நிறுத்தத்தில் கடை விரித்திருந்த பலாச்சுளைகளை நோக்கிப் போய்விட்டது.

இறக்கிவிட்ட பஸ், பெரும் உறுமலையும் புகைத் திரளையும் விடுத்து நகர்ந்தது. தார்ச் சாலையிலிருந்து மண் பாதைக்கு இறங்கி ஊருக்குள் நடந்தார்கள் இருவரும். அருணகிரியார் வீட்டுக்கு வழி எல்லாருக்கும் தெரிந்திருந்தது.

பாதையின் இருபுறமும் வீடுகள். காரை வீடும், கூரைக் குடிசையும், ஒழுங்கற்ற கிரமத்தில் மாறி மாறி வருகின்றன. சில வீடுகளின் வாசலில் கட்டிப் போடப்பட்டிருக்கும் நாய்கள் இவர்களைப் பார்த்து கனத்த தொண்டைக்குள் உறுமுகின்றன. நாசியை விடைக்கின்றன - இவர்களின் வாசனையை வைத்தே வேண்டியவர்கள் வேண்டாதவர்கள் என்று கண்டுகொள்ள முடியும் என்பது போல.

வெய்யில் மெல்ல மெல்ல கனத்துவருகிறது. கோயில் தெருவுக்குள் நுழையும்போது ஒரு பிரம்மாண்டமான வீட்டைத் தாண்டுகிறார்கள். அரைத்த மசால் மணம் வீட்டுக்குள்ளிருந்து வாசலில் வந்து விழுகிறது. படிக்கட்டில், நிறை அம்மணமாக ஒரு குழந்தை நின்றுகொண்டிருக்கிறது. அதன் கையில் இருக்கும் பாதி கடித்த பன்ரொட்டியை வெறித்தவாறு அருகில் ஒரு நாய்

நின்றுகொண்டிருக்கிறது. பக்கத்துத் தூணில் அதே பன்ரொட்டிக்காகக் காத்திருக்கிறது ஒரு காகம்.

அருணகிரியார் வீட்டை வீடு என்று சொல்ல முடியாது. ஏதோ மடத்தின் முன்முற்றம் போல இருக்கிறது. வெயிலில் வந்த கண்களுக்குக் கூரைக்கடியில் இருக்கும் கூடம் இருள்வெளியாகத் தெரிகிறது. மெல்லக் கண்கள் பழகும்போது முன்பகுதியில் சிமெண்ட்டுத்தளம் பளபளக்கிறது. கூம்பாக உயரும் கூரையின் உத்தரத்திலிருந்து, சுத்தமாகத் துடைக்கப்பட்ட பெட்ரோமாக்ஸ் விளக்கு தொங்குகிறது. முகப்பில் தன்னந்தனியாக ஒரு கணக்குப்பிள்ளை மேஜை வீற்றிருக்கிறது.

அய்யா...

உள்ளிருந்து ஒருவர் வருகிறார்.

யாருங்க?

அய்யாவைப் பாக்கணும். பொன்னமராவதியிலேர்ந்து வர்றோம்...

இருங்க. வரச் சொல்றேன்.

சற்று நேரம் கழித்து சின்னச் சின்னத் தப்படிகள் எடுத்துவரும் இளைஞனைப் பார்த்ததும் அதிர்ச்சி தாக்குகிறது. பார்வையில்லாதவன்.

யாருங்கய்யா.

பொன்னமராவதிப் பக்கமிருந்து வர்றோங்க, அய்யாகிட்டெக் குறி கேக்கணும்னு.

வாசல்லயே நிக்கிறீங்க. உள்ளெ வந்து ஒக்காருங்க.

கணக்குப்பிள்ளை மேஜைக்குச் சற்றுத் தள்ளித் தானும் உட்கார்ந்துகொண்டான்.

சொல்லுங்க.

அய்யாவைப் பார்த்தாக் கஸ்டம் தீரும்னுதான்...

அந்த அம்மாள் தீனமான குரலில் சொல்கிறாள். வாசலின் வலப்புற மரத்திலிருந்த காக்கை கரைகிறது.

கொஞ்சம் பொறுங்கம்மா. செத்தெ நேரம் போகட்டும்.

மூவரும் மௌனமாக இருக்கிறார்கள். சற்றுக் கழித்து ஒரு கௌளி சூள் கொட்டுகிறது.புதிதாகச் சுண்ணாம்பு அடித்த சுவரும், பக்கவாட்டில் சரிந்திறங்கிய கூரையும் சந்திக்கும் இடத்திலிருந்து வருகிறது அதன்

சப்தம். திடீரென நினைவு வந்தவன் போல,

வெத்திலெ வாங்கிட்டு வந்திருக்கீங்களா?

என்கிறான். எடுத்துக் கொடுக்கிறார். மொத்த வெற்றிலையையும் தன் இரண்டு கைகளாலும் பற்றியபடி முன்னால் நீட்டுகிறான்.

இதுல கொஞ்சத்தை எடுங்க.

இருவரும் ஒருவரையொருவர் பார்த்துக்கொள்கின்றனர். ஒரு முடிவுக்கு வந்தவள் போல அவள் கொஞ்சம் முன்னே வந்து ஒரு கொத்து வெற்றிலையைப் பிரித்து எடுக்கிறாள். அவனிடம் நீட்டுகிறாள். காற்றில் துழாவும் அவனது வலதுகையில் வைக்கிறாள். அவன் அதை அவரிடம் கொடுக்கிறான்.

எண்ணிப்பார்த்துச் சொல்லுங்கய்யா.

பதினாறு.

சூடம் கொண்டுவந்திருக்கீங்களா?

எடுத்துக் கொடுக்கிறார். தன் முன்னால் வைக்கப்பட்ட சூடக்கட்டியை சர்வசாதாரணமாகக் கொளுத்துகிறான். முதலில் சற்றுக் கரும்புகை வெளியேற்றிவிட்டு, நிதானமாக நிலைக்கும் ஜ்வாலையாகிறது கற்பூரம்.

அந்த இளைஞனின் உடல் ஒருமுறை உலுக்கிக்கொண்டது. புருவங்கள் இரண்டும் நெரிந்தன. நாபியிலிருந்து வெளியேற்றுவதுபோல, உஸ்ஸ்ஸெென்று பெரும் சப்தத்துடன் காற்றை ஊதினான். சடாரென்று முகம் பவ்வியம் கொண்டது. தன் வலதுபுறத்தில் இருந்த சுவருக்குக் காது கொடுத்தவாறு,

சொல்லுங்கய்யா...

என்றான். கொட்டகைக்குள் குடிகொண்டிருந்த அமைதியில் அமானுஷ்யம் கலந்துவிட்டது. இவர்களை நோக்கிச் சொன்னான்.

அய்யா மால் கேக்குறாரு. கவனமாச் சொல்லுங்க. ஒங்க வீட்டுக்கு வலது புறம் ஒரு அம்மன் குடியிருக்காளே.

ஆமா.

வீட்டுக்குப் பின்னாடி ரெண்டு தென்னை மரம் நிக்கிது.

ஆமா.

தலைவாசல்லே நொளைஞ்சவுடனே நெலைப்படிக்கி நேர்மேலே

சுவத்திலே பெரிய விரிசல் ஒண்ணு இருக்கா?

ஆமாங்கய்யா.

ரெண்டு பேருல ஒருத்தர் கிளிஞ்ச வஸ்திரம் உடுத்தியிருக்கீங்களா?

இருவரும் ஒருவரையொருவர் பார்த்துக்கொண்டார்கள். இல்லையென்று தலையசைத்துக்கொண்டார்கள். அந்த அம்மாள் வாய்விட்டுச் சொன்னாள்:

இல்லைங்களே.

அவன் சுவரின் வெறுமையை நோக்கிச் சொன்னான்.

இல்லேங்குறாங்கய்யா... என்னங்கய்யா... அப்பிடியா... ஆமாங்கய்யா... சரிங்கய்யா... கேக்குறேங்கய்யா. ஏம்மா, ஊக்கு எதுவும் குத்தியிருக்கீங்களா?

அந்த அம்மாள் கூச்சத்துடன் சொன்னாள்:

ஆமா. உள்பாவாடையிலே ஊக்கு குத்தியிருக்கேன்.

அவன் முகம் மலர்ந்தது. சுவரிடம் சொன்னான்:

ஆமாங்குறாங்கய்யா.

திடீரென்று அவன் உடல் உயர்ந்து அடங்கியது. சம்மணமிட்ட தொடைகள் அரையடி அளவு உயர்ந்து தரையில் பட் பட்டென்று அடித்துக்கொண்டன. ஏய்... என்று உறுமினான். கைகால்கள் நெஞ்சு எல்லாம் முறுக்கிக் கொண்டன. சற்று வேகமான உச்சரிப்பில் சொல்லிக் கொண்டே போனான்:

செய்வினை இருக்கிறது. அந்த அம்மாளின் சின்னம்மா வைத்திருக்கிறார்கள். வினை வைத்தவள் ஒரு கிழவி. எடுத்துவிடலாம். அய்யா இருக்கிறவரைக்கும் நல்லவர்களுக்கு ஒரு குறையும் வராது. வாசல்படியிலும் ஆக்குப்புரையிலும் புறவாசலிலும் காவல் தெய்வமாக அய்யா இருப்பார். கோயில்களுக்குப் போகும்போது அய்யா பேரைச் சொல்லி ஒத்த ரூவாக் காசு உண்டியல்லே போட்டுருங்க. சொல்லுங்க, வினையை வச்சவங்களுக்கே திருப்பி விட்டுரலாமா?

அய்யோ, வாணாஞ் சாமி. நாங்க படுற தும்பம் போதும். எங்க விரோதி கூட இந்தக் கஸ்டம் பட வேணாம்.

இந்த மனசுக்காகத்தான் அய்யா ஒங்களைக் காப்பாத்துறேங்குறாரு. இன்னம் ஒரே வருஷம்தான். பாலமுருகன் துள்ளி விளையாடுவான்

ஒங்க வீட்டுலெ. அவனைத் தூக்கிக்கிட்டு வருவீக என்னெயப் பாக்க. வரும்போது எட்டுமுழ வேஷ்டியும், ஒரு சீப்புப் பழமும் வாங்கியாங்க. இடையிலே ஒருதபா, வைத்தீஸ்வரன் கோயில் போய்ட்டு வந்துருங்க.

வேறே எதுவும் பரிகாரம் செய்யணுமா சாமி.

அய்யாகிட்டேக் கேட்டுச் சொல்றேங்கம்மா.

மறுபடியும் சுவருக்குச் செவிகொடுத்தான்.

...ஆகட்டுங்கய்யா. செஞ்சுறச் சொல்றேங்கய்யா... செஞ்சுருவாங்கய்யா... அம்மா, ஏகப்பட்ட பேத்தெப் பாத்திருக்கீங்க போலிருக்கே. வீட்டுல பூசைத்தட்டைப் பாத்தா ஒரே யந்திரமும் தாயத்துமாக் கெடக்கே. வீட்டுல ஒண்ணும் இருக்கப்புடாது. தேய்பிறையிலே கொண்டுபோய் ஓடுற தண்ணியிலே போட்டுருங்க. விலை கூடுன சாமான் எதுவும் இருந்தா வித்துப் போடுங்க.

ஆகட்டுங்க.

விக்ய எடுத்துட்டுப் போகும்போது யாவுகமா கோமியத்திலே சுத்தம் பண்ணி எடுத்துட்டுப் போங்க. இது ரொம்ப முக்கியம். நீங்க அழிக்கிற பொருளை அகஸ்மாத்தா எடுக்குறவங்களுக்குப் பாதிப்பு வந்துறக் கூடாதில்லையா.

சரிங்க சாமி.

செரி. பொறப்புடுங்க. சகுனம் நல்லாயிருக்கு.

தச்செணெ எம்புட்டுங்க சாமீ?

ஒண்ணேகால் ரூவா வச்சிருங்க அந்த வெத்திலை மேல.

## அத்தியாயம். 5

...முன்னமே துயின்றருளிய முதுமயோத்தியோ... பன்னகாதிபப் பாயலோ... பச்சை ஆலிலையோ... அபஸ்வரமாக உயரும் அப்பாவின் குரலில் உதிரும் வில்லிபாரத வரிகள் ஓரிரண்டைக் காற்று வாரிச் செல்கிறது. முகம் என்னை நோக்கித் திரும்பும்போது... நீ எழுந்தருள என்ன மாதவம் செய்தது இச் சிறுகுடில் என்றான்... என்று முடிக்கிறார். மாதவப் பணிக்கர் அப்பாவிடம் சொல்கிறார்... தழைந்த குரலில்... முத்துராமலிங்கம், உமக்கு வந்திருப்பது மஹோதரம்ங்கிற வியாதி. அடுப்படியிலே நின்னு சுடச் சுடக் காபியாக் குடிச்சுத் தள்ளினீர் இல்லையா... கல்லீரல் கெட்டுருச்சு. மதறாஸ் போனா நல்ல வைத்தியம் பண்ணலாம். அப்படிச் சிரிக்காதீருமய்யா... எல்லாருமே வசதியுள்ளவனா இருந்துட்டா அப்புறம் துட்டுக்கு ஏதுய்யா மரியாதை? கோட்டக்கல் போறீரா... சொல்லும். வைத்தியத்துக்கு மட்டும் செலவு செஞ்சாப் போதும். என் செரியச்சன் மகன் ராஜீவன் இருக்கான். அவன் வீட்டிலே தங்கிக்கலாம்... அப்பா, மஹோதரம்னா என்னப்பா? பிள்ளையார் மாதிரி வயிறு பெரிசாயிடும்டா கண்ணா, வாசல்லே யாரு. பிள்ளையாரா, வாங்கோ ஸ்வாமி. மணையிலே வந்து ஒக்காருங்கோ. அம்மாடீ, யார் வந்திருக்கா பாரு. ஹாரத்தி எடுத்துண்டு வா. கோலத்தைக் கொஞ்சம் பெரிசாப் போட்டிருக்கக் கூடாதோ. ஒக்காருங்கோ ஸ்வாமி. அம்மா அப்பால்லாம் சவுக்கியமா. கோச்சிண்டு மலையேறினாரே ஒங்க தம்பி ஒர்த்தர், அவரோட சமரசமாயாச்சா. ஏது, மூஞ்சூறுக்கு ஒடம்பு கிடம்பு சரியில்லையா. இப்படித் துரும்பா எளைச்சுடுத்தே. அம்மாடீ, ஹாரத்தி எடுத்துட்டு அடுக்களைக்குள்ளே வந்து நின்னுட்டியே. அவருக்கு ஆகாரம் ஏதானும் குடு... என்னன்னா இது, படுத்தறேள். அவருக்கு நான் எதைன்னு குடுப்பேன். அவர் மென்னு திங்கணும்னா, தென்னோலை, இல்லாட்டா முழுத்தேங்காய், இல்லாட்டா விளாம்பழம்தான் குடுக்கணும். சமைக்காததைச் சாப்பிட்டா அவரோட வயிறு ஜீரணிக்காது... அப்போ ஸ்வாமி, பேசாம தேவலோகத்திலேயே போய்ச் சாப்பிட்டுக்கங்கோ... அம்மா கடிந்துகொள்கிறாள். இப்பிடி உருப்படாத கதைகள் எல்லாம் சொல்லிக்

கொழந்தையைக் கெடுங்கோ... நாஸ்திகனாத்தான் வளரப் போறான் அவன்... என்னடா பெரியவனே, பெரியகுளத்திலே உத்யோகம் ஆயிருக்கா. தாராளமாப் போய்ட்டு வா. இல்லே, நான் வரமாட்டேன். இதுநாள் வரைக்கும் இந்த ஊர் என்னையும் என் குடும்பத்தையும் காப்பாத்தியிருக்கு. வசதி வரும்போது விலகிடக்கூடாது. இந்த ஊர் மசானத்திலேதான் என் கட்டை வேகணும்... அப்பா, ஏம்ப்பா முகம் என்னமோ மாதிரி இருக்கு? இன்னிக்கு லெக்ஷ்மணய்யன் அடிச்சுட்டாண்டா. மைசூர்ப்பா முறுகிடுத்தாம். அதெல்லாம் நம்ம கையிலேயா இருக்கு. தெனமும் அதே கடலைமாவுதான். அதே ஜீனிதான். அதே நெய்தான். ஏன், அதே முத்துராமலிங்கமய்யன்தான். சாப்பிடறவனுக்கு பாக்கியம் இருக்கணுமே. அப்பொத்தான் பதார்த்தம் அமையும். லெக்ஷ்மணனுக்குப் புரியுமா இதெல்லாம்? அவனுக்குக் கல்லாவில் உக்காந்து துட்டை எண்ணத்தான் தெரியும். கன்னத்திலே அறையறானே. படாத இடத்திலே பட்டு சவ்வு கிளிஞ்சுருத்துன்னா அப்புறம் ஸங்கீதம் கேக்க முடியுமா... இல்லே, ஒங்கம்மா திட்டறதைத்தான் கேட்டுச் சிரிக்க முடியுமா...? லெக்ஷ்மணய்யனாப் போயிட்டான். ராமய்யன்னு பேர் இருந்தாப் பாடவாவது செய்யலாம்... ராமா, இப்படிச் செய்யலாமா...? இது ராவண ஸம்ஹாரம்தானா... அப்பா, ராம நாடகக் கீர்த்தனையாப்பா... அட ராட்சஸா, எப்படிறா கண்டுபிடிச்சே...? அருணாசலக் கவிராயர்தானேப்பா... ஆமா, ஸஹானா ராகம்... கேட்டா அழுகையா வருதுப்பா. இதைச் சொல்லறயே ஆலாஸ்யம், மாஞ்சின்னு ஒரு ராகம் இருக்கு. அபூர்வமான ராகம். வருகலாமோ அய்யா... நான் அங்கு வருகலாமோ அய்யா. கோபால கிருஷ்ண பாரதி பாட்டு. நந்தன் சரித்திரம்... அப்பிடி ஒரு துக்கம் பொங்கும். ஆனாப் பாட்டுன்னு சொன்னா, பாட்டோட அழகுன்னு சொன்னா, ஊத்துக்காடுதான். குழலூதிடும் பொழுது ஆடிடுங் குழைகள் போலவே - மனது வேதனை மிகவொடு அலைபாயுதே... கண்ணா... என் மனம் அலைபாயுதே.... எனக்குப் பாட வல்லேன்னு சிரிக்கறயா. எம் பாட்டைக் கேட்டுக் குழந்தைகள் எப்பிடித் தூங்கும் தெரியுமா. ங்கொம்மாவைக் கேளு சொல்வா. விண்ணுளே எழுந்த மேகம் மார்பினூலின் மின்னொடிம் மண்ணுளே இருந்தபோது வந்து போன மைந்தனார்...பாட்டின் வேகத்துக்கீடாகக் குழந்தையின் முதுகில் ஓங்கி ஓங்கித் தட்டுகிறார் அப்பா. பாத்தியா, கொழந்தை தூங்கியாச்சு. ஆமா, ஒங்க பாட்டுக்காகவா தூங்கித்து அது. முதுகுல இப்படி அறைஞ்சா... கிறங்கிடுத்து... அடி போடி கழுதை முண்டே... அருமை தெரியாதவ... அப்பா, இது என்ன பாட்டுப்பா... கம்ப ராமாயணம்டா கண்ணா. அப்பா, வில்லி பாரதம், கம்பராமாயணம்னு பேர் வச்சிருக்காளே.

நளவெண்பாலே மட்டும் எழுதினவா பேரு இல்லையே ஏம்ப்பா... அட்றா சக்கைன்னானாம். எனக்கே தோணலையே இது. விசாலம், பாத்தியா ஒம் பிள்ளையை... ஒங்க பிள்ளைன்னா அவன். வெரை ஒண்ணு போட்டாச் சுரை ஒண்ணா முளைக்கும்?... விசாலம் அழாதேடி. எட்டெட்டிலே சாகணும்னு அடிக்கடி சொல்வேனா இல்லியா. அறுபத்து மூணு ஆரம்பிக்கிறது. இந்தக் கார்த்திகைச் சதயம் வந்தா. சரிதான், ஒரு வருஷம் முன்னப் பின்னத்தான் இருக்கும். சரி, சரி அழாதே. இந்தப் பிறவியிலே கஷ்டம் மட்டும் அனுபவிக்கணும்னு தீர்ப்பாயிருக்கு போல. விடு. போன ஜென்மத்திலே ராஜா வீட்டிலே பிறந்திருந்தேனோ என்னமோ. அப்பொக்கூட நீதான் விசாலம் என் ராணியாய் இருந்திருப்பே. அதுனாலதான் இந்த ஜென்மத்திலே என்னோட வந்து லோல்படறே... ஏன்னா இப்படியெல்லாம் சொல்றேள்... அப்பா, நான் போன ஜென்மத்திலே யாரா இருந்திருப்பேன்ப்பா... நீயா, நீ போன ஜென்மத்திலேயும் சிங்கக்குட்டி. இந்த ஜென்மத்திலேயும் சிங்கக்குட்டி. எங்கே சிங்கக் குட்டி அப்பா கன்னத்திலே ஒரு முத்தம் குடுக்குமாம்... பாத்து... பாத்து... சிங்கராஜா மீசை ரொம்பக் குத்தறதே... பிடரிமயிர் வேறெ ரொம்ப வளந்தாச்சு. அம்பட்டனை வரச் சொல்லணும்... பாத்தியா விசாலம், இந்தச் சிரிப்பைப் பார்க்க முடியாதேங்கிற ஏக்கம்தான்... நான் சண்டாளன். சிரிக்கிற முகத்தைக் கலங்கவிடுவேனோ... அப்பா, ஏதானும் கதை சொல்லுங்கோப்பா... அந்த வில்லினை முறித்த வில்லி தனதாலயம் புகுத அச்சுதன் - சந்த வில்லு மறன்வில்லு மொப்பதொரு தாம வில்லினை முறிப்பதே - முந்தை வில்லியரில் எண்ணும் வில்லியினி விஜயன் வந்தமரில் மூழ்கினால் - எந்த வில்லி எதிர் நிற்கும் வில்லியினி என்று காவலர் இரங்கினார். விதுரன் ராஜா கெடையாதே. சாமான்யன்தானே. ஒரு சின்னக் குடிசைலேதான் வசிக்கிறான். ஆச்சு, கிருஷ்ண பரமாத்மா வந்துட்டார். ஒக்காரச் சொல்ல நாற்காலி கெடையாது. நம்மளைப் பார்க்க வர்றவா தரையிலே தானே உக்கார்றா. அதுமாதிரித்தான். விதுரனைப் பார்க்க வந்தாலும் தரையிலேதான் உக்காந்தாகணும். விதுரா, இன்னிக்கு ஒன் வீட்டுலேதான் சாப்பாடு எனக்கு... ஸ்வாமீ, நான் ஏழையாச்சுதே, வீட்டுலே கூழ்தானே இருக்கு... பரமாத்மா பஞ்ச பட்ச பரமான்னத்தோட சாப்பிடறவர். துவாரகைக்கி ராஜா இல்லியா அவர், அவர் சொல்றார். விதுரா, உன் கையால கூழ் குடிக்க ஆசையா இருக்கப்பா... விதுரன் வீட்ல எல்லாரும் கும்பாலேதான் சாப்பிடுவா. கும்பாங்கிறது ஆழமாக் குழிவுள்ள பாத்திரம். பெரிய கிண்ணம் மாதிரி. பகவானுக்குக் கும்பால கூழ் குடுக்கலாமா? அதுவும் எச்சில் கும்பாலே... ஸ்வாமீ இருங்கோ. வாழை இலை கொண்டு வரேன்... இலை வந்தாச்சு. கூழை இலையிலே

ஊத்தறான். கூழ் ஒரு பக்கம் ஓடறது. பகவான் இடது கையாலே இலை நுனியைத் தூக்கிப்பிடிக்கிறார். இன்னொரு பக்கம் ஓடறது. வலதுகையாலே இலையை உயர்த்திப் பிடிக்கிறார். மூணாவது பக்கம் ஓடறது. பகவான் என்ன செய்ஞ்சார்ங்கறே? விலாவுலே இன்னொரு கையை உண்டாக்கிப் பிடிக்கிறார். விதுரன் பிரமிச்சுப் பார்த்துண்டிருக்கான். அடுத்த கையையும் உண்டாக்கி நாலாவது பக்கத்தையும் பிடிச்சுக்கறார்.... இப்பொ வாழை இலை கும்பாவா மாறிடுத்து. நாலு கையாலேயும் இலையை அப்படியே தூக்கறார். தலையைக் குனிஞ்சு வாழை இலை விளிம்பிலே வாயை... இதோ... இப்பிடி... வைச்சு உறிஞ்சறார். ஒரு வாயை முழுங்கிட்டு, நிமிர்ந்து விதுரனைப் பார்க்கிறார். அப்பா, விதுரா, ஒன்னோட அன்புக்கு நான் தலை வணங்கினேண்டாங்கறார். விதுரனுக்குக் கண்லே ஆனந்த பாஷ்பம் பொங்கறது. பாரதத்திலே ரொம்பச் சில இடங்களிலேதான் பகவான் விஸ்வரூபம் காட்டறார். அதுலே இது ஒண்ணு. துவாரகைக்குத் திரும்பிப் போனதும் ருக்மணிகிட்டே சொன்னாராம். ருக்கூ, இது வரைக்கும் எட்டு அவதாரங்கள் எடுத்தாச்சு, இத்தனையிலேயும் கெடைக்காத ருசி இன்னிக்கி விதுரன் வீட்டுக் கூழ்லே கெடைச்சது... அதுக்கு அந்தம்மா சொன்னாளாம்... ஒங்களுக்கு வேறெ வேலை கெடையாது. சபரி வீட்டுல பழம் சாப்பிட்ட அன்னிக்கும் இப்படித்தான் சொன்னேள்... அது பழம்னாடி. அவளா சமைச்சா... ன்னு சமாளிச்சாராம் பகவான்.

...ஹாலாஸ்யம். அய்யா.... எழுந்திரு. வெடிஞ்சாச்சு பாத்தியா. வா, புது உமி கருக்கி வெச்சிருக்கேன். பல்லைத் தேய் கொழந்தே....

## அத்தியாயம். 6

எந்நேரமும் ஏதாவது ஒரு பொழுதில்தான் இருந்தாக வேண்டியிருக்கிறது. உண்மையில் நேரம் என்பதும், நேர வித்தியாசம் என்பதும் இருக்கிறதா. இல்லை, நான்தான் அப்படிப் பார்க்கிறேனா. அயர்ந்து தூங்கும்போது பகல் மாறி இரவு வருவது தெரியவா செய்கிறது. தூங்கும்போதும் உடம்பில் எல்லா வேலைகளும் நடந்துகொண்டுதானே இருக்கிறது.

எல்லாவற்றையும் நடத்தி வைப்பது மூளை என்றால், மூளையை நடத்தி வைப்பது எது? மூளை தன்னைத்தானே நடத்திக் கொள்ளும் என்றால், அந்த விதமாக மூளை உருவாகக் காரணம் எது?

வாடா, சொகமாயிருக்கியா?

அவன் சந்தோஷமாகச் சிரித்தான். ஆரோக்கியமான முகம். வெள்ளைப் பற்கள் தெரியச் சிரிக்கும்போது ஈறுகள் முழுக்கத் தெரியும்.

தங்கச்சி எப்பிடி இருக்கு?

என்றவாறு உள்ளே வந்தான். கைகளைச் சேலையில் துடைத்தபடியே அடுப்பங்கரையிலிருந்து வெளியில் வந்த சிகப்பி,

வாங்கண்ணெ...

என்றாள்.

வாப்பா எப்படிடா இருக்காக?

நல்லா இருக்காஹ. அவுஹளுக்கென்ன, வயசுதான் வியாதி இனிமே. அப்பப்ப சொகமில்லாமப் போயிருது. கபர்ஸ்தானுக்குப் போக டிக்கெட் வாங்குறதுக்கு வரிசையிலே நிக்கிறேண்டா செய்யதுன்னு சொல்லிச் சிரிக்கிறாஹ.

தானும் சிரித்தான். என்ன மறுமொழி சொல்வது என்று தெரியாமல் மையமாகச் சிரித்து வைத்தார் பழனியப்பன். சிகப்பி சொன்னாள்.

ஏண்ணே இப்படியெல்லாஞ் சொல்றாரு. அதெல்லாம் நம்ம கையிலேயா இருக்கு. அவருதான் கூறு இல்லாமெப் பேசுறாருன்னா நீங்களும் ஒங்க வாயாலே சொல்றீஹளே?

செய்யது அவளைப் பார்த்துப் பிரியமாய்ச் சிரித்தான். இதுமாதிரி ஒரு உரையாடலை நிகழ்த்தத் தெரியவில்லையே நமக்கு என்று ஏக்கமாக இருந்தது பழனியப்பனுக்கு. செய்யதும் சிகப்பியும் ஒரு நாள் முழுவதும் கூட இதுபோலப் பேசிக்கொண்டிருக்கக் கூடியவர்கள். தனது ஒவ்வொரு வார்த்தையையும் தானே வேடிக்கை பார்த்தபடி, மறுபார்வை செலுத்தியபடி பேசும் பழனியப்பனுக்கு சாத்தியமில்லை.

செகப்பீ, காப்பி குடேன் ரெண்டு பேருக்கும்.

இந்தா கொண்டாரேன்.

சிகப்பி விசையுடன் திரும்பி உள்ளே போவதைப் பார்த்துக் கொண்டிருந்தார்கள் இருவரும்.

**ஆ**ளுக்கொரு நாற்காலியைத் தூக்கிக்கொண்டு மொட்டை மாடிக்குப் போனார்கள். இரவு குளிர்ந்துவிட்டது. நிலா வெளிச்சத்தில் வெளிறிய இருளில் நுழைந்து அமர்ந்தார்கள். செய்யது சிகரெட்டைப் பற்றவைத்துக்கொண்டான்.

கொஞ்ச நேரம் எதுவும் பேசாமல் இருந்தார்கள். நீளம் தாண்டுபவன் கொஞ்ச தூரம் பின்னால் சென்று ஓடிவந்து தாண்டுகிற மாதிரி என்று நினைத்துக்கொண்டார் பழனியப்பன். பின்னிரவு வரை நீளவிருக்கும் தொடர் பேச்சுக்கான முன் ஆசுவாசம். அப்படி விழித்திருந்து பேசாது போனால், அந்த முறை அவன் வந்துவிட்டுப் போன மாதிரியே இருக்காது.

சிகப்பி மாடியேறி வந்தாள். இரண்டு கைகளிலும் தட்டுகள். கருப்பட்டிக் காப்பியின் மணம் மனதை நிறைத்தது.

அந்தப் பிளேட்டுல என்ன?

முந்திரிக் கொத்து. அண்ணன் வாராஹன்னு சாயங்காலம் செஞ்சு வச்சேன். அண்ணே, இருந்து சாப்புட்டுட்டுப் போகலாம். என்ன?

சரிம்மா.

கொலுசு சப்தமிட இறங்கிப் போனாள்.

**ப**ளனி, தங்கச்சி வளக்கத்தை விட உற்சாகமா இருக்கே.

ஆமா, கரட்டுப்பட்டி போய்ட்டு வந்தோமில்லே. அதுலேயிருந்தே ஒரே குதியாட்டம்தான். இன்னம் ஒரே வருசத்திலே அம்மா ஆயிரப் போறால்லே. அதுதான் துள்ளாட்டம்.

ஏண்டா, கேலியாச் சொல்றே.

பின்னே என்னடா, எங்க ரெண்டு பேர் பரம்பரையிலேயும் குழந்தை பிறக்காத முதல் தம்பதி நாங்கதான். யார் யாரையோ பாக்குறோம். கேக்குறோம். எல்லாரும்தான் சொல்றாங்க. இந்தா இன்னும் ஒருவருசம், ரெண்டு வருசம்னு கெடு வச்சிக்கிட்டேதான் இருக்காங்க. பதினெட்டு வருசமா நடக்காதது இப்பொத்தான் நடந்துறப் போகுதா? செய்யது, 77 பிப்ரவரி வந்தா எனக்கு நாப்பத்தி மூணு முடியுது. அவளுக்கும் முப்பத்தி யெட்டு நடக்குது. இவரைப் பார்த்துட்டு வந்ததுக்கப்புறம் பதினெட்டு வயசுப் பொண்ணு மாதிரித்தான் நடந்துக்குறா.

முன்னிரவுப் பொழுதுகளில், இச்சையின் புதைமணலில் தான் புதைந்து, பழனியப்பனையும் மூச்சுத் திணறச் சுண்டியிழுத்துப் புதைய வைக்கும் சிகப்பியின் வியர்வைச் சுகந்தம் இப்போது வீசுவதாகத் தோன்றியது பழனியப்பனுக்கு. செய்யதுவின் நாசிக்கும் அந்த மணம் எட்டிவிடுமோ என்ற நினைப்பில் கூசினார்.

சரிதான். அது நம்புது. நடந்துரும்னு நினைக்குது. சந்தோசமா இருக்கு. நீ நம்பலையா?

அதானடா பிரச்னையே. எதையுமே நம்ப முடியலையே. சாய்ஞ்சிக்க எதுவுமே இல்லடா செய்யது. சில சமயம் சிகப்பியைப் பார்த்தாப் பொறாமையா இருக்கு. புலனுக்குத் தட்டுப்படாத எதையோ நம்பி எவ்வளவு நிம்மதியாயிடுறா. எனக்குத்தாண்டா எதுவுமேயில்லே.

என்னடா உளர்றே. நாங்கள்லாம் இல்லியா.

யாருமே இல்லாமெ, நான் மட்டும் இருக்கும்போது எனக்கு ஒரு பிடிப்பு வேணுமில்லையா. சிகப்பிக்குப் பாரு, திருநீறு பூசினாத் தலைவலி விட்டுருது. எனக்கு எதுவுமே இல்லாமெப் போச்சுடா.

பழனியப்பனின் அரற்றலை முழுக்கப் பகிர்ந்துகொள்பவன் போல அமைதியாக இருந்தான் செய்யது.

மெலிதான காற்று ஊதியது. மொட்டை மாடியை ஒட்டியிருந்த மரக்கிளையின் இலைகள் இசைவாக அசைந்தன. தொலைவில் எங்கோ ஒரு நாய் குரைக்கும் சப்தம் மாடிவரை எட்டி, இருவருக்கும் இடையில்

நிலவிய மௌனத்தின் அடர்த்தியைக் கூட்டியது. அண்ணாந்து நிலாவை வெறித்தார் பழனியப்பன். திடுமென ஞாபகம் வந்தவர் மாதிரிக் கேட்டார்:

> ஏண்டா செய்யது, எனக்கு மட்டும் ஏண்டா இப்பிடியெல்லாம் நடக்குது. தகப்பன் காணாமப் போறான். தேடிப் போனாத் திரும்ப வரமாட்டேங்குறான். என் பேருக்கு நிலம் எளுதி வைக்கிறேன்னு சொல்றவன் முந்தின நாளே செத்துப் போறான். பொண்டாட்டியோட சின்னம்மா செய்வினை வைக்கிறா. என்ன கோளாறுன்னு தெரியலையே.

செய்யது எதுவும் சொல்லவில்லை.

> சரி, இவ்வளவுதான் நடக்குதே, வந்தவளாவது மனச் சிக்கல் இல்லாதவளா இருந்திருக்கக் கூடாதா? பாதி நாள் கொண்டாட்டமாத் திரியறா, மீதி நாள் மூஞ்சியைத் தூக்கிடுறா.

> அது என்னடா செய்யும்? ஆள்தான் வளந்திருச்சே தவிர, அதுவே கொழந்தைதாண்டா. பிள்ளை இல்லேங்குறது பொம்பளையை ரொம்பப் பாதிக்கும்டா. நம்ம நாட்லே, யோசிச்சுப் பாரு. எல்லாமே பொம்பளையை மையமா வெச்சுத்தான் நடக்குது.

> என்னடா பிள்ளை பிள்ளைன்னு அவளை மாதிரியே நீயும் பொலம்புறே.

தன்னையும் மீறிக் குரலில் வழிந்துவிட்ட குரோதம்பற்றி மெல்லிய வெட்கம் படர்ந்தது மனதில். செய்யது நிதானமாக இன்னொரு சிகரெட்டை எடுத்தான். அதன் புகையிலை முனையை இடதுகைக் கட்டைவிரல் நகத்தில் லயமாகத் தட்ட ஆரம்பித்தான். கீழே சிகப்பியின் கைதவறிப் பாத்திரம் ஏதோ உருள்கிறது. ரீங்கரித்து ஓய்கிறது சப்தம். பழனியப்பன் இறங்கிய குரலில் சொன்னார்.

> செய்யது, நாம பாக்குற உலகம் இருக்கே, இது வெறும் description தான். ரெண்டு வகையான விவரணைகள் இருக்கு. ஒண்ணு, பொது விவரணைகள். அந்தப் பட்டியல்லேதான் பொம்பளையைப் பாத்தா, பொம்பளைன்னும் ஒட்டகச் சிவிங்கியைப் பாத்தா ஒட்டகச் சிவிங்கீன்னும் தெரியுது. அந்தப் பட்டியல்லேதான் பாறை பாறையாவும், சமுத்திரம் சமுத்திரமாவும் இருக்கு. பாஷைக்கு பாஷை வார்த்தைகள்தான் மாறுதேயொழிய, மனுசனாப் பொறந்த எல்லாருக்கும் இதெல்லாம் இப்படித்தான் தெரியுது. அவம் பொறந்தது எந்த ஊருலே எந்த நாட்டுலே எந்த

சமூகத்திலேயானாலும் சரி... இன்னொண்ணு என்னன்னா, விசேஷ விவரணைகள். இதுலேதான் பொம்பளை அம்மாவாத் தெரியறா. ஒரு ஆம்பிளை என்னோட தம்பின்னும், இன்னொரு ஆம்பளை என்னோட வீட்டுலே திருட வந்தவன்னும் தெரியுது.

நீ என்ன சொல்ல வர்றே?

இல்லடா. கொழந்தைங்கிறதுக்கும் என்னோட கொழந்தைங்கிறதுக்கும் இருக்கிற வித்தியாசம், முழுக்க முழுக்க சமூக மனசு சார்ந்தது. என்னோட உடம்புலேர்ந்து உருவான கொழந்தை வேணும்னு நினைக்கிறது அந்த விசேஷ விவரணைப் பட்டியலோட டிமாண்ட்தான். உலகம் என்ன கொழந்தைகளே இல்லாததா ஆயிருச்சா? எனக்கு எந்தக் கொழந்தையைப் பார்த்தாலும் மனசு குழைஞ்சிருது. சிகப்பிக்கித் தன்னோட ரெண்டாவது பட்டியல் மேல அத்தனை வெறி. அதைத்தான் சொல்ல வந்தேன்.

செய்யது சிகரெட்டைத் தட்டுவதை நிறுத்தினான். காற்றுக்குத் தடையாகக் கைகளால் கூடமைத்து, பற்ற வைத்துக்கொண்டான். முதல் புகை வெளியேறியதும், பழனியப்பன் தொண்டையைச் செருமினார். செய்யது சொன்னான்:

பளனி, எங்கூட ரெங்க ராமானுஜம்னு ஒருத்தர் வேலை பாக்குறாரு. அவரு ஒய்ஃபுக்குப் போனவாரம் அபார்ஷன் ஆயிருச்சு. இது மூணாவது தடவை. அந்தம்மா ஆஸ்பத்திரியிலே இருக்கும்போது நானும் ஜன்னத்தும் பாத்துட்டுவரப் போனோம். இந்த ஜன்னத்தைப் பாரு. அந்தம்மாவோட நெருங்கிய பளக்கம் கூடக் கெடையாது. அந்த அறைக்குள்ளே போயி அந்தம்மாவைப் பார்த்ததும், அள ஆரம்பிச்சுருச்சு. நமக்கு அதுமாதிரி அளுகை வருமா? இது கெடக்கட்டும். ராமானுஜம் எங்கூட வெளியிலே வந்தாரு. அவரும் சிகரெட் குடிப்பாருன்னு வச்சிக்கயேன். எப்பவாச்சும் அபூர்வமாக் குடிப்பாரு. அன்னைக்கி சிகரெட் குடிச்சுக்கிட்டே சொல்றாரு.

Mr. Seyyadhu, the doctor showed me the foetus. It was a small piece of flesh, just an inch or two long. When I saw that, I had a strange feeling. Why so much fuss about a small piece of flesh. I don't think people should be crazy this much, with so full of sentiments and absurd emotions... நான் பதில் ஒண்ணும் சொல்லலே.

நான் என்ன அந்த அளவு குரூரமாவாடா பேசுறேன்.

பாத்தியா, அவரு பேசுறத குரூரம்ங்குறே. நீ பேசுறதைத் தங்கச்சி என்ன சொல்லும்.

அப்படிச் சொல்ல வர்றியோ.

பின்னே? நான் இதை வேற மாதிரிப் பாக்குறேன். பொதுவா, உணர்ச்சி உச்சமா முட்டும்போது அதை அறிவாலே சமனப்படுத்திக்கிறதும்; அறிவோட பார்வை எல்லாத்தையும் அபத்தம், அர்த்தமில்லாததுன்னு காட்ட ஆரமிச்சதும் உணர்ச்சியாலே அதை மூடப் பாக்குறதும் எல்லாரும் செய்யுறதுதான். நீ புஸ்தகம் படிக்கக் கூடியவனா இருக்குறதாலே இந்த மாதிரிப் பேசுறே. இதே, அதிகம் படிக்காதவன் என்ன சொல்வான், என்னங்க செய்யுறது. விதி. அம்புட்டுத்தான்னு சொல்லிச் சமனப்படுத்திக்குவான்.

பழனியப்பனுக்கு அடிவயிறு கனத்தது. வியர்வை பொங்கியது.

இரு, இந்தா வந்துர்றேன்.

என்று சொல்லி விட்டு, இறங்கிப் போனார்.

கூடத்தைத் தாண்டும்போது, அடுக்களையில் நின்றிருக்கும் சிகப்பியின் பின்புறம் பார்வையில் விழுந்தது. ஏதோ பாட்டை முனகிக்கொண்டே சமைக்கிறாள். ஒருவிதத்தில் அவளுடைய மனோபாவம்தான் சரி. சிரிப்பு வந்தால், குலுங்கிக் குலுங்கிச் சிரிப்பது. அழுகை வந்தால் குமுறிக் குமுறி அழுதுவிடுவது, கோபம் வந்தால் காச்சு மூச்சென்று கத்துவது. அப்பப்போ தீர்த்துக்கொண்டுவிடுகிறாள். யோசித்து யோசித்து விதவிதமாகக் காரணங்கள் தேடி மறுகுவது கிடையாது.

சிறுநீர் பிரியும்போது உடம்பு தன்னிச்சையாக ஒருமுறை உதறிக் கொண்டது. வயிற்றின் கனம் இறங்கியதில், மனமும் லேசாகி விட்ட மாதிரித் தோன்றியது.

சாப்பாடு ரெடிங்க. அண்ணனையும் அழைச்சுக்கிட்டுக் கீழே வாங்க.

என்ற சிகப்பியின் குரலைக் காதில் வாங்கியபடி படியேறினார்.

லேசாகக் கூடியிருந்த நிலா வெளிச்சத்தில் சாம்பல் பொம்மை போலச் சமைந்திருந்தான் செய்யது. அடுத்த சிகரெட்டைப் பற்ற வைத்திருந்தான். பழனியப்பன் வந்ததைக் கவனிக்காதது போலக்

கண்களை மூடி நாற்காலியில் உறைந்திருந்தான்.

இவ்வளவு நாள் கழித்துத் தேடி வந்தவனை எப்படி வதைக்கிறேன். ஏன் என்னைச் சுற்றி மட்டுமே யோசித்துக்கொண்டு போகிறேன். நான்தான் உலகத்தின் மையம் என்பதுபோல அல்லவா இருக்கிறது? அப்படித்தானா? இந்த இருட்டும், நிலாவெளிச்சமும், சற்றைக்கொருதரம் இதமாக வருடிவிட்டு நகரும் காற்றும், தென்னோலைகள் உரசும் ஓசையும், கீழேயிருந்து வந்து நாசியை நிறைக்கும் மசால் மணமும் எல்லாமே என்னிலிருந்துதான் கிளைக்கிறதா?

ஒருவேளை, சிகப்பி போல நிஜமாகவே துயரத்தில் மூழ்கி விட்டால், நம்பிக்கை கொள்வதற்கும் ஏதாவது கிடைத்துவிடுமோ? அப்படியானால் இந்தச் சூழலில் நான் யார்? வெறும் பார்வையாளனா? எல்லாவற்றிலும் பங்குகொள்வதுபோலப் பாவனை செய்தவாறே விலகி நின்று வேடிக்கை பார்க்கிறவன் தானா?

செய்யது தொண்டையைக் கரகரத்துக்கொண்டான்.

> பளனி, நடுவுலே ஏதோ சொன்னியே, என்னது? எனக்கு மட்டும் ஏன் இப்படி நடக்குது...
>
> ஆமா, சொன்னேன்.
>
> தங்கச்சியைக் கட்டிக்கிட்டது சம்பந்தமா ஒனக்கு ஒரு சந்தோஷமுமே இல்லாமப் போச்சா?
>
> அட, இவன் ஒருத்தன். ஒந் தங்கச்சியை நான் ஒரு குத்தமும் சொல்லலேடா. அவ பொலம்புறதைப் பத்திச் சொன்னேன்.
>
> அதுக்கில்லே. எனக்கு மட்டும் ஏன் நடக்குதுன்னு காரணம் தேடிக் கிளம்புறியே. அதைப் பத்தித்தான் யோசிச்சுக்கிட்டிருந்தேன்...
>
> சொல்லு.
>
> நாலு வகைக் காரணம் இருக்கிறதா ஏதோ ஒரு புஸ்தகத்திலே படிச்ச ஞாபகம். யாரோ ஒரு கிரேக்க ஞானி சொன்னதுதான். அவன் சொல்றான். ஒவ்வொரு நிகழ்வுக்கும் நாலு வகையான காரணம் இருக்காம். இப்போ, மழை பெய்யுதுன்னு வச்சுக்கோ. அதுக்கு முதல்ல பொருண்மைக் காரணம்னு ஒண்ணு இருக்கு. அதாவது, காற்று குளிர்ந்த சமயத்தில் மேகம் அந்த இடத்தில் இருக்குறது. ரெண்டாவது, திறன் காரணம். மேகத்திடம் ஈரப்பதம் கொள்ளக்கூடிய தன்மை இருக்குறது. மூணாவது, ரூபக் காரணம். அதாவது தண்ணீரின் இயல்பு தரையை நோக்கிப் பாயுறதுங்கறது.

மூணு காரணமுமே யாரும் கண்டுபிடிச்சிறக் கூடியதுதான். கொஞ்சம் தீர்க்கமா யோசிச்சாப் போதும். இந்த நாலாவது காரணம் இருக்கே. இறுதிக் காரணம்னு பேரு அதுக்கு. அதுதான் அந்த ஞானியோட தரிசனம், அவன் என்ன சொல்றான் தெரியுமா, மழை பெய்யுறதுக்கு இறுதியான காரணம், அப்பத்தானே ஆடு மாடு தழைகள் தாவரங்கள் எல்லாம் உயிர்வாழும்? அதுக்காகத்தான் மழை பெய்யுதுங்குறான்.

செய்யதுவின் குரல் மிகவும் கனிந்திருந்தது. தலையை உதறிக் கொண்டான்.

அட்டகாசமா இருக்குடா.

இப்ப யோசிச்சுப் பாரு, ஒன்னைச் சுத்திப் பிரச்னைகள் ஊறுதுன்னா, நீ ஒருத்தன்தான் அதுகளையெல்லாம் பரிவோட கவனிச்சுப்பேங்குறதுனாலதான்... மணி என்ன ஒம்பது ஒம்பதரை இருக்குமா? வா, கீளே போயிச் சாப்பிடலாம். காலைலே வெள்ளென பஸ்ஸேறணும்.

எலே, நீ யென்ன, ராத்திரித் தங்கலையா?

இல்லடா, நாளைக்கி எட்டு மணிக்கெல்லாம் மதுரையில இருந்தாகணும்.

சாப்பிட்டு முடித்துப் புறப்படுமுன் வாசலில் நின்று ஒரு சிகரெட் புகைத்தான். திடீரென்று ஞாபகம் வந்தவன் போலக் கேட்டான்.

பளனி, ஒங்க லைப்ரரியிலே Confessions of An English Dreamerங்கிற புஸ்தகம் இருந்தாப் பாரு. அடுத்த தபா வரும்போது வாங்கிக்கிறேன். ரெங்க ராமானுஜம் சொன்னாரு. சின்ன வயசிலே படிச்சிருக்காராம். அவசியம் வாசிக்கவேண்டிய புஸ்தகம்ன்னாரு.

சிகரெட்டைக் கீழே போட்டுக் காலால் அழுத்தித் தேய்த்தான்.

வரட்டுமா...? தங்கச்சி, வரேம்மா.

ஆகட்டுண்ணே, போய்த்தாங்க.

## அத்தியாயம். 7

கப்பலின் மேற்தட்டில் நின்று பார்க்கும்போது நீல நிற உட்புறம் கொண்ட பந்துக்குள் நிற்பதாகத் தோன்றுகிறது. அலைகள் அதிகமற்று சாவகாசமாகக் கிடக்கிறது சமுத்திரம். நான் இருப்பது மரங்களைச் சார்ந்து அல்ல என்று அறிவித்துத் தன்னிச்சையாகக் கடற்பரப்பில் மிதக்கும் காற்று, அவ்வப்போது வந்து என் முகத்தை வருடுகிறது. கடந்த ஆறுமாதங்களின் ஞாபகங்கள் மலைப் பாதையில் சரிந்த மண்போல என் உணர்வுகளை அழுத்திக் கிடக்கின்றன.

வாசனைகள். இந்தப் பிரதேசத்தின் வாசனைகள். எத்தனை விதமானவை. பாம்புப் பிடாரனின் அழுக்கு வாசனை. அன்றிரவு காமம் தீர்க்க வந்து கண்களைத் திறந்துவிட்டுச் சென்றாளே அந்த ஆர்மீனியப் பெண்ணின் உடலில் எழுந்த பச்சிலை வாசனை. மவுல்வியுடனான அந்தி நடையில் நுகரக்கிடைத்த இளைஞனின் சிதை நாற்றம், மவுல்வியின் ஜவ்வாது வாசனை, அரசவையின் அத்தர் வாசனை, யமுனையின் கரையில் கிளம்பும் பல்வேறு விதமான பூக்களின் வாசனை, என் ஜாகைக்குப் பின்னாலிருந்த குதிரை லாயத்திலிருந்து கிளம்பும் சாண வாசனை...

என் ஞாபகத்தின் வாசனையை நுகர்ந்துகொண்டிருக்கிறேன் என்று தோன்றியது. சிரிப்பு வந்தது.

நான் வந்த நோக்கமென்ன? திரும்பிப் போகும்போது கொண்டு போகிறவற்றின் தன்மையென்ன? விசித்திரம்தான்.

மிளகும் லவங்கமும் வாங்க வந்தவன், மயிற்பீலியும் தந்தமும் புனுகும் ஜவ்வாதும் கொள்முதல் செய்துகொண்டு திரும்புகிறேன். பொருட்களை மட்டும் வாங்கிக்கொண்டு அல்ல. சிந்தனைகள். அடிப்படையான கேள்விகள். நிரந்தரமான கேள்விகள். பதிலைப் பெறுவதற்கு அல்ல, கேள்வியாக எஞ்ச மட்டுமே உருவான கேள்விகள். உயிர்த்துடிப்புள்ள ஒவ்வொரு மனமும் கேட்டுக்கொள்ள வேண்டிய கேள்விகள்...

தவறான இடத்துக்கு வந்து திரும்பிப் போகிறேன். வரவிருக்கும்

நாட்களில் இங்கிலாந்தில், என் இங்கிலாந்தில், நிம்மதியாக நான் இருக்கப் போவதில்லை என்று சொல்கிறது உள்ளுணர்வு.

ஏற்கெனவே என் சகாக்களிடமிருந்து விலகல் நேர்ந்துவிட்டது. என் மனநிலைகளும், அவற்றின் மின்னல்வேக மாற்றங்களும், என் மனத்திற்குள் நானே சொருகிக்கொண்டுவிடுவது போன்ற ஆழ்நிலை உறைதல்களும் சிலசமயம் அவர்களுக்கு வேடிக்கையாக இருக்கிறது. பலசமயங்களில் என்னைப் பற்றிக் கவலையுறுகிறார்கள். பெரும்பாலும் என்னிடம் நெருங்க அஞ்சுகிறார்கள். கடல் கடந்து வந்த உல்லாசப் பயணம் அவர்களுக்கு இனிதே முடிந்தது. நாடு திரும்புகிறார்கள். எனக்கு அப்படியில்லை.

கடல் சூழ்ந்த நிலத்திலிருந்து வந்து, நிலம் விரிந்த தேசத்தில் சுற்றிவிட்டு, என் பூர்விகத்தின் அந்தரங்கமான எதையோ இழக்க விதிக்கப்பட்டவனாகத் திரும்பிக்கொண்டிருக்கிறேன்.

இதோ, அந்த நிலை என்மேல் படர்கிறது. மூச்சுத் திணறுகிற மாதிரி உணர்கிறேன். மனம் தன் அடியாழங்களில் மூழ்கி ஓரிரு அவதானங்களைப் பொறுக்கி மேலே கொணர்கிறது.

கப்பல் நகர்கிறது. நான் மேற்தட்டில் சலனமற்று நிற்கிறேன். நான் எதுவும் செய்யாமலே ஹிந்துஸ்தானம் விலகிச் சென்றது. நான் எதுவும் செய்யாமலே இங்கிலாந்து நெருங்கி வருகிறது. இதைத்தான் அந்த மவுல்வி சொன்னார்:

> ஆன்மா பயணம் செய்யக் கிடைத்த கப்பல்தான் சரீரம்.

என்றார் அவர்.

> உடல் போகும் வரும். ஆன்மா ஏதும் செய்யாமல் தன் அடியாழங்களில் உறைந்திருக்கும்

என்றார்.

இதைத்தான் காசியில் சந்தித்த பண்டாவும் சொன்னான். கங்கையில் கரையோரம் மிதந்து சென்ற அகன்ற இலையில் நடமாடின எறும்பைக் காட்டிச் சொன்னான் அவன்.

> எறும்பு எத்தனை சுவாதீனமாய்த் திரிகிறது. ஆனால், இலையைத் தன் இடம் என்று கோருவதில்லை

என்றான்.

இவர்களின் சங்கீதம், உடைகள், வெப்பநிலை, உணவு, சிந்தனாமுறை எல்லாவற்றிலுமே ஏதோ வித்தியாசமாக, ஆழமாக, அழுத்தமாக இருக்கிறது. அந்தப் பண்டா என்ன சொன்னான்?

> உன்னைத் தவிர வேறு எதையும் நீ ருசிப்பதற்கில்லை.

நியாயம்தான். அப்புறமும் சொன்னான்:

> நீ இருப்பதை உணர்வதற்கு உனக்கு வேறு எதுவும் அவசியமில்லை. நீ இருக்கிறாய் என்ற உணர்வு மட்டுமே போதும். இருப்பது என்பதுதான் அடிப்படையான உணர்வு. எங்கே இருக்கிறோம், எப்போதில் இருக்கிறோம் என்ற விசாரணை மேலோட்டமானதுதான்.

சரி, இதையெல்லாம் தெரிந்துகொண்டு எனக்கென்ன ஆகப் போகிறது? என் ஒயினின் சுவை மாறுமா, தரை தண்ணீராகிவிடுமா, நெருப்பு சுடாமல் இருக்குமா, எதற்கு இதுமாதிரியான ஞானங்கள்?

பண்டா சொல்கிறான்:

> சரியான கேள்வி. மிகச் சரியான கேள்வி. சில கேள்விகளுக்கு பதில் சொன்னால், அபத்தமாக இருக்கும். தவிர, கேள்வியின் அவஸ்தையிலிருந்து மனம் விடுபட்டுவிடும். என்னிடம் கேட்டாயல்லவா, அந்தக் கேள்வியை உன் மனத்துக்குள்ளே உருட்டிக்கொண்டேயிரு.
>
> இல்லை, நீர் சமாளிக்கிறீர். என் கேள்வியின் வீச்சை எதிர்கொள்ள முடியவில்லை உம்மால்.

சீண்டுவதற்காகச் செலுத்தப்பட்ட அம்பு இலக்கைச் சரியாகச் சென்று தாக்கியது. பண்டா சொன்னான்:

> துரையே, உண்ட உணவு செரிப்பதற்கு நீ எதுவும் மெனக்கெடுகிறாயா? அதுவாகத்தானே செரிக்கிறது? இல்லை, உன் முகத்தில் தாடி வளர்வதற்கு நீ விசேஷமாக எதுவும் செய்கிறாயா. தானாக வளரவில்லை? இதுபோன்ற ஞானங்களை மனதில் பதியமிடுவதன் மூலம் நீ தன்னிச்சையான தாவரமாகிவிடுவாய். தன் போக்கில் தானே வளரும் தாவரமாக. அதற்குத்தான் இத்தனை பிரயாசையும். புரிகிறதா?

தன்னிச்சையாய் வளரும் பாதையில் பிரவேசித்துவிட்ட தாவரம் புதிய வேர்களைக் கண்டுபிடித்த சந்தோஷத்தில் காற்றுடன் இசைந்து

ஆடுகிறது. என் ஞாபகத்தில் தவிர தரைக்கும் தண்ணீருக்கும் பேதமில்லைதான். எனக்குத் தண்ணீர், மீனுக்குத் தரை. நான் மனிதன் என்ற ஞாபகமற்றுச் சமுத்திரத்தைப் பார்த்தால், அது சமுத்திரமாகத் தெரியுமா?

சரிதான். ஞாபகத்தின் அடிமைத் தளையிலிருந்து விடுவித்துக் கொண்டால், காற்றில் நடக்கலாம். தரையில் மிதக்கலாம்.

ஐயோ, இந்தக் கணத்தில் இருக்கிறேன் என்ற உணர்வுதான் எத்தனை பேரானந்தமாய் இருக்கிறது. நான் மட்டும் இருக்கவில்லை. நீர் இருக்கிறது, கப்பல் இருக்கிறது. நீர்ப் பரப்பையொட்டி அரைவட்டமாகப் பாய்ந்து மறையும் மீன் இருக்கிறது. ஆகாயம் இருக்கிறது. அதன் இள நீல நிறம் இருக்கிறது. அங்கங்கே பிசிறுகளாய் ஒட்டிக் கிடக்கும் வெண்மேகம் இருக்கிறது.

எல்லாமும் இருக்கிறது. அதனால் நான் இருக்கிறேன். நான் இருக்கிறேன், அதனால் எல்லாமும் இருக்கிறது.

மூச்சுத் திணறுகிறது... மேற்தளத்திலிருந்து படியிறங்கிக் கீழே வருகிறேன். என் வருகையைக் கவனித்த விதமாக ஓடி மறைகிறது ஒரு சுண்டெலி. உயிர்த்தளத்தில் சற்றும் கூடாமல் குறையாமல் என் மறு பிரதியாக இருக்கும் சுண்டெலி.

# அத்தியாயம். 8

உமிக்கரியின் உப்புச்சுவையை நாவில் உணர்ந்தபடி பல்தேய்த்துக்கொண்டிருந்தபோது, டவுன்ஹால் சதுக்கமும் ஆலமரத்தடியும், அந்த நாவிதனின் முகமும், அவனது சாந்தமான குரலும், சிறைக்கதவின் முன் அமர்ந்து பரட்டைத்தலையுடன் சிரித்த சந்தேகக் கேஸின் முகமும், அவனுடைய ஆள்காட்டி விரலில் தொட்டுக் காட்டிய ரத்தப் புள்ளியும் சிதறிய காட்சிகளாய் விட்டுவிட்டுக் கவிழ்ந்தன மனதில். பல் தேய்த்து முடித்தவுடன் ஒரு லோட்டா நிறைய காபி கொடுத்துவிட்டு,

குடிச்சிண்டிரு. ஸ்நானம் பண்ணிட்டு வந்துர்றேன்...

என்று சொல்லிப் போனாள் அம்மா.

அவளிடம் எப்படிச் சொல்வது என்று ஒத்திகை பார்த்துக் கொண்டார் ஹாலாஸ்யம்.

அம்மா, போன வாரம் நடந்ததைச் சொல்றேன் கேளேன்...

ஆமாம், இப்படித்தான் ஆரம்பிக்கவேண்டும். நடந்த வரிசைக்கிரமத்திலேயே சொல்லவேண்டும். முழுக்கக் கேட்டுவிட்டு நான் செய்தது சரி என்று அம்மா சொல்லிவிட்டால் போதும். ஆறுதலாக இருக்கும்.

சனிக்கிழமை இரவு, அவனைத் தள்ளிக்கொண்டு கச்சேரிக்குள் வந்தான் எண்ணூத்தியெட்டு. லத்திக் கம்பால் அவனுடைய முதுகில் உந்திக்கொண்டு வந்தான். உள்ளே வந்ததும், லத்தியைக் கக்கத்தில் இடுக்கிக்கொண்டு விறைப்பாக நின்று ஒரு ஸல்யூட் அடித்தான்.

எஜமான், பூங்காவண்டை நின்னுக்கிட்டிருந்தான். கேட்டா ஒண்ணும் சரியா பதில் சொல்ல மாட்டேங்குறான்.

யாரப்பா நீ.

அவன் சிரித்தான். ஹாலாஸ்யத்துக்குச் சுருசுருவென்று ஏறியது.

ஒழுங்கா பதில் சொல்லு. இந்த ட்ராமாவெல்லாம் வேறெங்கேயாவது வச்சிக்கோ, சொல்லு, யாரு நீ?

டேய் எஜமான் கேக்குறாரில்லே. சொல்லுடா.

எண்ணூத்தியெட்டு லத்தியை ஓங்கினான்.

எண்ணூத்தியெட்டு, நீ சும்மாயிரு. சொல்லப்பா. நீ யாரு. ஒம் பேரென்ன?

என்னத்தேங்க சொல்றது. ஏட்டய்யா இவரு. ஊருக்குள் இவரை ஏகாம்பரம்னு கூப்புடுறாங்க. நீங்களானா, எண்ணூத்தியெட்டுங் குறீங்க. நிலைப்படிக்கி இந்தப் பக்கம் இவரு எண்ணூத்தியெட்டா இருக்காரு. அந்தப் பக்கம் ஏகாம்பரம் ஆயிடறாரு. சர்க்கார் ஏடுகள்லே ஏட்டய்யாவா இருக்காரு. இவரு யாரு?

டேய். அடி வாங்கிச் சாகப் போறே. பூங்காவண்டை எதுக்குடா நின்னே. அதைச் சொல்லு.

எண்ணூத்தியெட்டு... செத்தெச் சும்மாத்தான் இரேன். நீ பேசப்பா. ரொம்பத் தெரிஞ்சவன் மாதிரியில்லே அளக்குறே. மேலே சொல்லு.

நான் சொல்லுறது சொல்லாமலே தெரியவேணும் தொரே. சொல்லித்தான் தெரியணும்னா, சொன்னாலும் தெரியாது... குருடும் குருடும் குருட்டாட்டம் ஆடிக் குழிக்குள் விழுந்தவாறே... தெரியுதா. எங்க பெரியப்பன் பாடி வச்சிருக்கான். ஒங்களுக்கும் பெரியப்பன் அவன்தான். ஆனா, தொரைமாருக்கு இதுக்கெல்லாம் நேரம் ஏது? பரிபாலனம் செய்ய வேணாமா? ஜனங்களைக் காப்பாத்த வேணாமா... யாரும் வந்து போறதுக்குத்தானே பூங்கா அமைச்சிருக்கு. ஒரு கிறுக்கன் அங்கே வந்து நிக்கிறதாலே ஜனங்களோட பாதுகாப்புக்கு என்ன குந்தகம் வந்துடுது. ஞாயத்துக்கு நீங்கதான் சொல்லணும். என்னை ஏன் இங்கே கொண்டாந்தீங்கன்னு. நீங்களானா, என்னைச் சொல்லச் சொல்றீங்க.

எண்ணூத்தியெட்டு பொறுமை இழந்தான்.

எஜமான், மயிலே மயிலேன்னாப் போடாது. ரெண்டு தட்டுத் தட்டினாத்தான் சரிப்படும்.

மயிலோடெ இறகு உனக்கெதுக்கு அப்பனே, அது தன்னோட சம்சாரத்தை மயக்குறதுக்காக வச்சிருக்கு.

எலே, ஒளுங்காப் பேசுடான்னா...

எண்ணூத்தியெட்டு அவனைக் காலால் உதைத்தான். அவன் சமன் குலைந்து தரையில் விழுந்தான். விழுந்த நிலையிலேயே கொஞ்சநேரம் இருந்துவிட்டு, மெல்ல நிமிர்ந்தான்.

அய்யா, நீங்க கேட்டீங்க, கேள்வி ஒங்களுது. நான் சொன்னேன், பதில் என்னுதுதானே. நீங்க கேக்குற பதில் கெடைக்கலேன்னா ஒதைச்சுர்றதா? தொரே, வார்த்தையாலே கேள்விக்கி வார்த்தையாலே பதில். ஒதையாலே கேள்விக்கி...?

ஹாலாஸ்யத்துக்குக் கோபம் தலைக்கேறியது. மேஜையில் கிடந்த லத்தியைச் சடாரென்று எடுத்து அவன் உச்சந்தலையில் ஒரு தட்டுத் தட்ட எண்ணிப் போட்டார். அடி பலமாக விழுந்துவிட்டது. மிக பலமாகவே விழுந்துவிட்டது.

மனம் சடாரென்று கூசிவிட்டது. உத்தேசிக்காத ஒன்றைச் செய்து விட்ட அவமான உணர்ச்சி ஓங்கியது. காரணமேயில்லாமல் ஏன் அவனை அடித்துவிட்டேன்.

அவன் சிரித்தான். தன்னுடைய கையால் அடிபட்ட இடத்தைத் தடவினான். கட்டாயம் புடைத்திருக்கும். என்ன காரியம் செய்துவிட்டேன். இந்த உடுப்புக்குள் புகுந்தவுடன் வேறு ஆள் ஆகிவிடுகிறேனே ஏன்?

ஜனங்களைப் பயமுறுத்தித்தான் நீதியை நிலைநாட்ட முடியுமென்றால் அதில் ஜனங்களால் விரும்பி ஏற்க முடியாத ஏதோ ஒன்று இருப்பதாகத்தானே அர்த்தம்? அப்புறம் என்ன நீதி, பெரிய நீதி. உடுப்புக்குத் தனியாகக் குணாம்சம் ஏதும் இருக்கிறதோ? உடுத்துகிறவனைத் தொற்றுகிறதோ?

தலையைத் தடவின கையை எடுத்து விரல்களைப் பரிசோதித்தான். வலதுகையின் ஆள்காட்டி விரல் நுனியில் ரத்தம் புள்ளியிட் டிருந்தது. ஹாலாஸ்யத்துக்கு உள்ளுக்குள் பதறியது.

தொரே, யாரைக் காப்பாத்துறதுக்காக யாரை அடிக்கிறே. இது சாமான்ய அடியில்லே தொரே. பிட்டுக்காக மண்சுமந்தவனை அடிக்கும்போது, பாண்டியராஜாவுக்குத் தெரியாது. தன்னையே அடிச்சிக்கிறோம்னு.

மெரட்டுறியா?

இல்லே தொரே. சுதந்திரமாப் பேசுறேன். தொரைதானே பேசச்

சொன்னது.

இன்னமும் நீ யாருன்னு சொல்லலே.

சொல்ல முடியாது தொரே. எது சொன்னாலும் தப்பாயிடும். எடத்தைப் பொறுத்து அடையாளம் மாறிக்கிட்டேயிருக்கும். தொரையோட காலத்திலே, இடத்திலே, நான் சந்தேகக் கேஸு. எங்கப்பனுக்கும் ஆயிக்கும் தலைச்சம் புள்ளே. துன்னூறு வாங்க வர்றவனுக்கு, வைத்தியன், மாந்திரீகன். ஊருக்குள்ள திரியறவரை பண்டாரம். காட்டுக்குள்ளே போயிட்டாப் பிரேதம்... தொரெ, தப்பா நினைக்காதே, உன் கச்சேரி பாதுகாப்பான இடம்தானே. காத்துக்கும் மழைக்கும் வெயிலுக்கும் பத்திரமான இடம்தானே. அப்புறம் ஏன் ஜனங்க இங்கே வரப் பயப்படுது? இங்கே சுதந்திரம் இல்லே தொரே... தொரே... ஒன் வயசுலே நான் பல ஊர்த் தண்ணி குடிச்சாச்சு. இருபத்தோரு வருஷத்துக்கு முன்னாலே, புதுச்சேரியிலே ஒரு அய்யர்ப் பையனைப் பார்த்தேன். நல்ல பாட்டுக்காரன். அவன் பாடினான் தொரே. என்று மடியுமெங்கள் அடிமையின் மோகம். அடிமையாய் இருக்கிற திலே ஒரு சுகம் இருக்கு தொரே. அந்த சுகத்தை நீங்கள்லாம் அனுபவிக்கிறீங்க. அடிமையாய் இல்லாமே இருக்கிறதிலே வேற ஒரு சுகம் இருக்கு. அதைத் தேடிப் போறவன் நான்.

எண்ணூத்தியெட்டு தேவையில்லாமல் வாயைத் திறந்தான்.

அடேய். என்ன, பேசிக்கிட்டே போறே.

ஒங்க எஜமான்தானப்பா பேசச் சொன்னாரு.

ஆமா, இவுரு முக்காலமும் உணர்ந்த ஞானி. இவுரு பேசுறதெக் கேக்குறதே பெரிய பாக்யம். இவுரு சொல்றதெல்லாம் பலிக்கும். எந்த ஊருக்காரண்டா நீ?

தொரே. ஏகாம்பரத்தார் மீள முடியாமச் சிக்கிட்டாரு. நீ அப்பிடியில்லே. உன் காதும் மனசும் திறந்திருக்கு. என்னை ஒரு அடி அடிச்சிட்டு என்னமாப் புளுங்கறே. விடு. இன்னும் ஆறு நாளைக்குத்தான் உனக்கு இந்தப் பொருந்தாப் பொழைப்பு. அப்புறம், உனக்கும் எனக்கும் பெரிய வித்தியாசம் இருக்காது.

ஹாலாஸ்யத்துக்குத் தூக்கிவாரிப் போட்டது. எண்ணூத்தியெட்டு ஆவேசமாய் லத்தியை ஓங்கியபடி அவனை நோக்கி நகர்ந்தான்.

துக்கிரிப் பயலே, எஜமானைப் பார்த்தா இம்புட்டுத் துடுக்காப்

பேசறே?

ஹாலாஸ்யம் அரும்பாடுபட்டு அவனைக் கையமர்த்தினார்.

என்னப்பா சொல்லுறே.

இந்த உடுப்பு இன்னும் சரியா ஆறே நாளைக்கித்தான் தொரே. அடுத்த சனிக்கிழமை என்னைப் பத்தி ஒன் தாயார்கிட்டே சொல்லுவே...

யாருடைய அனுமதியையும் எதிர்பார்க்காமல் கச்சேரியை விட்டு இறங்கி நடந்தான். பதற்றமாக அவனைத் தடுக்க முனைந்த எண்ணூத்தியெட்டை ஹாலாஸ்யம் அதட்டி நிறுத்தினார். அவன் போவதைப் பார்க்கும் விருப்பம் மீதூற ஹாலாஸ்யம் கச்சேரி வாசலில் இறங்கி நின்றார். அவன் போய்க்கொண்டிருந்தான்.

வேறு நடமாட்டங்கள் அனைத்தும் கண்களிலிருந்து மறைந்து, அவன் உருவம் மட்டுமே நிரம்பின தெரு அவனோடு நகர்ந்து போனது. இருள் கனத்து அடர்ந்து நகரும் தெருவில் தான் மட்டும் தனியாக நின்றுகொண்டிருப்பதாய் உணர்ந்தார் ஹாலாஸ்யம்.

அப்பிடியேவா சொன்னான்?

ஆமாம்மா. அதுக்கப்புறம் என்னாலே கச்சேரியிலே இருக்க முடியலே. காலாற நடந்துட்டு வருவோம்னு போனேன்.

அப்புறம் என்ன ஆச்சு?

ஹாலாஸ்யம் தொடர்ந்து சொல்லிக்கொண்டு போனார்...

# அத்தியாயம். 9

‘குள்ளச் சித்தர் மடம்’ என்ற பெயர்ப்பலகைக்கு மாலை போட்டிருந்தது. நாலு ஓரங்களிலும் தீற்றப்பட்ட சந்தனம் முழுக்க உலரவில்லை இன்னும். வாயிற்படியேறியதும் இருந்த பிரம்மாண்டமான திண்ணையில் முப்பதுபேர் வரை படுத்துறங்கலாம். கம்பி அழிகளால் தடுக்கப்பட்டிருந்த திண்ணையின் கோடியில் சிறு அறை ஒன்று இருந்தது. உள்ளேயிருந்த பெரியவர்,

வாங்க.

என்றவாறு திண்ணைக்கு வந்தார்.

உக்காருங்க.

இரவு முழுவதும் பயணம் செய்ததில் லேசாக வீங்கிவிட்டிருந்த மேல் பாதங்களைப் பார்த்துக்கொண்டார் ஹாலாஸ்யம்.

எங்கேயிருந்து வர்றீங்க.

மதுரைப் பக்கம்.

நான் பலவேச முதலி. இங்கே காரியக்காரனா இருக்கேன். பிரயாணம் சுகமா இருந்ததா?

அந்நியரிடம் பேசுகிற உணர்வே எழாதபடி பலவேச முதலியின் குரலில் இருந்த வாஞ்சை, ஹாலாஸ்யத்தை நெகிழ வைத்தது. முதலியாருக்கு இரட்டை நாடி சரீரம். நடக்கும்போது மூச்சிறைத்தது. தரை அதிர்ந்தது. கை விரல்களிலும், வலது புருவத்தை ஒட்டியும் வெள்ளை பூத்திருந்தது. இதமான குரலில் கேட்டார் முதலியார்.

என்னா விசயமா வந்திருக்கீங்க?

எம் பேரு ஹாலாஸ்யம். பெரியகுளத்திலேயிருந்து வர்றேன். ஸ்ரீ முத்துச்சாமின்னு ஒரு சந்நிதானம் இருந்தது. போன பட்சத்திலே ஸமாதியாயிருச்சு. பூர்விகத்திலே எனக்கு சிநேகிதமாய் இருந்தது

அது. அந்திம காலத்திலே எங்கிட்டே ஒரு வாக்குக் கேட்டது. ஸமாதியானதுக்கப்புறம், இங்கே வந்து இந்த மடத்திலே நெய் அகல் ஒண்ணு ஏத்தி வைக்கச் சொன்னது; அதுக்காகத்தான்...

ஆஹா. நல்லாச் செய்யலாமே. வாங்க, நம்ம வூட்டுல போயிக் குளிச்சிட்டு வந்துரலாம். வெளக்கேத்தின பெறகு, ஆகாராதிகள் பண்ணலாம். நம்ம வூட்டுலே சாப்பிடலாமில்லே?

தாராளமா.

...**அ**டேயப்பா. அவ்வளவு பெரிய ஆளா அவுரு? சித்து வேலை செய்யிறது ரொம்ப சுலபம் தம்பி. ஒங்களைத் தம்பீன்னு கூப்பிடலாமில்லே. ஒங்களுக்கென்ன, முப்பத்திச் சொச்சம் இருக்குமா? என் வயசிலெ சரி பாதி. சரி, அதெ விடுங்க. உள்ளதை மறைய வைக்கிறதும், மறைஞ்சிருக்கிறதைப் பார்வைக்கிக் கொண்டாறதும் சின்னப் புள்ளெகளெ வேணும்னா மயக்கும். அதெல்லாம் யோக மார்க்கத்திலே போனதுக்கப்புறமும் விடலைத்தனமாவே இருக்குறவுங்க செய்யிறது. உங்க சாமி அப்பிடிக்கொத்தவர் இல்லே போலிருக்கே. நீங்க சொல்ற விஷயங்களை வச்சுப் பார்த்தா பெரிய மகான் போலேல்ல தெரியுது.

இங்கே இந்த மடத்தை ஸ்தாபிச்சிருக்கமே, எங்க குருநாதரும் அப்பிடித்தான். பார்த்தவுடனே தெரிஞ்சுரும். யோகீசுவரன்னு. ஆனா ஒங்க சாமியைப் பார்த்தா கிரகஸ்தனாட்டம் இருப்பாருன்னுல்லே சொல்றீங்க. தம்பி, நம்ம கண்ணுக்கு எல்லாமே பாறையாத்தான் தெரியிது. ஆனா ஒரு பாறைக்குள்ளே அம்மி இருக்கு. இன்னொண்ணுக்குள்ளே பிள்ளையார் இருக்காரு. அந்த வித்தியாசமெல்லாம் ஸ்தபதிக்கித்தானே தெரியும். என்னா, நாஞ் சொல்றது சரிதானே?

எங்க குருநாதர் இங்கே வந்தாரே. அன்னைக்கி மாசி மகம். இங்கே பக்கத்திலே விசேஷமான முருகன் கோயில் ஒண்ணு இருக்கு. பால்குடமும் காவடியுமாக் கொட்டுமுழக்கோட ஜனம் கூட்டம் கூட்டமாப் போகுது. நான் தெருவை வேடிக்கை பார்த்துக்கிட்டு ஒக்காந்திருக்கேன். கொத்துக் கொத்தா ஊர்வலம் போய்க்கிட்டிருக்கு. ஒரு ஊர்வலம் போய் முடிஞ்சு, இன்னொரு ஊர்வலம் வர்றதுக்காகத் தெரு காத்துக்கிட்டிருக்கு.

அந்த இடைவெளியிலே இந்த ஊர்வலம் நொளையுது. குருநாதர் வர்றாரு. கட்டைவிரல் மாதிரிக் குட்டையா இருக்காரு. அவரு இங்க

வந்தப்போ திகம்பரமாத்தான் இருந்தாரு. ரொம்பப் பிரயாசைப்பட்டு ஒரு கோமணம் கட்டிவிட்டோம். அதுக்கே ஆறுமாசம் ஆயிருச்சு.

வர்றாரா? பின்னாடியே ஒரு நூறு நாய்க இருக்கும். தலையையும் வாலையும் ஆட்டிக்கிட்டுக் கூடவே வருதுக. யோசிச்சுப் பாருங்க தம்பீ. நாலஞ்சு நாய்க சேர்ந்தாலே ஒண்ணுக்கொண்ணு எப்பிடி அடிச்சுக்கும். நூத்துக்கு மேலே நாய்க. அமைதியா வருதுக. ஊர்முழுக்கச் சுத்திப்பாத்தாங்க, குருநாதரும் அவுரு கூட்டத்தாரும். பெறகு, இப்பொ மடம் கட்டியிருக்கமே, அங்க வந்து உக்காந்தாரு. அந்த எடமெல்லாம் அப்பொ வெறும் கட்டாந்தரை.

நானும், என் வயசுக்காரங்க சில பேரும் அந்த ஊர்வலம் பின்னாலேயே போயிருக்கோம். அவுருகிட்டெப் போய் மூஞ்சியை நக்கத் துடிக்குதுக ஒவ்வொரு நாயும். சில நாயை நக்க விடுவாரு. சிலதை மெல்ல வெலக்கி விடுவாரு. சிலதைச் செல்லமா ஒரு போடு போடுவாரு. வாலை ஆட்டித் தீரலே நாய்களுக்கு. தம்பி, அதைப் பார்க்கும்போது என்ன தெரியுமா தோணுச்சு.

மகாபாரதத்திலே காந்தாரியம்மாளுக்கு நூறு பிள்ளைகள்னு வருமில்லே. நூறும் ஒரு பெரசவத்திலே பொறந்ததுதானாமில்லே. அத்தனை கொழந்தைகளையும் ஒரே சமயத்திலே அந்தம்மா கொஞ்சினா எப்பபடியிருக்கும். அப்பிடி இருந்துச்சு.

அந்த நாய்கள்லே ஒண்ணா மாறி, அவரு கிட்டேப் போயிறணும்னு தோணுச்சு. தம்பி, எங்க வம்முசத்திலே தலைமுறைக்கொருத்தர் பிரம்மச்சாரியா இருந்துருவாங்க. எங்க முத்தாத்தாவோட அப்பா பிரம்மேந்திரரோட சஞ்சாரம் பண்ணப் போயிட்டாரு. பிரம்மேந்திரர் தெரியுமில்லே, சதாசிவப்பிரம்மேந்திரர். பெரிய அவதூதர் அவரு. கொடுமுடியிலே ஆத்துப் படுகையிலே உக்காந்து தியானம் பண்ணிக்கிட்டு இருக்காரு. வெள்ளம் வந்துருச்சு. சேறும் சகதியும் மூடி நாள் கணக்கா அங்கேயே இருக்காரு. வேறே ஏதோ காரணத்துக்காக ஆத்துலே மம்பட்டி போடும்போது, சகதியிலேயிருந்து ரத்தம் பீச்சுது. அப்பிடி ஒரு லீலாவிநோதர் அவரு.

எங்க குருநாதரும் அப்பிடித்தான்.

நான் அவரைப் பார்த்துக்கிட்டே இருந்தேன். என் கூட வந்த என் சிநேகிதங்களெல்லாம் போயிட்டானுக. அவரு ஒவ்வொரு நாயையாக் கூப்பிட்டு, காதுலே ஏதோ சொல்லி அனுப்பி வைச்சாரு. கடேசி நாயும் போயிருச்சு.

அப்பத்தான் எனக்கு ஒறைச்சது. நானும் அவரும் மட்டும் இருக்கோம். அவரு பார்வை இருக்கே. ரொம்பத் தீர்க்கம். நம்மளைப் பாக்குற மாதிரிதான் இருக்கும். ஆனா, நம்மளைப் பாக்கலேன்னு தோணும். நம்மைத் தொளைச்சு வேறெதையோ பாக்குற பார்வை.

கையசைச்சு என்னைக் கூப்பிட்டாரு. நேர்கோட்டுல நடந்து அவருகிட்டப் போக முடியலே எனக்கு. கால் பின்னப் பின்ன நடந்து கிட்டப் போனேன். பக்கத்துல உக்காரச் சொன்னாரு. அவரு உடம்புலேருந்து ஒருமாதிரியான வாசனை கிளம்புது. எனக்குக் கிறுகிறுப்பா இருக்கு.

வலதுகைச் சுட்டுவிரலை நீட்டுனாரு.

நீட்டின திக்குலே பாத்தேன். பதறிப் போயிட்டேன் தம்பி. பத்துப் பதினஞ்சடி தூரத்திலே ஒரு நாகம் படமெடுத்து நிக்குது. பளபளன்னு கோதுமை நிறமா, நல்லா வெளைஞ்ச நாகம். எனக்கு உசிரே நடுங்கிருச்சு.

ஊருக்குள்ளே சிட்டாப் பறந்துறலாமான்னு யோசிக்கிறேன். என் யோசனைத் தடம் தெரிஞ்சவர் மாதிரி, என் கையை இறுகப் பிடிச்சாரு. தம்பீ, அது மனுசக் கையில்லே. பிரேதத்தோட கை மாதிரி அம்புட்டுக் குளுந்து கெடக்கு. குளிர்ச்சி என் நரம்பெல்லாம் தொத்தி ஏறுது.

வேற வளியில்லே. உக்காந்துட்டேன். நாகம் மெல்லப் படத்தை ஆட்டுது. வச்ச குறி மாறாம இவரையே பாத்துக்கிட்டிருக்கு. இவரு சொல்றாரு எங்கிட்டே.

> பரிகாசம் போலக் கடித்த பாம்பு
>
> பலபேரறியவே மெத்த வீங்கி
>
> பரிகாரம் ஒருமாது பார்த்தபோது
>
> பையோடே கழன்றதென் றாடுபாம்பே.

பையா, பலவேசம்... பலபேரும் அறியாமல் மெத்த வீங்கி, கழண்டுருச்சு பை.

சொல்லிட்டுச் சிரிக்கிறாரு. இவர் சிரிக்கிறதையே பாத்துக்கிட்டு இருந்தனா, பாம்பு விலகிப் போனதைப் பாக்கலே. இன்னய வரைக்கும் சந்தேகமாத்தான் இருக்கு. பாம்பு இருந்ததே என்னோட பிரமைதானோன்னு. கண்ணால் காண்பதும் பொய் காதால் கேட்பதும் பொய்ன்னு பெரியவங்க சொல்வாங்களா இல்லியா? ஆனா, அந்தப்

பாட்டு, சிரிப்பு இதிலெல்லாம் ஏதோ விளங்காத மர்மம் ஒண்ணு இருக்கு.

என் தாயாதிக்காரப் பையன் சென்னகேசவன் இங்கே வந்திருந்தப்போ சொன்னதெ வச்சுப் பார்த்தா, மர்மம் இன்னும் ஜாஸ்தியாயிருது. நீங்க அவனையும் பாக்கணும். ரொம்ப காலம் கொழந்தையில்லாமெ இருந்து, திடீர்ன்னு ஒரு கொழந்தை கெடைச்சது அவனுக்கு. வாசத் திண்ணையிலே கிடந்ததாம். தொப்புள் கொடிகூட அறுக்காமெ. எப்படியிருக்கு பாருங்க.

நம்ம குருநாதர் அவன் வீட்டுக்கு வந்திருக்காரு அன்னைக்கி. படப்பையிலேயிருந்து இங்கே வர்றதுக்கு, வண்டி கட்டி வந்தாலே ஒரு முழு நாள் ஆவும். இவுரு பாருங்க, பதினொரு மணி சுமாருக்குப் படப்பையிலே இருந்திருக்காரு. மத்தியானம் மூணு மணிக்கி நாய்ப் பட்டாளத்தோட இங்கே வந்தாச்சு.

சென்னகேசவனுக்கு இவரு மேல ரொம்ப பக்தி. ‘ஒனக்கெல்லாம் அவரைப் பத்தித் தெரியாதுடா. பெரிய சித்தர் அவரு’ம்பான். என்னைவிடப் பதினேழு வயசு மூத்தவன். அதுனாலேயே என்னைவிடப் பதினேழு பங்கு அதிகக் கெட்டிக்காரன்னு நெனச்சுக்குவான். என்னத்தெ இருந்து என்னங்க, மடத்துக்காக ஒரு தென்னந்தோப்பெ எளுதி வைய்யிடான்னா, பிசுங்கிட்டான். அதுக்கப்புறமே அவன் ஊருப்பக்கம் அதிகம் போக்குவரத்து வச்சிக்கிர்றதில்லே. துட்டு என்னாங்க துட்டு, இன்னைக்கி வரும், இன்னைக்கே போயிரும். என்னா நாஞ் சொல்றது? நல்லவன்தான். என்ன, கை கொஞ்சம் சுணக்கம். சிக்கனத்துக்கும் கஞ்சத்தனத்துக்கும் இடையிலே சின்னக் கோடுதாங்க இருக்கு. எல்லாருக்கும் தெரியுறதில்லே அந்தக் கோடு.

சென்னகேசவன் இருக்கானே. அவன் சொல்லி நெறையப் பேரு இங்கே வந்திருக்காங்க. மதுரையிலே இருந்துகூட ஒரு வக்கீல் வந்தாரு. நீலகண்டன்னு பேரு. சாமியோட போட்டோ ஏதாவது இருக்குமான்னு கேட்டாரு. ‘காத்தை எப்படிய்யா படம் புடிக்கிறது’ன்னு கேட்டேன். நீங்க அவரைக்கூடப் பாக்கலாம். கொஞ்சம் வியாபார மூளை. ஆள் உபகாரி. ஏதொண்ணுக்கும் ஒத்தாசையா இருப்பாரு.

சாமி ஒரு வருசம் போல இங்கே இருந்தாரு. அவரு சமாதியாகும் போது, எனக்குப் பத்தொம்போது வயசு. வீட்டிலே கல்யாணம் பேசிக்கிட்டிருந்தாங்க. நான் மாட்டேன்னுட்டேன். நமக்குள்ளே அந்த விதை விளுந்திருச்சு. இனி, ஊர் போற பாதையிலே போக முடியாது. எதுக்கு ஒரு பொண்ணோட வாழ்க்கையை வீணடிக்கணும். என்னா நாஞ் சொல்றது, சரிதானே.

அவரு இங்கே இருந்த காலங்கள்லே, பித்தன் மாதிரித்தான் திரிவாரு. ஏதாவது ஒரு கடையிலே போய் பலகாரத்தட்டை எடுத்து விசிறியடிப்பாரு. அன்னையிலேர்ந்து அந்தக் கடைக்கி யாவாரம் பிச்சிக்கும். ஜவுளிக்கடைக்குள்ளே நுழைஞ்சு துணிகளைக் கிளிச்சிருவாரு. அப்புறம் அவன் கோடீஸ்வரன்தான்...

சித்தரு பெரும்பாலும் பேசமாட்டாரு. எந்நேரமும் மௌனம் தான். இல்லாட்டி சைகை. எப்பவாச்சும் ஆடிக்கொருதபா, அம்மாசிக்கொருதபா வாயிலேருந்து சொல் உதுரும். ஒருதபா, சாயங்காலம் நாலு மணி சுமார் இருக்கும். சைகையாலே என்னைக் கிட்டத்திலே கூப்பிட்டு உக்காத்திக்கிட்டாரு.

வார்த்தைகள் பொங்குது. ஊத்திலேயிருந்து தண்ணி பீய்ச்சுற மாதிரி வெறும் சொல்லா உதுத்துக்கிட்டே இருக்காரு. என்ன மாதிரிங்குறீங்க? பாருங்களேன்,

...பூ புழு புலி பூச்சி ரசம் கொழம்பு கொழந்தெ வாயு சந்தனம் கோயில் தேவடியா பேமானி பேஜாரு சிறுக்கி பொண்டுகன் ஆம்பளை பொம்பளை சீக்கு சீர்செனத்தி கனவு நெஜம் காத்து உற்சவம் பேறுகாலம் சாவு கல்யாணம் கருமாதி கந்தன் காக்கா பாம்பு ஊம்பு வேல் சாதி சனம் நல்லவன் குழந்தை பாதி கூதி பளிங்கு ஸ்கலிதம் சம்போகம் வேர்வை அணு பிரயாணம் சௌந்தரியம் சாகுருவி மரம் வெய்யில் வேரு ஜோசியம் சுள்ளி விறகு ராட்டினம் கிலுகிலுப்பை அக்கார அடிசில் வக்காளவோளி சுக்கிலம் சுரோணிதம் கரும்பு இந்திரியம் அப்பன் ஆத்தா வயிறு வாசல் கரு விந்து காலம் சுகுணம் மைதுனம்...* பலவேசமுதலியார் சொன்னதை நான் அப்படியே எழுதவில்லை. எனக்கு ஞாபகமிருக்கும், அல்லது ஞாபகமிருப்பதாய்த் தோன்றும் வார்த்தைகளை ஒரு உத்தேச வரிசையில் எழுதியிருக்கிறேன்.*

அவரு பேசுனது இப்பிடியேயில்லே. ஆனா இந்த மாதிரிதான். தொடர்ந்து மணிக்கணக்கா வார்த்தைகளாக் கொட்டுது. மொதநாள் சாயங்காலம் ஆரம்பிச்சது, மறுநாள் மத்தியானம் ரெண்டு மணி சுமாருக்கு முடிஞ்சது. ஏதோ யாகம் பண்ணுறமாதிரி அக்கறையாச் சொல்லிக்கிட்டே இருந்தாரு. அர்ச்சனைப் பூ மாதிரி வார்த்தைகளை இறைச்சு முடிஞ்சதும், என்கிட்டெச் சொன்னாரு:

பலவேசம், மொத்தமும் காலியாயிருச்சு.

அதுக்கப்புறம், பூதவுடம்பெ நீங்குறவரைக்கும் ஒரு வார்த்தை கூடப்

பேசலே.

எனக்கு ஒரு வாரம்வரை பித்துப் பிடிச்ச மாதிரி இருந்தது. பாக்குற வஸ்துக்கள், பாக்குற காரியங்கள், மனசுலே ஓடுற யோசனைகள் எல்லாமே வெறும் வார்த்தைகளாக் கிடக்கிற மாதிரி ஆயிருச்சு. எறும்புக் கூட்டமாட்டம் வார்த்தைகள் மொய்ச்சுக் கிடக்கிற இலந்தைப் பழமாயிட்டேனேன்னு தோணுச்சு.

அதெல்லாம் ஒரு வரம்ங்க. சுத்திலும் நடக்கிற எல்லாமும் நடந்துக்கிட்டேயிருக்கும். நீங்க எதுலேயும் ஒட்ட மாட்டீங்க. பாதரசம் மாதிரி. அதாவது, இருப்பீங்க, ஆனா இருக்க மாட்டீங்க. பூர்வ ஜென்மத்திலே புண்ணியம் பண்ணியிருக்கணும் அதுக்கெல்லாம். என்னா சொல்றீங்க?

> புஸ்தகம் எளுதப் போறேங்கிறீங்க. நீங்க என்னத்தைத்தான் அவ்வளவையும் எளுதீட்டாலும், எளுதினது போக மிச்சம் இருக்குமா இல்லியா. நான் பேசுறேன், நீங்க கேக்குறீங்க. இதை எளுதிருவீங்க.
>
> இடையிலே நான் ஏப்பம் விட்டேன். குறுக்காலே ஒரு பூனை ஓடுது. அந்தா பாருங்க, வெளக்குக் கம்பத்திலே ஒண்ணுக்கடிக்கிதே அந்த நாயி. வண்ணான் பொதியைச் சுமந்துக்கிட்டுப் போகுதே களுதை. அப்புறம் இந்த மத்தியானம். ஊமை வெய்யில். இந்தப் புளுக்கம். இதெல்லாத்தையும் சேர்த்துத்தானே என்னோட பகிர்ந்துக்கிட்டீங்க. இதையெல்லாம் சேர்த்து எளுதினாத்தானே இந்தச் சந்தர்ப்பத்தை முளுக்க எளுதினதா அர்த்தம். யாராலேயாவது செய்ய முடியுமா இதை?
>
> அந்தந்தக் கதிரிலே எத்தனை நெல்லுமணி இருக்கோ, அவ்வளவு தான் அதோட பிறவி மகிமை. என்ன சொல்றீங்க?
>
> நீங்க சொன்னீங்களே, சென்ன கேசவ முதலியார். அவரையும் நான் பார்த்தாத் தேவலை. விலாசம் இருக்கா.
>
> விலாசம் என்னங்க விலாசம். படப்பை என்னா லண்டனா. மொத்தமா ஐநூறு அறநூறு வீடுக இருந்தா ஜாஸ்தி. போய் எறங்கி மிராஸ்தார் வீடுன்னு கேட்டா யாரும் சொல்வாங்க. கட்டாயம் போங்க. அவன் சம்சாரம் ரொம்ப நல்ல மாதிரி. வெகுளியான பொண்ணு. முணுக்குன்னா அளுதிரும்.

வெய்யில் தணிந்திருந்தது. மடத்துத் தென்னைகளிலிருந்து இறக்கி

உரிக்கப்பட்ட தேங்காய்கள் நாலைந்தை ஒரு துணிப்பையில் போட்டுத் தந்தார் பலவேச முதலியார். ஹாலாஸ்யம் மறுத்தபோது,

என்னங்க இது. இவ்வளவு தூரம் வந்திருக்கீங்க. லோகோபகாரமா அலையிறீங்க. வெறுங்கையோடவா திருப்பி அனுப்புறது?

என்றார்.

தேங்காய்ப் பையைச் சுமந்த கைகள் மாதிரியே, பலவேச முதலியாரையும் குள்ளச் சித்தர் மடத்தையும் திருவண்ணாமலையையும் சுமந்து கனத்தது மனம். பிரிய மனமேயில்லாமல் திரும்பித் திரும்பிப் பார்த்தபடி நடந்தார் ஹாலாஸ்யம். நீண்டு கிடந்த தெருவின் முனையில் நின்று ஒரு முறை திரும்பிப் பார்த்தபோது இவரைப் பார்த்தபடியே நின்றிருந்தார் பலவேச முதலியார்.

மு.ஹா.

# அத்தியாயம். 10

**வ**ரச் சொன்னீகளாம்.

ஆமா. வா. உக்காரு. பழனீ. நீயும் உக்காரு. அட உக்காரப்பா. அடே... வேம்பூ...

அய்யரின் சமையற்காரன் நளினமான அசைவுகளோடு வாசலுக்கு வந்தான். கணுக்காலுக்கு மேல், குதிரைச்சதை வரை மட்டுமே இறங்கியிருந்த, சற்றுக் கோணலாகக் கட்டியிருந்த வேஷ்டியும், கை வைத்த அழுக்குப் பனியனும் உடுத்தி, மார்பின் குறுக்காக சிவப்புநிற ஈரிழைத் துண்டைப் போர்த்தியிருந்தான். பருத்த கீழுதட்டில் எச்சிலின் ஈரம் பளபளத்தது.

கூப்பிட்டேளான்னா.

ஆமா. இவா ரெண்டுபேருக்கும் டீ போட்டுக் கொண்டுவா. அப்படியே எனக்கும் ஒரு டீ குடேன்.

போங்கோன்னா, இன்னிக்கி ஒங்க ரேஷன் முடிஞ்சாச்சு. அப்புறம் ராச் சாப்பாடு இறங்காது.

சரி. அந்தச் சுருட்டுக் கட்டையாவது எடுத்துண்டு வா.

வலது கையை ஒயிலாக அசைத்தவாறு உள்ளே சென்றான் வேம்பு.

ஒரு சாமியார் எலி வளர்த்தாராம். ஒரு கட்டத்துலே எலித் தொந்தரவு ஜாஸ்தியாயிடுத்து. எலியைக் கட்டுப்படுத்தப் பூனை வளர்த்தார். பூனையைச் சமாளிக்க நாய் வளர்த்தார். நாய் புலியைப் பாத்து பயப்பட்டதாம். புலிக்கி வேட்டைக்காரன்ட்ட பயம். வேட்டைக்காரன் அவன் பெஞ்சாதியைப் பார்த்தா பயப்படுவான்; நான் வேம்புவைப் பார்த்து பயப்புடுற மாதிரி...

தான் சொன்னதைத் தானே ரசித்துச் சிரித்துக்கொண்டார் அய்யர். ராமநாதன் தலையைச் சொறிந்துகொண்டார். பழனியப்பன் ஆகாயத்தைப் பார்த்தான். மேகம் கப்பின ஆகாயம். நட்சத்திரம்

ஒன்றுகூட இல்லாதது, இருளின் அடர்த்தியை அதிகமாக்குகிறது.

இந்தியாவுக்கு வர்ற வழியிலே இந்தப் பயலைப் பார்த்தேன். 42 பங்குனிக் கடைசி வாரத்திலே டாமு விலேர்ந்து இந்தியாவிலே வான் சிங் வரைக்கும் நடந்து வர்றேன். வான் சிங் போறதுக்கு ரெண்டு வழி உண்டு. ஒண்ணு, கறுப்பு வழி. மற்றது, வெளுப்பு வழி. கறுப்பு வழி கொஞ்சம் சுத்து வழி. கரடுமுரடானது. நம்மளை மாதிரி சுதேசிகள் வர்றதுக்கு. வெளுப்பு வழியிலே தூரம் குறைவு. நல்ல பாதை. வெள்ளைக்காரப் பரதேசிகள் வர்றதுக்கு. உயிருக்குத் தப்பி ஓடுற நாய்கள்லே உசந்த நாய், தாழ்ந்த நாய் வேறே.

அய்யர் சுருட்டுப் பற்றவைத்தார். பழனியப்பன் உடலை முறுக்கி ஒருமுறை சொடுக்கிக்கொண்டான். அய்யர் பர்மா போய்ச் சேர்ந்து விட்டார். உத்தரவாதமாக, அரைமணிநேரமாவது கொல்வார், தப்பிக்க முடியாது. அப்பச்சியின் முதலாளி அல்லவா.

ரெண்டு தோளிலேயும் கனத்த மூட்டைகள், உடுமாத்த ரெண்டு ஸெட் துணிமணியும் கம்பிளியும் தவிர அத்தனையும் புஸ்தகங்கள். முந்தின சமயம் உருப்படியா வந்து சேர்ந்த காலங்களிலேயே அங்கே சம்பாதிச்சதையெல்லாம் இங்கே கொண்டாந்து முதலீடு பண்ணியாச்சு.

கடைசியா நான் வந்துட்டுப்போயி, ஒரே மாசத்திலே தாயோளி குண்டு போட்டுட்டான்.

ஆச்சா, புஸ்தகச்சுமையோட நடந்து வர்றேன். எதுத்தாப்புலே வர்ற ஆட்கள் ‘மீ… மீ… ங்குறாங்க. பர்மிய பாஷையிலே மீ ன்னா நெருப்புன்னு அர்த்தம். காட்டுத் தீ புடிச்சுருச்சு. ஜனங்க பயந்து ஒதுங்குறாங்க.

அந்தக் கூட்டத்திலே தனியா நின்னு அழுதுக்கிட்டிருந்தான் இவன். பதிமூணு பதினாலு வயசிருக்கும். பொம்பளை மாதிரி வாய் கோணி, வலதுகையை முறுக்கி… இந்தா இப்பிடி… கண்ணைத் தொடைச்சுத் தொடைச்சு அழுதுக்கிட்டு நின்னான். அசப்பிலே கொஞ்சம் பொம்பளை மாதிரித்தான் இருப்பான். யாருப்பா தம்பி, என்ன ஏதுன்னு விசாரிச்சேன். யாருமில்லாத பயன்னு தெரிய வந்தது. சரிதான் நம்ம வர்க்கம்னு நினைச்சுக்கிட்டேன். எங்கூட வந்துர்றியான்னு கேட்டேன். சரின்னான்.

தொணைக்கி இந்தப் பயதான் லாயக்குன்னு பார்த்தவுடனே தோணிருச்சு. இப்போ எப்படி வளந்துட்டான் பாருங்க…

பழனியப்பன் எவ்வளவோ சிரமப்பட்டும் அடங்காத கொட்டாவி வெளியில் சிந்திவிட்டது.

> பாரு, நான் என்னமோ சொல்லக் கூப்பிட்டு அனுப்பிட்டு, என்னமோ சொல்லிக்கிட்டிருக்கேன்.

போனவாரம் பட்டணத்திலேயிருந்து திரும்புறேன். ரயில்லெ ஒரு புஸ்தகம் படிச்சுக்கிட்டே வந்தேன். மாயவரம் கிட்டெ வந்துக்கிட்டிருக்கு ரயில். அந்தப் புஸ்தகத்திலே ஒரு குட்டிக் கதை போட்டிருந்தான். பழனியப்பா, கவலைப்படாதே, நெஜமாவே குட்டிக் கதைதான். இந்தக் காலத்துப் பிள்ளைகளுக்குப் பொறுமையே கிடையாது. அனுபவம் பேசும்போது கேக்கக் கூடப் பொறுமை இல்லே. எல்லாமே வேகம்தான்.

படிச்சுக்கிட்டு வந்தேனா, அந்தக் கதை என்னன்னா, ஒரு விருத்தாப்பியர் மாஞ்செடி நட்டுக்கிட்டிருக்கார். அந்த வழியாப் போன ஒர்த்தன் அவர் கிட்டெக் கேட்டானாம்:

என்ன, பெரியவரே, என்ன செஞ்சுக்கிட்டிருக்கீங்க?

ஏம்ப்பா, மாங்கன்னு நடுறேன்.

சரிதான். இந்தச் செடி மரமா வளர்ந்து, காய்ச்சு, பழுத்து, நீங்க அதெச் சாப்பிடவாக்கும்னு சிரிக்கிறான். பெரியவர் நிதானமாச் சொல்றாரு:

அதுக்கில்லேடா பேராண்டி. இன்னைக்கிக் காலைலே தோணுச்சு. என் ஆயுசிலே இதுவரைக்கும் நான் சாப்பிட்ட மாம்பழம் எல்லாமே, யாரோ நட்ட மரங்களிலே விளைஞ்சது தான்னு. சரி, நம்ம பங்குக்கு நாமும் ஒண்ணு நடவேண்டியது தான்னு முடிவு பண்ணினேன்.

எனக்குப் பொட்டுலே அறைஞ்ச மாதிரி ஆயிருச்சு. நான் வரும் ரயில் எத்தனை பேர் கைங்கரியம்? நான் படிக்கும் புஸ்தகம், சாப்பிடுற சாப்பாடுன்னு எல்லாத்திலேயும் எத்தனை ஜோடிக் கைகள் மறைஞ்சிருக்கு. நாமும் ஏதாவது கைங்கரியம் பண்ண வேண்டாமா? அதுக்குத்தான் ஒங்களைக் கூப்பிட்டனுப்பிச்சேன்.

ராமநாதா, ஒனக்குத்தான் தெரியுமே. சுருட்டுக்கு ரெண்டாவதா, எனக்கு ரொம்பப் பிடிச்ச விஷயம் படிக்கிறது. கண்டது கத்தவன் பண்டிதனாவான்னு, அச்சடிச்ச தாள் கையிலே கிடைச்சாப் படிக்கணும்னு வெறி உண்டாயிரும். படிக்கிறதைவிடவும் புஸ்தகம் வாங்குறதிலே அப்பிடி ஒரு வெறி. ஷெல்ஃபிலே இருக்கிற புஸ்தகம் பீரோவுலே இருக்கிற பணம் மாதிரி.

எங்கிட்டே இருக்கிற சில புஸ்தகங்கள் அபூர்வமானது. ரொம்பப் பேருகிட்டே இருக்காது. ஆனந்தரங்கம் பிள்ளையோட டைரி, சுப்பிரமணிய பாரதி தர்ஜமாப் பண்ணின பகவத் கீதை, சாமிநாதய்யர் போட்ட புஸ்தகங்கள், தாமோதரம் பிள்ளை பதிப்பிச்ச புஸ்தகங்கள், இன்னும், பெரிய எழுத்து விக்கிரமாதித்தன் கதை, வீராசாமி செட்டியார் எழுதின விநோத ரச மஞ்சரி, இங்கிலீஷ்ல ஷேக்ஸ்பியர் நாடகங்கள், தல்ஸ்தோய் எழுதின நாவல்கள், பரிசுத்த வேதாகமம் ஜேம்ஸ் மன்னன் பதிப்பு, திருக்குரான், ஆயிரத்தோரு இரவு அராபியக் கதைகள்னு ஒண்ணு பாக்கிவிடாம ஆயிரக்கணக்கான புஸ்தகங்கள் இருக்கு.

அத்தனையும் செல்லரிச்சுப் போக விடறதா?

அந்தப் புஸ்தகத்தையெல்லாம் வெச்சு வாசகசாலை ஒண்ணு கட்டலாம்னு நினைக்கிறேன். திருப்புவனம் கிட்டே இருக்கிற தென்னந்தோப்பு, மதுரை தல்லாகுளத்தில் இருக்கிற கடைவாடகை எல்லாத்தையும் வாசகசாலைச் செலவுக்குத் திருப்பிவிட்டுரலாம். சடகோபன் கிட்டச் சொல்லி உயில்லே சேர்ப்பிச்சுடப் போறேன்.

பர்மாவுலே இருந்தப்போ சாமிநாத சர்மான்னு ஒருத்தர் பழக்கம் எனக்கு. புஸ்தகமெல்லாம் எழுதக்கூடியவர். அவர் மாதிரி, பட்டணத்திலே இருக்கிற சிலபேருக்குக் கடுதாசி எழுதப் போறேன். தினசரிப் பேப்பர்களிலே விளம்பரம் குடுக்கலாம். நதிகளெல்லாம் சமுத்திரத்திலே கலக்கற மாதிரி, தமிழ்லே வெளிவர்ற புஸ்தகங்கள் எல்லாத்துக்கும் ஒரு காப்பி ஆட்டோமேட்டிக்கா இங்கே வந்து சேர்ற மாதிரி ஏற்பாடு செஞ்சுறலாம்.

நம்மூர்லேயே ஒரு பெரிய கட்டடம் கட்டி இதையெல்லாம் வச்சுடலாம். மெற்றாஸ் மாகாண மேப்லே நம்மூரைச் சிறப்பாக் குறிப்பிட வேண்டியதாயிடும். எந்தப் புஸ்தகம் தேவைப்பட்டாலும் எந்த ஊர்லேருந்தும் யாரும் இங்கே வந்து படிச்சுக்கலாம்.

என்ன சொல்றீங்க, நம்ம பழனியப்பனைத்தான் பொறுப்பாப் போடப் போறேன். இவனுக்குச் சேரவேண்டிய சம்பளம், வருஷத்துக்குக் கூட்டவேண்டிய தொகை எல்லாத்தையும் உயில்லே எழுதிடப்போறேன். ‘பர்மா வெங்கடேஸ்வரய்யர் வாசகசாலை’ன்னு பேர் வச்சுரலாமா. என்ன லைப்ரேரியன் சார். பேர் பிடிச்சுருக்குல்லே.

பழனியப்பன் தலையசைத்தான். வேம்பு பீங்கான் கோப்பைகளில் தேநீர் கொண்டு வைத்தான்.

அடே, பயலே, டீ போட எத்தனை நாழி?

போங்கோன்னா. கரி அடுப்பைப் பத்த வைக்கறதுக்குள்ளே உசிர் போறது. ஒங்களுக்கு எல்லாத்துலேயும் அவசரம்தான்.

என்று அய்யரின் மோவாய்க்கட்டையில் முஷ்டியால் இடித்துவிட்டுப் போனான் வேம்பு.

அய்யர் அசட்டுத்தனமாகச் சிரித்தார்.

## அத்தியாயம். 11

வாசலில் இறங்கியதும் வழக்கம் போலக் குழப்பமாய் இருந்தது. வலது பக்கம் மூன்றாந்தல் வழியாகச் செல்வதா, இடது பக்கம் பிரும்ம ஞான மந்திரம் பள்ளிக்கூடம் வழியாகச் செல்லலாமா? கோலத்தைப் பார்த்தவாறு கொஞ்ச நேரம் நின்றார். எதிலுமே உடனடியாக முடிவெடுக்க முடியாமல் இப்படித் தவிக்கவேண்டி வருகிறதே எனக்கு, ஏன்? என்று கழிவிரக்கம் படர்ந்தது மனதில். அம்மாவின் குரல் கேட்டது வீட்டினுள்ளேயிருந்து.

> ஹாலாஸ்யம், இன்னும் போகலையே நீ? போகும்போது முத்துக்கிருஷ்ணன் கிட்டே சொல்லிட்டுப்போ. சாயங்காலம் பசும்பால் அரைக்காப் படி கொண்டு வரச் சொல்லு.

பிரச்னை விட்டது. இடையர் தெருவில் போய்த் தகவல் சொல்லி விட்டுப் போகவேண்டுமானால், இடது பக்கம்தான் போகவேண்டும்.

நடக்க ஆரம்பித்தார். கால்கள் முன்னோக்கி நகர்வதற்குப் பல மடங்கு அதிக விசையில் மனம் பின்னோக்கிப் பாய்ந்தது.

முத்துச்சாமியைக் கடைசியாய்ப் பார்த்தது, அவனுடைய அப்பா இறந்த சமயத்தில். உண்மையில், துக்கம் கேட்கப் போகவில்லை. பெரியாஸ்பத்திரியில் சேர்த்திருக்கிறார்கள் என்று அவனிடமிருந்து தபால் வந்ததையொட்டி, ஒருநடை பார்த்துவிட்டு வரலாம் என்று போனார். போன இடத்தில் பெரியவரின் பிணத்தைத்தான் பார்க்க முடிந்தது.

முத்துச்சாமி சலனமற்றிருந்தான். பார்வை வறண்டிருந்தது. துக்க வீட்டின் சூழ்நிலைக்குச் சம்பந்தமற்ற அந்நியன் போல நின்று கொண்டிருந்தவன், ஹாலாஸ்யத்தைப் பார்த்ததும் நெருங்கி வந்தான். வீட்டுக்குள் கூட்டிப் போனான்.

நாற்காலியில் அமர்த்தியிருந்தார்கள் பெரியவரை. ஒழுங்கற்றுக் கிழிபட்ட வேஷ்டிக் கிழிசலால் கீழ்த் தாடையைத் தலையோடு இழுத்துக்

கட்டியிருந்தது. நெற்றியில் அப்பப்பட்ட சந்தனத்தில் அரையணா நாணயம் ஒன்றை ஒட்டியிருந்தது.

முத்துச்சாமி சொன்னான்:

கடைசி ஒரு வாரம் ரொம்பச் சிரமப்பட்டுட்டாருடா. முந்தின நாள் பார்த்தேன். ஜாதகக் கட்டு, ரெண்டு மூணு புஸ்தகங்கள் எல்லாத்தையும் வச்சிக்கிட்டு உக்காந்திருந்தாரு. தன்னைச் சுத்தித் தரையிலே சாக்பீஸாலே வரைஞ்சு தள்ளியிருந்தாரு. எல்லாம் ஜாதகக் கட்டம், ராசிக் குறிகள். என்னென்னமோ கணக்குகள். நான் கங்கையம்மன் கோயில்வரைக்கும் போயிட்டு வரலாம்னு போனேன்.

கோயில்லே மனசு பொருந்தலே. சந்நிதி விளக்குலே, ஏதோ பூச்சி விழுந்து கருகிருச்சு. கோயில் மதிலுக்கு வெளியிலேயிருந்து நாய் ஒண்ணு ஊளையிட்டுக்கிட்டே இருந்துச்சு. கோயிலுக்குள்ளே தடதடன்னு ஓடிவந்த பெண்கொழந்தை கொடிமரத்துக்கிட்டே தடுக்கி விழுந்து மண்டை உடைஞ்சு போச்சு. தரையெல்லாம் ஒரே ரத்தம்.

சரி, கோயிலுக்கு வந்த நேரம் சரியில்லேன்னு வீட்டுக்குத் திரும்பினேன். வீட்டுக்குள்ளேயிருந்து ஒரு பேய்க் கூச்சல். அப்பா படிக்கிறதுக்கு உபயோகப்படுத்துற லென்ஸு வாசல்ல வந்து விழுது. சட்டத்தை விட்டுக் கழண்டுருச்சு வில்லை. உள்ளே போனா, இந்த மனுஷன் தலைவிரிகோலமா உக்காந்திருக்காரு. என்னைப் பார்த்தவுடனே,

> அடே, முத்துச்சாமி, ராகு தொரத்துறாண்டா. அதோ பார்றா, கழுத்துப் படத்தை ஆட்டிக்கிட்டு சாவகாசமா நடந்து வர்றான். கொத்தப் போறாண்டா. காப்பாத்துடா. தம்பீ, முத்தூ, காப்பாத்துடா. வைத்தியனைக் கூப்பிட்டுக்கிட்டு வாடா. இந்தப் பய கொத்துன ஒடனே முறிச்சிரலாம். ஆனா எங்கே தம்பி, இது ஆலகால விஷமில்லே. சும்மா விட்டுருமா. இது ஒண்ணு தொரத்தும்ங்கிற யோசனையே இல்லாமெப் போனேனே...

ன்னு கதறுராரு. என் தோள்லே சாய்ஞ்சுக்கிட்டு ஒரே அழுகை. பிறகு சிரிக்க ஆரம்பிச்சாரு. அமானுஷ்யமான சிரிப்புடா, தொண்டை வழியா வராமே, நேரடியா அடிவயித்திலேயிருந்து கேக்குறது மாதிரிச் சிரிப்பு. சிரிப்பு முடிஞ்சதும் அழுகை. இப்படியே ஏழுநாள்.

சாப்பாடு கிடையாது. தூக்கம் கிடையாது. குளி கிடையாது.

இதுல ஆச்சரியமான விஷயம் ஒண்ணு இருக்கு ஆலாஸ்யம். அப்பா அடிக்கடி சொல்வாரு.

> சோசியக்காரன் தனக்கோ தன் குடும்பத்துக்கோ சாதகமோ சோசியமோ பாக்கக் கூடாதப்பா. கணக்கன் கணக்கறிவான், தன் கணக்கைத் தானறியான். எதிர்காலம் இருக்கே, அது பொல்லாத களுதை.

ம்பாரு.

எங்களுக்குப் பாக்கணுமின்னா, சிலுக்குவார்பட்டி ஜோசியர் கிட்டத்தான் போயிக் கேட்டுட்டு வருவாரு. அன்னைக்கி ஏதோ பாக்கணும்னு தோணித்தான் பாத்திருக்காரு. என்ன சொல்றே... பாத்த மனுஷன், ஜாதகத்தைப் பாக்கலே. தன்னோட சாவைப் பாத்துட்டாரு. பைத்தியம் பிடிக்கத்தானே செய்யும்?...

மறுநாள் காலையில் பால்தெளிக்கப் போனோம். நான் அதுவரை சுடுகாட்டுக்குப் போனது கிடையாது. என்னுடைய அப்பா இறந்த மறுநாள், காட்டுக்கு நான் வரக்கூடாது என்று தடுத்து விட்டார் சுப்பிரமணிய சிரௌதிகள்.

பையனுக்கு இன்னும் பூணூல் போடலியே. இவன் வரவேண்டியது அவசியமில்லை. நேத்தி தகனத்துக்குத் தீராது - வந்துதான் ஆகணும். இன்னிக்கி எதுக்கு. கொழந்தை பாத்தாப் பயந்துப்பான்.

தகரக் கொட்டகையின் கீழ் கிடந்த சாம்பல் குவியலைப் பார்த்தவுடன் மனம் பலமாக அதிர்ந்தது. முந்தின நாள் உடம்பாகப் பார்த்திருக்கிறேன் அவரை. சலனமற்றிருந்தாலும், முத்துச்சாமியின் தகப்பனார் என்ற அடையாளமும், ஞாபகமும் மாறவில்லை. அந்த உடம்பு எனக்குப் பரிச்சயமானதுதான்.

அவருடைய ரத்த சம்பந்தங்கள்போலத் துக்கம் பொங்கவில்லை எனக்கு. நபர்கள் வந்து போவதையும், காற்றுப் போலத் துயரம் அந்த வீட்டுக்குள் நிரம்பித் ததும்புவதையும், கிரியைகள் ஒவ்வொன்றாக நடப்பதையும், தேருக்குப் புஷ்ப அலங்காரங்கள் செய்வதையும் வெறுமனே பார்த்துக்கொண்டிருந்தேன். அவ்வளவுதான். லேசாகப் பசிக்கக் கூடச் செய்தது.

ஆனால், இந்தச் சாம்பல் மேடு மனதை என்னவோ பண்ணுகிறது. மனதில் குவிந்து கிடக்கும் ஞாபகங்கள் அனைத்தின் மேலும் சடாரென்று ருசி குறைந்ததுமாதிரி ஆகிவிட்டது. அவர்கள் சாம்பலைக் கிளறி எலும்புகள் எடுக்கிறார்கள். முத்துச்சாமி அவற்றை ஒரு கலயத்தில் சேகரிக்கிறான், வைகையில் கொண்டு கரைக்க.

என்ன நினைத்தானோ, வைகையை நோக்கி ஒற்றையடிப் பாதையில் நடக்கும்போது, அவனுக்கு முன்னால் போன என்னிடம் சொன்னான்.

பாத்துக்கோ, ஆலாஸ்யம், நாமளும் இம்புட்டுத்தான்.

ஏனோ தெரியவில்லை. என்னுடைய ஆழத்திலிருந்து அழுகை பீறியது. குமுற ஆரம்பித்தேன்.

ஜட்காவின் சக்கரத்தில் தார்க்குச்சியால் கிர்ர்ர்... டகடகடகடகவென ஓசையெழுப்பி ஓட்டிச் செல்கிறான் ஒரு சிறுவன். பெரியகுளம் நகரின் முற்பகல் பொழுது மும்முரமாய்க் கழிகிறது. சுப்பிரமணியசாமி கோயிலிலிருந்து ஈர அழுக்குத் துணியால் மூடிய நைவேத்தியப் பாத்திரத்தைச் சுமந்துகொண்டு திரும்புகிறார் சுவாமிநாத குருக்கள். பாலத்தைத் தாண்டி வடகரைக்குள் நுழையும்போது, மீன் விற்கும் பெண்கள் வரிசையாக உட்கார்ந்திருக்கிறார்கள். முன்னால் இருக்கும் அலுமினியக் கூடைகளில் மீந்திருக்கும் மீன்களிலிருந்து அடிவயிற்றைக் கிளறும் கவிச்சி கிளம்புகிறது.

நாயக்கர் தெருவுக்குள் நுழைந்ததும் சடாரென்று ஒரு அமைதி கவிழ்கிறது. ஊரைவிட்டுத் தனியே வேறு ஒரு இடத்தில் வேறு ஒரு நேரத்தில் இருக்கிறது அந்தத் தெரு. கடந்து வந்த தெருக்கள் எதையும் விட இது சுத்தமாக இருப்பதாகவும் தோன்றியது. அல்லது, அம்மாவின் வார்த்தைகள்வழி மனதில் படிந்த வண்டலில் இந்தத் தெருவைப் பற்றி ஒரு விதமான பிரமை உள்ளே கூடியிருக்கலாம். அவசரமான புனிதம் சேர்ந்து விட்டிருக்கலாம் தெருவுக்கு.

அம்மா அடையாளம் சொல்லியிருந்தாள். வாணியச் செட்டியின் எண்ணெய்ச் செக்குக்கு அடுத்து மேற்காலே உள்ள வீடு. வாசல் தூண் இரண்டிலும் யானைப் பொம்மைகள் நிற்கும். நின்றன. ஒரு யானைக்குத் தும்பிக்கை உடைந்திருந்தது.

வாசலில் தயங்கி நின்றார் ஹாலாஸ்யம். உள்ளேயிருந்து வெளியேறிய, ஊஞ்சல் சங்கிலியின் க்ரீச் க்ரீச் ஒலி நாயக்கர் தெருவில் கவிந்திருந்த நிசப்தத்தின் அடர்த்தியைக் கூட்டியது. வாசலில் நிழலாடியதைப் பார்த்திருக்க வேண்டும் யாரோ.

யாரது.... உள்ளே வாங்க.

என்றொரு குரல் கேட்டது. ஹாலாஸ்யம் வீட்டிற்குள் நுழைந்தார்.

# [அத்தியாயம். 12]

அரங்கத்தினுள்ளே விசித்திரமான மணம் நிரம்பியிருந்தது. நிறுத்தி வைக்கப்பட்ட தூண்களின் உச்சியிலிருந்த கிண்ணக் குழிவுகளில் கனன்ற கங்குகள் மீது ஒரு விதமான மணப்பொடி தூவப்பட்டு, அவற்றிலிருந்து கிளம்பிய புகையில் நறுமணம் நிரம்பியிருந்தது. கூடத்தை நிறைத்தவர்கள் அரசாங்க உயர் அதிகாரிகள், அமைச்சர்கள், பிரபுக்கள் மற்றும் முக்கியஸ்தர்கள்.

பெரும் நிசப்தம் நிலவிய அரங்கத்தின் பக்கவாட்டில் இரு ஓரங்களிலும் அலிகள் சிலர் நின்று மயிற்பீலியால் ஆன மகத்தான விசிறிகளைப் பதமாக அசைத்துக்கொண்டிருந்தனர். அவையைப் பாதியாய்ப் பிரித்துப் போடப்பட்ட திரைக்குப் பின்னால், வளையல்களின் ஓசையும், குறுஞ் சிரிப்புகளின் மென் சப்தமும், கிசுகிசுப்பான பேச்சுகளும் கேட்டவாறிருந்தன. அரங்கத்தின் மேடை பச்சை நிறத் திரைச்சீலையால் மூடப்பட்டிருந்தது.

இங்கிலாந்திலிருந்து வந்திருக்கும் வணிகர்களுக்காகப் பிரத்தியேகமாக ஏற்பாடு செய்யப்பட்ட இசை நிகழ்ச்சி துவங்குவதற்காகக் காத்திருக்கிறது சபை.

திரை மெல்ல உயர்கிறது. மேடையில் நடுநாயகமாக அவன் உட்கார்ந்திருக்கிறான். அவையின் வலது வரிசையில் முன் ஓரத்தில் அரியாசனம் போன்ற இருக்கையில் வீற்றிருக்கும் பாதுஷாவை நோக்கித் தலை தாழ்த்துகிறான், தன் வலது கையை மார்பில் பதித்தவாறு.

இவனுடைய குரு மிகப் பெரிய இசைமேதையாம். தன் சங்கீதத்தால் மேகங்களைப் பொழிய வைக்கவும், தீபத் திரியில் நெருப்பேற்றவும் வல்லவராம். இவனைப் பற்றியும் விசேஷமாகச் சொன்னார்கள். தன் சித்தம் போன விதமாக நாடோடியாக அலைகிறவனாம். இந்தத் தலைமுறைப் பாடகர்களில் முதன்மையானவன் என்கிறார்கள்.

கன்றின மிளகாய்ப்பழம் போலச் சிவந்திருக்கின்றன அவன் கண்கள்.

பிடரியில் அலை அலையாய்ப் புரள்கிறது ஒழுங்குபடுத்தப்படாத கேசம். சித்த சுவாதீனமில்லாதவன் போலத் தோன்றுகிறான். குதப்பிய வெற்றிலைச் சாறு குருதிக் கோடாகக் கடைவாயோரம் வழிகிறது. தனக்கு இடதுபுறம் இருக்கும், வாயகன்ற, பளபளக்கும் பித்தளைப் படிக்கத்தில் உமிழ்கிறான்.

அவனுக்குப் பின்னால், இருபுறமும் தூண்கள் போல நின்றிருக்கும் தந்தி வாத்தியங்களிலிருந்து கனத்த ரீங்காரம் எழுகிறது. அவையில் அமைதி படர்கிறது. வாத்தியங்கள் ஒன்றுக்கொன்று இசைவாகுவதற்கு வெகுநேரம் பிடிக்கிறது. பாடகன் தன் மடியில் கிடத்தியிருக்கும் சிறு வாத்தியத்தில் தன் விரல்களை அலையவிட்டுக்கொண்டிருக்கிறான். இதுவும் தந்தி வாத்தியம்தான். சீரான இடைவெளியில் இழுத்துக் கட்டப்பட்ட கம்பிகளுடன் அகலமான சட்டகம் போல இருக்கிறது.

மூன்று கருவிகளும் பொருந்திய தருணத்தில் அவற்றுடன் இழைந்து, மிருதுவாக எழுகிறது அவனுடைய குரல்.

மிக மெதுவாக மிக மிக மெதுவாக அரற்ற ஆரம்பிக்கிறது. சுழன்று சுழன்று வேகமெடுக்கிறது. சன்னமான தூறலாகத் தொடங்கி, சிறு தாரைகளாகக் கூடி, கனத்த மழைக் கம்பிகள்போல வர்ஷிக்கிறான். அவனது வேகத்துடன் இணையாகச் சஞ்சரிக்கிறது என் மனம்.

இதுநாள் வரை நான் கேட்டறியாத என் ரகசிய உட்குரலை நான் கேட்க உதவும் வண்ணமாக அவன் பாடிக்கொண்டிருக்கிறான். தன் குரலை அல்ல: குரலுக்குப் பின்னாலுள்ள எதையோ உணர்த்தும் பொருட்டுத்தான் அவன் பாடுகிறான் என்று தோன்றுகிறது. அவன் முன்னிறுத்தும் அந்தப் பின்புலத்தில் தொற்றிக்கொள்ள என் மனம் மிகவும் சிரமப்படுகிறது. சுனையாக ஊறும் வேட்கையுடன் சுவாசம் ஒடுங்கி ஆழ்கிறேன். மந்தை வசியத்துக்கு ஆளான மதக்கூட்டம் போல அவையோர் கிறங்குகிறார்கள்.

கச்சேரியின் இரண்டாம் பகுதி தொடங்குவதற்கு முன்னான இடைவேளையில் என் மனம் ஒப்பீட்டில் இறங்குகிறது. என்னுடைய தேசத்தின் சாஸ்திரீய சங்கீதத்துக்கும் இவன் பாடும் சங்கீதத்துக்கும் உள்ள வேறுபாடு புலனாகிறது. எங்களுடைய சங்கீதத்தில் நிசப்தம் என்பது, ஒரு ஒலித் துணுக்குக்கும் மற்றதுக்கும் உள்ள இடைவெளி. இவனுடைய சங்கீதத்தில், ஓசையின் பின்னுள்ள திரையாகச் செயல்படுகிறது நிசப்தம். மனதில் அலையாடும் எண்ணக் குவியலைப் புறக்கணிக்கும் பொருட்டே இவர்கள் சங்கீதத்தில் ஆழ்கிறார்கள் என்று படுகிறது.

தாள வாத்தியம் உடன் சேர்கிறது. அவன் இசையின் வேகம் அபரிமிதமாகக் கூடியிருக்கிறது. முன்னோக்கி நீட்டிய கைகளால் காற்றில் சித்திரம் வரைகிறான். தன் மனத்தின் ரகசியத் தாழ்வாரங்களில் ஊறும் ஒலித்தாதுக்களின் வரிவடிவத்தை எழுதிக்காட்ட முனைபவன் போல. மானசீக மரம் ஒன்றை இரு கைகளாலும் பற்றிக் குலுக்கி உலுப்புகிறான். ஒலிச்சிதறல்கள் போல ஒலிப்புள்ளிகள் இறைந்து பரவுகின்றன.

குழைவான அவன் குரலிலிருந்து அபூர்வமான தனிமை ஒன்று பீய்ச்சியடிக்க ஆரம்பிக்கிறது. அது கரும் மேகக் கூட்டம் போல அரங்க விதானத்தின் கீழ் தொங்குகிறது. அரங்கத்தில் தனிமையின் இருள் சூழ்கிறது. அவனும் நானும் மட்டுமே பகிர்ந்துகொள்ள மீந்த தனிமை வெளியில், இருவருக்குமான பொதுத் தொடர்பாக, வரையறுக்கப்படட ஒலித் தொகுப்பு ஸ்தாபிதமாகியிருக்கிறது. தடமற்ற ஒலிச்சாலையில் அந்தகன் போல அவன் குரல் பற்றித் தொடர்கிறேன்.

அவன் சொல்லி நான் புரிந்துகொள்வது என்றில்லாமல், அவன் சொல்லுமுன்பே எனக்குள் ஒலிக்கும் தனிமையின் காத்திரத்தை வலுவாக உணர்கிறேன்.

அவனுடைய வேகம் நாலாவது ஐந்தாவது ஆறாவது கதியில் பாய்கிறது. எனக்குள் சிந்தனை அடங்கிய நிசப்தவெளி உருவாகிறது. மனம் அசைய மறுக்கிறது. அவன் பாடும் வேகத்தில், என்னுள் அசைந்துகொண்டிருந்த தாளம் நின்று போகிறது. அடிவயிற்றிலிருந்து ஒரு ஏக்கம் பீறிட்டுக் கிளம்புவதை உணர்கிறேன்.

மூச்சுத் திணறத் திணற நிசப்தத்தின் இருட்சிறைச் சுவர்களுக்குள் ஒடுங்குகிறேன். நண்பனே… என் அருமந்த நண்பனே. இசைஞனே… என்னை மீட்க வந்த இறையே…

கூட்டம் வாஹ்… வாஹ்… என்று ஆர்ப்பரிக்கிறது. பெரும் தேஜஸுடன் மிளிர்ந்த அவன் முகம், ஓசை ஓய்ந்த தருணத்தில் விகாரமாக வெளிறியிருக்கிறது. கரகோஷம் உரத்து எழும்போது, தன் அந்தரங்கத்தைப் பிறர் அறியத் தந்ததில் அவமானமுற்றவன் போலக் கூசுகிறது அவன் முகம்.

# [அத்தியாயம். 13]

மூன்றாவது முறையாகக் கேட்டார் அய்யர்.

நல்லாத் தேடிப் பார்த்துட்டியா.

பழனியப்பன் ஆமோதிப்பாகத் தலையாட்டினார்:

காரைக்குடியிலே போய்ப் பார்க்க வேண்டியதுதானே.

அங்கேயிருந்துதான் ரெண்டு பேரும் வந்தோம். முந்தாநாள் ராத்திரிதானே வந்து சேர்ந்தோம்.

அப்பொ ஏதாவது சொன்னானா?

டாக்டர் சொன்னதைப் பத்தித்தான் பேசிக்கிட்டிருந்தாரு.

என்ன சொன்னான்?

நான் யாருக்கு என்ன பாவம் பண்ணினேன். எனக்குப் போய் இப்படி வந்திருச்சே. க்ஷயரோகம்ன்னா சும்மாவா. ராஜ வைத்தியமில்லே பண்ணணும். காசுக்கு எங்கே போறதுன்னு புலம்பிக்கிட்டே இருந்தாரு.

இத பாரு பழனியப்பா. வியாதிவெக்கையெல்லாம் பூர்வ ஜென்மப் பலன் பார்த்துக்கோ. துட்டுக்குச் சிங்கியடிப்பான். பேயாய்ப் பசிக்கும். தூக்கம் கரெக்ட்டா வரும். நோய் நொடி ஒண்ணு இருக்காது. அதே, கோடீஸ்வரனா இருப்பான். மூணு வேளையும் பத்தியச் சாப்பாடு சாப்பிடுற மாதிரி ஆயிரும். இதெல்லாம் யார் கையிலே இருக்கு சொல்லு.

அதில்லேங்க. டாக்டர் சொன்னதிலே மனசு உடைஞ்சு ஏறுக்கு மாறா எதுவும் செஞ்சிக்கிட்டிருப்பாரோன்னு பயமா இருக்கு. அம்மா அழுதுக்கிட்டே இருக்காங்க.

ராமநாதன் அப்படியெல்லாம் ஒண்ணும் செய்துக்கக் கூடியவன் இல்லே. மஹா விவேகி அவன். வாலி பக்கத்து நியாயத்தை அவன்

சொல்லிக் கேக்கணும். சரி விடு, ஒரு நாள்தானே ஆயிருக்கு. இன்னும் ரெண்டு மூணு நாள் பாப்போம். என்ன சொல்றே...

இன்னைக்கிக் காலையிலே இன்னொரு தாக்கல் வந்துச்சு.

அது என்ன?

மலயாவுலே சின்ன அம்மான் தவறிப் போயிட்டாரு.

அடடா. அப்படியா, நாகப்பன் போயாச்சா... போதும்டா. நான் இன்னும் இருந்து என்னெல்லாம் பாக்கப் போறேன்னு தெரியலே போ.

அய்யர் கொஞ்ச நேரம் மௌனமாக இருந்தார். ஊஞ்சலின் க்ரீச் ஒலி மட்டும் அழுத்தமாகக் கேட்டது. வீட்டிற்குள் குளுமையாக இருக்கிறதே என்று தோன்றியது. அவ்வளவு பெரிய ஹாலில், புத்தகங்கள் சிதறிய தரையில், இறைந்து கிடக்கும் தானியம் போல அங்கங்கே இருட்டு விழுந்திருந்தது. அய்யரும் சமையற்கார வேம்புவும் மட்டும் குடியிருக்க இத்தனை பெரிய வீடு அவசியமா என்று எண்ணிக்கொண்டான் பழனியப்பன்.

அய்யர் எழுந்து வாசலுக்கு வந்தார். உடன் வந்தான் பழனியப்பன். வராந்தாவைக் கடக்கும்போது பக்கவாட்டிலிருந்த அறைகளிலிருந்து அந்துருண்டையின் நெடி கிளம்பியது. அய்யர் வளர்த்துவரும் கொழுத்த பூனை நிதானமாக நடந்து முற்றத்தைக் கடந்து போனது. போகும் வழியில், 'நீ எதற்கு இங்கே வந்தாய்' என்பதுபோலப் பார்த்துவிட்டுப் போனது.

பெரும் முயற்சியும், தியானம் போல் கவனமும் கூட்டி சுருட்டுப் பற்றவைத்துக்கொண்டார் அய்யர். தொண்டையைச் செருமிக்கொண்டார்:

பழனியப்பா, ஒண்ணு தெரிஞ்சுக்க. துக்கம் மட்டும் ஒத்தையா வராது. இதுக்கு உதாரணம் சொல்லணும்னா... ஒனக்கு அவசர வேலை ஒண்ணுமில்லையே...

இல்லேங்க.

ஒரு பழைய புஸ்தகம். பேரு ஞாபகம் இல்லே... அதிலே ஒரு கதை போட்டிருந்தது. அதாவது, கதை கூட இல்லே. ஒரு பாட்டு, என்னன்னா,

ஆவீன மழைபொழிய இல்லம் வீழ

அகத்தடியாள் மெய் நோவ அடிமை சாக

மாவீரம் போகுதென்று விரைகொண்டோட

வழியிலே கடன்காரர் மறித்துக் கொள்ள

சாவோலை கொண்டொருவன் எதிரே செல்ல

தள்ளவொண்ணா விருந்து வர சர்ப்பந் தீண்ட

கோவேந்தர் உழுதுண்ட கடமை கேட்க

குருக்கள் வந்து தட்சணைகள் கொடுவென்றாரே.

இதுதான் வாழ்க்கை. ராமச்சந்திர கவிராயன்னு பேரு. என்ன கேக்குறியா? புரியுதில்லே?

அய்யர் முழுப் பாடலுக்கும் அரும்பதவுரை சொல்லி, பொழிப்புரையும் சொல்லிவிடுவாரோ என்று பழனியப்பன் அஞ்சினான். பேசுவதில் அய்யருக்கிருக்கும் அலாதியான விருப்பம் யாருக்கும் பீதியூட்டக்கூடியது. அய்யர் தொடர்ந்து சொன்னார்:

> இம்புட்டும் ஒரு சம்சாரிக்கி நடந்து போச்சா. அப்பொ அவன் எண்ணெய் ஸ்நானம் பண்றதுக்காக உடம்பு முழுக்க, காய்ச்சின நல்லெண்ணெயைத் தடவிக்கொண்டு உக்காந்திருந்தானாம். ராஜா வீட்டிலே இருந்து கிஸ்தி கேட்டு ஆளுக வர்ற சேதி தெரிஞ்சு இடுப்பிலே கட்டின துணியோட எழுந்திரிச்சு ஓடறான். வழியிலே ஒரு ஜைனக் கோயில். உள்ளே தீர்த்தங்கரரோட பளிங்குச் சிலை நிறை அம்மணமா நின்னுக்கிட்டிருக்கு. தத்ரூபமா இருக்கு. அதைக் கூட்டிக்கிட்டு நம்மாள் அழுதானாம்:

அய்யா, நான் நாலு கோடிக்கிச் சொத்து வச்சிருந்தேன். கட்டின துண்டோட ஓடுறேன். நீ எத்தனை கோடி சொத்து வச்சிருந்தியோ பாவம். இந்தக் கோலத்திலே நிக்கிறியே.

அய்யர் கசப்புடன் சிரித்தார். சுருட்டை ஆழ்ந்து இழுத்துப் புகையை ஆவேசமாய் வெளியேற்றினார்.

> ஒங்கப்பன் பாரு. வசதியில்லாதவன். கொள்ளிவைக்கப் பையன் இருக்கே. நானானா தேசந் தேசமாப் போயிச் சம்பாதிச்சேன். என்ன புண்ணியம், கரையான் அரிக்கிது எல்லாத்தையும். பிள்ளையில்லாத சொத்துக்கு வாரிசு எம்புட்டுப் பேர்ங்குறே?

பழனியப்பன் மௌனமாக இருந்தான்.

சரி. நீ கலங்காதே. நான் எதுக்கு இருக்கேன். முடிஞ்சா நாளை மக்யா நாள் வந்து ங்கொம்மாவைப் பாக்கிறேன்னு சொல்லு. அவங்களைக் கலங்காமப் பாத்துக்கோ. வந்துருவான். எங்கே போயிறப் போறான். சம்சாரிக்கிக் குடும்பத்தை விட்டு ரொம்பக் காலம் இருந்துற முடியாது. மனசு வாதனைப் பட்டுக்கிட்டே தானே இருக்கும். நான் எதுக்கும் மதுரைக்கும் காரைக்குடிக்கும் ஆளனுப்பிப் பாத்துட்டு வரச் சொல்றேன். நீ பொறப்புடு. அம்மா தனியா இருப்பாங்க.

## அத்தியாயம். 14

ஐந்தாறு கட்டுகள் கொண்ட வீடு அது. ரயில்வண்டித் தொடர் போல, அறை அறையாய் இருள் மண்டி நீளும் குகைக்கு மறுபுறம் பின்வாசல் கதவு தெரிந்தது. நடுவில் சிறு சிறு வெளிச்சத் திட்டுக்கள். திண்ணையை அடுத்து உள்ளே நுழைந்ததும் முதல் அறையின் இருட்டுக்குள் ஒருவர் படுத்திருந்தது புலனாகியது. அவர்தான் வரவேற்றிருக்க வேண்டும்.

சாமியைப் பாக்க வந்தீங்களா? இருக்காரு. உள்ளெ போங்க.

அடுத்த அறை, அதற்கடுத்த அறை என்று இருட் படலங்களைத் தாண்டிக் கூடத்துக்குள் பிரவேசித்தார் ஹாலாஸ்யம். கூரையில் பதிக்கப்பட்ட கண்ணாடிச் சதுரங்களிலிருந்து கசிந்த வெளிச்சத்தில் கூடம் ஒரு மாயவெளி போல மயங்கியிருந்தது. ஊதுபத்திப் புகை கனத்திருந்தது. பூக்களின் கலவையான மணமும் ஊதுபத்தி வாசனையும் கிறக்கின. மிதமான வேகத்தில் ஆடிக்கொண்டிருந்த ஊஞ்சலில் உட்கார்ந்திருந்த நபர் கண்களை மூடியிருந்தார்.

அட, முத்துச்சாமி!

ஊஞ்சலுக்கு முன்னால், இருபுறமும் இருந்த தூண்களில் சாய்ந்து உட்கார்ந்திருந்தார்கள் நாலைந்து பேர். ஊஞ்சலுக்கு நேர் எதிரே, மடியில் பிரித்து வைத்த புத்தகமொன்றிலிருந்து வாய் விட்டு உரக்க வாசித்தார் ஒருவர்.

அன்னை எத்தனை எத்தனை அன்னையோ,

அப்பன் எத்தனை எத்தனை அப்பனோ,

பிள்ளை எத்தனை எத்தனை பிள்ளையோ,

பெண்டிர் எத்தனை எத்தனை பெண்டிரோ,

முன்னம் எத்தனை எத்தனை சென்மமோ,

மூடனாய் அடி யேனும் அறிந்திலேன்,

இன்னம் எத்தனை எத்தனை சென்மமோ,

என் செய்வேன் கச்சி ஏகம்ப நாதனே.

நாலைந்து முறை திரும்பத் திரும்ப வாசித்தார். முத்துச்சாமியின் மூடிய கண்களிலிருந்து கண்ணீர் பெருக்கெடுத்துக் கன்னங்களில் வழிந்தது. ஆகட்டும் ஆகட்டும் என்பதுபோலத் தலை ஆடியது. கிறாப் தலை. தூய வெண்ணிற வேஷ்டி ஊஞ்சலிலிருந்து தரை வரை வழிந்திருந்தது. இடது தோளில், அழுத்தமாகப் பச்சை நிறக் கரை போட்ட வெண்ணிற அங்கவஸ்திரம் கிடந்தது. கோலிக்குண்டு பருமன் இருந்த, தங்கத்தில் கோர்க்கப்பட்ட உருத்திராட்சங்கள் கழுத்தில் சரமாகத் தொங்கின.

தரையில் உட்கார்ந்திருந்தவர்களில் ஒருவர் தலைதூக்கிப் பார்த்தார். ஹாலாஸ்யத்தை அருகில் வந்து அமரும்படி சைகை செய்தார். ஹாலாஸ்யம் நிலைவாசலை விட்டு உள்ளே சற்று நகர்ந்தார். உட்காரவில்லை.

முத்துச்சாமியின் கண்கள் திறந்தன. நீர் தளும்பும் கண்கள் எதிர்ச் சுவரை வெறித்தன. சுவரைப் பார்ப்பது போலின்றி சுவருக்கூடாகத் தெரியும் சூன்யவெளி ஒன்றை, உணர்ச்சி களற்றுப் பார்ப்பது போலிருந்தது முகம். ஆமாம், ஆமாம் என்று தலை அசைந்தது. ஓரிரு கணங்களுக்குப் பிறகு முகத்திலிருந்த வெறுமை பின்வாங்கிக் கொண்டது. சலனமுற்ற பார்வை, வாசித்தவர் மேல் படிந்தது. மெல்ல, ஒவ்வொருவரையாகப் பார்த்து நகர்ந்தது. ஹாலாஸ்யத்தின் மேல் நிலைத்தவுடன் கண்களில் ஒளி கூடியது.

ஆலாஸ்யம்... வந்துவிட்டீரா... வாரும். வந்து உட்காரும்.

எங்கே உட்காருவது? கலாசாலைத் தோழன் அருகில் ஊஞ்சலிலா, தொண்டர்களுடன் தரையிலா... குழப்பத்தை உடனடியாகப் புறக்கணித்து, தரையில் உட்கார்ந்தார்.

கொஞ்சம் முன்னுக்கு வாரும்.

உட்கார்ந்தபடியே நகர்ந்து ஊஞ்சலுக்கு அருகில் வந்தார் ஹாலாஸ்யம். தரையில் அமர்ந்து வாசித்தவர்,

சாமீ, நான் உத்தரவு வாங்கிக்கவா?

என்றார். இடதுகை நெஞ்சின் குறுக்காகவும், வலதுகை வாயை மூடுவது போன்ற பாவனையிலும் இருந்தன. முத்துச்சாமி தலையசைத்தவாறே மற்றவர்களையும் பார்த்தார். அவர்கள் எழுந்து வெளியேறினர்.

சொல்லும், ஆலாஸ்யம். ஒரு வழியாக வந்துவிட்டீர்.

ஆமாம்.

கவலைப்படவேண்டாம். இனி நாம் பார்த்துக்கொள்வோம்.

ஹாலாஸ்யம் மௌனமாக இருந்தார். இங்கே வந்ததிலிருந்து ஒரு விஷயம் புலனாகிறது. மனத்தில் தத்தளிப்பு அடங்கிவிட்டது. நிஜமாகவே அப்படித்தானா, அல்லது நானாக அப்படி நினைத்துக் கொள்கிறேனா?

கொஞ்ச நாளைக்கு முன்னாடி தாயார் வந்திருந்தார்கள். அவர்களிடம் விசாரித்தோம். போன வாரமே எதிர்பார்த்தோம். கொஞ்சம் பிந்தி விட்டீர்.

குழந்தை போலச் சிரித்தார் முத்துச்சாமி.

இனி உமக்கு சர்க்கார் உத்தியோகம் லபிக்காது. எம்மோடேயே இருந்துவிடும்.

ஹாலாஸ்யத்துக்குத் தூக்கிவாரிப்போட்டது. என்ன சொல்வது என்பது தெரியாமல் மௌனமாக இருந்தார். வந்திருக்க வேண்டாமோ என்று ஓடியது சிந்தனை.

இன்றில்லாவிட்டால் நாளை வந்திருப்பீர்.

என்று சொல்லிவிட்டு விழுந்து விழுந்து சிரித்தார் முத்துச்சாமி.

குடை பிடித்துப் பார்க்கலாம். வீட்டைவிட்டு வெளியேறாமல் இருக்கலாம். மழையை நிறுத்த முடியுமா ஓய்!

அங்கங்கே சிவப்புத் தீற்றல்கள் படிந்த வெள்ளைச் சுவர்களைப் பார்த்துக்கொண்டிருந்தார் ஹாலாஸ்யம். கூடத்தின் மையத்தில் சுவரில் சிறு மாடம் ஒன்று குழிக்கப்பட்டு, அதனுள் ஒரு சிவலிங்கம் வைக்கப்பட்டிருந்தது. அதன் உச்சியை வைத்துத்தான் லிங்கம் என்று யூகிக்கவேண்டும். புஷ்பக் குவியலில் மறைந்திருந்தது ஆவுடை.

கவலைப்படாதேயும். சர்க்கார் கஜானாவிலேருந்து வரும்படி வர்றதுக்குத்தான் யோகமில்லையே யொழிய, சம்பாத்தியத்துக்குக் குறைவிருக்காது. கல்யாணம் காட்சி, குடும்பம் குட்டி என்று அமோகமாய் இருப்பீர்.

ஹாலாஸ்யம் பதில் சொல்லாமல் இருந்தார். முத்துச்சாமி மூச்சுவிடும் சப்தம் பெரிதாகக் கேட்டது.

இன்னும் சமாதானமாகவில்லை உமக்கு. இல்லையா. ஆலாஸ்யம், நாம் பழைய முத்துச்சாமியில்லை. என்ன அப்படிப் பார்க்கறீர்? புது முத்துச்சாமியும் இல்லை. இப்போது நாம் வந்து சேர்ந்திருக்கும் ஸ்தானத்துக்குப் பெயரே வேறே. அதையெல்லாம் சாவகாசமாகச் சொல்கிறோம். இனி, உம்முடைய ஜீவனோபாயத்தின் பொறுப்பு எம்மைச் சேர்ந்தது.

ஆகட்டும் என்று தலையசைத்தார் ஹாலாஸ்யம். வீட்டின் பின்கட்டிலிருந்து பச்சைக்கற்பூர மணமும், நெய் வாசனையும் கலந்து வெளியேறி வந்தது.

மூன்றாந்தலில் அருணாசலம் செட்டியார் என்று ஒருத்தர் இருக்கிறார். இங்கே வந்துபோகக் கூடியவர். கோடீஸ்வரர். அவருடைய சொத்துக்களைப் பரிபாலிக்க நாணயமான ஆள் வேண்டும் என்று வெகு நாளாய்க் கேட்டுக்கொண்டிருக்கிறார். உம்மைவிடப் பொருத்தமான ஆள் ஏது? நாம் சொன்னால் தட்ட மாட்டார். நீர் போலீஸ் உத்தியோகத்தில் எவ்வளவு சம்பளம் வாங்கினீரோ, அதைப் போல இரண்டு மடங்கு கொடுக்கச் சொல்கிறோம். போதுமா.

பட்டணத்தில் போய் பி.ஏ. வரைக்கும் படித்து முடித்தது, செட்டியாரிடத்தில் பற்று வரவு எழுதத்தானா என்று ஏக்கமாக இருந்தது ஹாலாஸ்யத்துக்கு. ஆனால், முத்துச்சாமியின் குரலில் இருந்த ஏதோ ஒரு ஆகர்ஷணம் மறுக்க விடாமல் தடுத்தது. மனத்தில் ஆழத்திலிருந்து ‘ஒத்துக்கொள், ஒத்துக்கொள்’ என்று அரற்றியது ஒரு குரல்.

இன்னமும் சம்மதப்படவில்லை உமக்கு. இல்லையா. சரி. விடும். நிதானமாக யோசித்துச் சொல்லும். ஒரு அவசரமுமில்லை. ஆனால் ஒன்று. செட்டியாரிடம் பகுதி நேர வேலைதான் உமக்கு. நம்மிடமும் வேலை இருக்கிறது. அதற்கு நாம் சம்மானம் எதுவும் தரப்போவதில்லை. உம்மோடே யிருப்போம். அவ்வளவுதான்.

முத்துச்சாமியின் குரலில் சிறு குறும்பு இருந்தது. அவர் இதைச் சொன்ன மாத்திரத்தில் தனக்குள் எதுவோ குளிர்ந்தது போல உணர்ந்தார் ஹாலாஸ்யம். மனதில் நிகழ்ந்து கொண்டிருந்த சலனங்கள் யாவும் அடங்கி, அகல் விளக்கின் அசையாச் சுடர் போல நிலைத்து நின்ற உணர்வு.

ஆலாஸ்யம். நம்மைத் தேடி அநேகர் வருகிறார்கள். ஸந்நிதானம் என்கிறார்கள். ஸந்நிதானத்துக்கு ஏதாவது உபகாரம் புரிந்துவிட்டு,

அதை விடக் கூடுதலான ஆதாயம் கிடைக்காதா என்று சுற்றிச் சுற்றி வருகிறார்கள். ஆனால், நம்முடைய மனோகதியே வேறு. சில தரிசனங்கள் கிடைத்திருக்கின்றன. அதையெல்லாம் விசேஷமான மனமுடைய ஒருத்தருடன் பகிர்ந்துகொண்டால் தேவலை என்று தோன்றும், சில சமயம். அதற்குகந்த ஸஹிருதயர்கள் யாரும் இதுவரை கிடைக்காதிருந்தது. நீர் வருகிறீர் என்று உதயமானதும், நிச்சிந்தையாகிவிட்டோம் நாம். அந்தக் காலத்தில் கற்றுச்சொல்லிகள் என்று இருப்பார்கள். ஆசான் சொல்வதைச் சுவடிகளில் குறிப்பெடுப்பதும், செப்பனிட்டு மனனம் செய்வதும், தேவைப்படும்போது வியாக்யானம் செய்வதும் அவர்கள் சேவை. நீர் நம்முடைய கற்றுச்சொல்லியாக இருக்கவேண்டும் என்பது நம்முடைய விருப்பம். யோசித்துச் சொல்லும்.

இந்த ஆலோசனை சரியானது என்று பட்டது ஹாலாஸ்யத்துக்கு. அம்மாவிடமும் கலந்து பேசலாம். காதில் கேட்ட உடனே தனக்கு என்ன தோன்றுகிறதோ அதைச் சொல்வாள் அம்மா. அது மிகச் சரியாய் இருக்கும். அவளுடைய உள்ளுணர்வின் பலம் அப்படி.

நீர் எம்மை 'அடா, முத்துச்சாமி' என்று அழைப்பதுதான் எமக்கு உவப்பானதாக இருக்கும். ஆனால், அது சாத்தியமில்லை இப்போது. நாம் வந்து சேர்ந்த ஸ்தானத்தின் தன்மை அப்படி. தவிர, நாம் முத்துச்சாமி கிடையாது. ஆணும் பெண்ணுமற்ற, தானுமற்ற ஒன்றை, அடா என்றும், பெயர் சொல்லியும் அழைப்பதெப்படி!

பின்கட்டிலிருந்து பரிசாரகர் வந்து கூடத்து நிலைப்படியருகில் நின்றார். லேசாகக் கனைத்தார்.

சரி, நீர் கிளம்பும். நாளை மறுநாள் சாயங்காலம் எட்டரை மணிக்கு மேல் வாரும். அதற்குள் செட்டியாரிடம் நாம் பேசி வைக்கிறோம்.

ஊஞ்சலிலிருந்து எழுந்தார். ஹாலாஸ்யம் தானும் எழுந்தார். தொடர்ந்து சம்மணமிட்டுத் தரையில் உட்கார்ந்திருந்ததில் கால்கள் லேசாக மரக்கத் தொடங்கியிருந்தன.

பழைய முத்துச்சாமி இல்லை இது. பாஷை மாறியிருக்கிறது. முகபாவனைகள் மாறிவிட்டன. குரலின் த்வனி மாறிவிட்டது. வார்த்தைகளில் உள்ள வாஞ்சையும் கனிவும் தாளமுடியாததாய் இருக்கிறது. அதே சமயம் பாஷையில் ஒருவிதமான மர்மமும் சூழ்கிறது. படிக்கிற காலத்தில் இருந்த நிம்மதியற்ற இளைஞன் இல்லை. யுகக்கணக்காக வாழ்ந்து தீர்த்த அனுபவஸ்தனின் முன்னிலையில்

இருப்பதுபோல இருக்கிறது. உடன் பேசிக்கொண்டிருக்கும்போது, மனம் லேசாகிக்கொண்டே போவது தெரிகிறது. இத்தனைக்கும் லௌகீகமான விஷயங்கள்தாம் பேசிக்கொண்டிருந்தார். மனமற இருந்ததுபோல இருக்கிறது.

சரி. கேட்போம். அம்மாவிடம் கேட்டால் ஒரு தெளிவு பிறந்துவிடும்.

வெய்யில் கடுமையாகக் கனத்திருந்தது. எட்டி நடந்தார்.

## அத்தியாயம். 15

மடத்துத் திண்ணையில் கருங்கல் பாவியிருந்தார்கள். மார்கழி மாதத்தின் குளிர் முன்னதாகவே கருங்கல்லில் ஏறியிருந்தது. மடத்தின் உள்ளிருந்து பச்சைக் கற்பூர வாசனை வெளியேறி, வாசலில் போட்டிருந்த பிரும்மாண்டமான தேர்க்கோலத்தின் மேல் படிந்திருந்ததாகத் தோன்றியது. உள்ளேயிருந்து ஒரு பெண் வந்தாள். பாவாடை தாவணியில் ஒல்லியாகவும் வெளேரென்ற நிறத்துடனும் இருந்தாள். கையில் கொண்டுவந்த பித்தளைக் குத்துவிளக்கை, கோலத்தின் தேர்த்தட்டு மேல் வைத்துவிட்டுப் போனாள்.

அவள் போனதும், எங்கிருந்தோ ஒரு காக்கை வந்தது வாசலுக்கு. ‘வாமன ஸ்வாமிகள் அதிஷ்டானம்’ என்று பொறித்த கருங்கல் பதித்த சிமெண்ட்டுத் திண்டின் மேல் உட்கார்ந்து ஹாலாஸ்யத்தைக் கோணல் பார்வை பார்த்தது.

> வக்கீல் ஸார் சங்கத்துக்குப் போயிருக்கார். ஆறரை மணிக்கு வருவார். நீங்க உள்ளே வந்து உக்காருங்களேன்.

என்றுதான் சொன்னார் அந்தப் பெரியவர். அவருடைய வெற்றுடம்பில் போடப்பட்ட பட்டைகளிலிருந்து விபூதியின் அடர்த்தியான நறுமணம் வீசியது.

திண்ணையில் உட்கார்ந்தபடி வேடிக்கை பார்த்துக்கொண்டிருப்பது நன்றாக இருக்கிறது. சாலையில் திருப்புவனம் நோக்கிச் செல்லும் வாகனங்களின் நடமாட்டம், அகலமான பிரம்புத்தட்டில் பூச்சரங்களை வைத்து விற்றுக்கொண்டு போகும் பெண், வாசலில் முளைத்து மடத்துக்குள் நுழைந்து காணாமல் போகும் ஓரிருவர், மடத்தின் முன்புற ஜன்னல்களின் வழி வெளியேறும் சாம்பிராணிப் புகை, உள்ளே யாரோ ஹார்மோனியக் கட்டைகளைப் பரிசோதிக்கும் சப்தம், மிருதங்கத்தின் தொப்பியைத் தட்டிப் பார்க்கும் ஓசை. சடாரென்று ஒரு கணீர்க் குரல் எழும்பி உயர்ந்தது.

> அருட்ஜோதி தெய்வம் - என்னை

ஆண்டு கொண்ட தெய்வம்...

கூட்டக் குரல்கள் பின்தொடர்ந்தன. ராகத்தை மனம் உடனடியாகக் கண்டுகொண்டது. ஸாரங்கா. அந்திப் பொழுதின் இளம் இருட்டுடன், ஸாரங்காவின் குழைவும், பச்சைக்கற்பூர மணமும், சாம்பிராணிப் புகையும், இந்தப் பொழுதை ஒரு மாயவேளையாய் ஆக்குகின்றன. ‘பிரபஞ்சக் கச்சேரி ஒன்று நிகழ்ந்துகொண்டிருக்கிறது’ என்று தன்னிச்சையாக ஒரு வாக்கியத்தை உருவாக்கியது மனம்.

... அப்போது மடம் இங்கேயில்லை. வண்டியூர்த் தெப்பத்துக்கு மேல்புறம் ஒரு சிறு வீட்டில் இயங்கி வந்தது. பக்த ஸமாஜம் என்று ஒரு அமைப்பு வைத்திருந்தோம். வெள்ளிக்கிழமைகளில் நள்ளிரவு வரை பஜனை நடக்கும். பக்தர்களுக்கு அன்னதானமும் உண்டு. ஏதோ எங்களால் முடிந்த அளவு சிறப்பாகச் செய்துகொண்டிருந்தோம்.

1920ஆம் வருஷம் மாசிமாதம். ஒரு வெள்ளிக்கிழமை பஜனை முடிந்திருக்கிறது. ராத்திரி ஒரு பன்னிரண்டு மணி இருக்கும். தொன்னை நிறைந்த சர்க்கரைப் பொங்கலைக் கையில் ஏந்தி மடத்துக்கு வெளியில் வந்தேன். யாராவது இருந்தால் கொடுக்கலாமே என்று. அந்த வீட்டிலும் இதே மாதிரித் திண்ணை உண்டு. கூரையின் சார்ப்புக்குக் கீழே நீண்ட திண்ணை. திண்ணையும் பக்கச் சுவரும் பொருந்தும் இடத்தில் அவர் உட்கார்ந்திருந்தார்.

முதல் பார்வைக்கு, தூங்குகிறார் என்று தோன்றியது. பசி மயக்கம் போலிருக்கிறது, பாவம், என்று நினைத்துக்கொண்டு அருகில் போய்,

அய்யா... அய்யா...

என்று கூப்பிட்டேன். அவர் அசையவில்லை. நாலைந்து முறை கூப்பிட்டும் அவரிடமிருந்து பதில் இல்லை. தொட்டு உலுக்கினேன். சரீரம் அசைந்தது. சுவாசம் சீராக ஏறித் தாழ்ந்துகொண்டிருந்தது. அவரிடம் சலனம் இல்லை. எனக்குள் ஒருவிதமான பீதி உயர்ந்தது.

வாசலில் சப்தம் கேட்டு என் பின்னால் வந்து நின்றிருந்த கோபுளா. பாலகிருஷ்ணய்யர் - அவர்தான் இப்போது ஸௌராஷ்டிர சங்கத் தலைவராய் இருக்கிறார் -

விடுங்க நீலகண்டன். அவர் தியானத்தில் இருக்கிற மாதிரித் தோணுது.

என்றார். எனக்கு அந்த இடத்தை விட்டு நகரமுடியாதபடி கால்கள் பின்னிக்கொண்ட மாதிரி இருந்தது. விடியும்வரை அங்கேயே

உட்கார்ந்திருந்தேன். மற்றவர்கள் போய்விட்டனர். மடத்துக் காவல்காரன் நல்லசிவம் மட்டும் என்னோடு உட்கார்ந்திருந்தான். இருவருமே சற்று கண்ணயர்ந்திருப்போம் போல. மானாமதுரைப் பாஸஞ்சர் ரயில் கூவும்போதுதான் தெரியும்.

அவர் அதே இடத்தில் அதே நிலையில் உட்கார்ந்திருந்தார். அவரைப் பார்க்கப் பார்க்க விநோதமான உணர்ச்சிகள் எனக்குள் திமிறின. பயம் ஒருபக்கம். மறுபக்கம், ஏதேதோ சுலோகங்கள் உள்ளே உருள்வது மாதிரி பிரமை. ஏனோ, அவர் கண்ணைத் திறந்து என்னைப் பார்க்கவேண்டும் என்று ஆசையாக இருந்தது. வருஷக்கணக்காக அவருடனே இருக்கப் போகிறேன் என்பதோ, அவருடைய புகழைப் பரப்புவதே என் வாழ்க்கைப் பணியாகப் போகிறது என்றோ எனக்கு அப்போது தெரியவில்லை.

அன்றைக்குக் கோர்ட்டில் எனக்கு முக்கியமான வாய்தா ஒன்று இருந்தது. நல்லசிவத்தைப் பார்த்துக்கொள்ளச் சொல்லிவிட்டுக் கோர்ட்டுக்குப் போய்விட்டேன்.

சாயங்காலம் திரும்பி வரும்போது அவர் அதே இடத்தில் அதே நிலையில் உட்கார்ந்திருந்தார். இப்படியே ஆறு நாள் உட்கார்ந்திருந்தார். நம்மால் அப்படி உட்கார முடியாது ஸார். ஒரு மணி நேரம் உட்கார்ந்து பாருங்கள், முழங்காலுக்குக் கீழே மரத்துவிடும். அப்புறம் குளிர்ந்த ஜலத்தை ஊற்றித்தான் காலுக்கு உணர்ச்சியைக் கொண்டுவரமுடியும்.

அவர் உட்கார்ந்திருக்கிறார். சொல்லவே சங்கடமாகவும் பயமாகவும் இருக்கிறது. அவர்மேல் எறும்புகள் ஊர ஆரம்பித்துவிட்டன. இரண்டாவது நாளிலிருந்தே விஷயம் ஊரில் பரவ ஆரம்பித்திருந்தது. அக்கம் பக்கத்திலிருந்து ஜனங்கள் வரத் தொடங்கினார்கள். இந்தப் பக்கம் விருதுநகரிலிருந்தும் அந்தப் பக்கம் திண்டுக்கல்லிலிருந்தும் கிழக்கே மானாமதுரையிலிருந்தும் ஆட்கள் வந்தார்கள்.

கூட்டம் சேரத் தொடங்கியதும் எங்களுக்கு வேறு விதமான கவலை கிளம்பியது. இத்தனை பேருக்கும் சாப்பாடு, தங்குமிடம் இதற்கெல்லாம் எங்கே போவது.

யோகீசுவரரின் மகிமை அதுதான். யாரும் எங்களிடம் எதுவும் கேட்கவில்லை. அவர்களைப் பரிபாலிக்கும் பொறுப்பை ஊற்றுப் பெருக்கால் உலகூட்டும் வைகை அம்மாள் ஏற்றுக்கொண்டாள். குளியலறையாகவும், கழிப்பறையாகவும், தூங்குவதற்கான பசுஞ்

சோலையாகவும், வண்டிகளையும் மாடுகளையும் ஆறவிடும் மைதானமாகவும் இருந்துதவினாள்.

தெப்பக்குளத்திலிருந்து, இந்தப்பக்கம் முனிச்சாலை, கீழவாசல், வைகைப்பாலம், கோரிப்பாளையம் வழியாகத் தமுக்கம் தாண்டித் தல்லாகுளம் வரை மனிதத் தலைகளாகத் தெரிந்த வெள்ளிக்கிழமை அது. அழகர் ஆற்றில் இறங்குகிற அன்று மதுரையைப் பார்த்ததுண்டா நீங்கள்? வருஷம் முழுக்க ஒளித்து வைத்திருந்த குதூகலம் மொத்தத்தையும் அந்த ஒரு நாளில் அவிழ்த்துக் கொட்டும் உற்சாகம், மதுரையின் ஒவ்வொரு அங்குலத்திலும் வெளிப்படும். அதுமாதிரியான உற்சவம் அன்று.

வெள்ளிக்கிழமை ராகுகாலம் முடிகிறது. தெப்பக்குளத்தின் நீரலைகள் உச்சி வெய்யிலின் கிறக்கத்தில் சலனமில்லாமல் கிடக்கின்றன. யோகீஸ்வரர் அமர்ந்த திண்ணையின் முன்பாகப் போடப்பட்ட கீற்றுப் பந்தலில் அசாத்திய நெரிசல். குறைந்தது மூவாயிரம் பேராவது இருப்பார்கள். துளி ஓசை கிடையாது.

மடத்துக்குள் உச்சிக்காலப் பூஜை நடந்துகொண்டிருக்கிறது. கை மணியின் கிணுகிணுப்பு வெளியேறிப் பந்தலுக்குள் பரவுகிறது.

யோகீஸ்வரர் கண்திறந்தார். மின் அதிர்ச்சி போல ஒன்று என்னைத் தாக்குவதை உணர்ந்தேன். பந்தலிலிருந்த ஆண்பெண் அனைவருமே அதை உணர்ந்ததாகப் பிற்பாடு சொன்னார்கள். திறந்த கண்களிலிருந்து காந்தம் போலப் பாய்ந்த பார்வையை இப்போது நினைத்தாலும் ரோமாஞ்சனமாகிறது. பெண்கள் குலவையிட்டார்கள். சிலர் சந்நதம் வந்து தலை சுற்றி ஆடத் தொடங்கினார்கள்.

சுவாமிகள் தண்ணீர் கேட்டார். தாமிரக்குடங்களில் கிட்டத்தட்ட பதினாறு குடம் தண்ணீர் குடித்தார். ஊற்றுக்குள் நீர் திரும்பிப் பாய்வது போன்ற காட்சி அது. பிறகு தன்னை நீராட்டும்படி சைகை செய்தார். சரியாக நூற்றி இருபத்து மூன்று குடங்கள் வைகையிலிருந்து நீர் கொண்டுவந்து அவருக்கு அபிஷேகம் செய்தோம்.

நீராட்டு முடிந்த பின், மடத்தின் உள்ளே சென்றார் சுவாமி. திரும்ப வெளியேறும்போது சூரியன் இறங்கத் தொடங்கியிருந்தது. ஆள் எப்படி இருந்தார் என்று நினைக்கிறீர்கள்? தேஜோமயம். இத்தனைக்கும் யோகீசுவரர் நல்ல குள்ளம். நாலடி உயரம்தான் இருப்பார். வரிச்சுக்குச்சி மாதிரி ஒல்லியான உடம்பு. விலா எலும்புகளை எண்ணலாம்.

மடத்தின் வாசல் திண்ணையில் விசுவரூபம் போல ஓங்கி நின்றவர்,

கூடியிருந்த ஜனங்களைப் பார்த்து ஒரே வாக்கியம் பேசினார்.

எல்லாரும் ஷேமமாய் இருங்கள்.

அவருடைய குரல் பந்தலின் கடைசியில் இருந்தவர் வரை துல்லியமாகக் கேட்டது.

தமுக்கத்தில் நின்றிருந்த சிலர் தங்களுக்கும் கேட்டதாகச் சொன்னார்கள். அதை நீங்கள் பொருட்படுத்த வேண்டியதில்லை. நமது ஜனங்களைக் கேட்கவா வேண்டும். ஈரைப் பேனாக்கி, பேனைப் பெருமாளாக்கிவிடக் கூடியவர்கள். இவர்கள் ஒன்றுக்குப் பத்தாகச் சொல்லப் போய்த்தான் இந்த மண்ணில் நாஸ்திகம் தலையெடுக்க ஏதுவாகிவிட்டது. விடுங்கள். என்ன சொல்லிக்கொண்டிருந்தேன்?..

சுவாமிகள் கூட்டத்தைப் பார்த்துப் பேசினது.

...ஆமாம்.

அதன் பிறகு அவர் பேசவில்லை. சரியாக ஏழு மாதம் பதினாறு நாள் கழித்துத்தான் பேசினார். அப்போதுதான் அவரைப் பற்றி நாங்கள் அறிந்துகொள்ளத் தொடங்கினோம்.

அதெல்லாம் பெரிய கதை. நாளைக்குச் சாவகாசமாகச் சொல்கிறேனே. சம்சாரத்துக்கு உடம்பு சரியில்லை. சற்றுச் சீக்கிரம் வீடு திரும்பினால் தேவலை. உங்களுக்கு அவசரமொன்றுமில்லையே. தங்கிப் போகலாமில்லையா.

எனக்கு ஒரு அவசரமும் கிடையாது. தாராளமாக இருந்து போகலாம்.

உங்களுக்கு மங்கம்மா சத்திரத்தில் ஜாகை அமைத்துத் தருகிறேன். ஆகாரத்தை அங்கேயே கொண்டு தரச் சொல்லி விடுகிறேன். காலையில் பார்ப்போம். ராஜாங்கம், போய் ஒரு ஜட்கா பிடித்துக்கொண்டு வா. இந்தப் பையன் உங்களுடன் வருவான். நீங்கள் எந்த ஊரிலிருந்து வருவதாகச் சொன்னீர்கள்?

பெரியகுளம்.

ஆங். சொன்னீர்களே அதுதான். பெரியகுளம். அந்த ஊருக்கு ஒரு தடவை நான் வந்திருக்கிறேன். அங்கே முத்துச்சாமி என்று ஒரு மகான் இருந்தார்.

ஆமாம்.

அவரைப் பார்க்கத்தான் வந்திருந்தேன். அந்தச் சமயம்குள்ளச் சித்தன்

சரித்திரம் என்று ஒரு புஸ்தகம் எழுதிப் பிரசுரம் செய்திருந்தேன். அது விஷயமாக அவரைப் பார்க்க வந்திருந்தேன். அவரை உங்களுக்குப் பழக்கம் உண்டோ?

உண்டு.

சௌக்கியமாக இருக்கிறாரா?

இல்லை. ஸமாதியடைந்துவிட்டார்.

அடடா. எப்போது?

ஆறுமாசம் ஆகிறது.

## முதல் பதிப்பின் முன்னுரை

மேற்கே விஞ்ஞானம் நவநவமான மார்க்கங்களை அபேட்சித்த வண்ணம் நகர்கிறது. சமீப காலங்களில் அங்கே பெரும் கியாதி பெற்று வரும் ஶ்ரீ எய்ன்ஸ்த்தீன் என்பார், காலம் என்பது வளைந்ததொரு பிராந்தியம் என்பதான அபிப்பிராயத்தை வலியுறுத்தி வருகிறார். இது சற்றே நூதனமான கிலேசங்களை உற்பத்தி செய்யும் அபிப்பிராயம்.

காலத்தை நீளமான ஒரு நாடா என்பது போல அறிந்து வந்திருக்கிறோம். உதாரணமாக, ஹாலாஸ்யமான நான் ஜனனம் எடுத்த வருஷம், திரும்ப வருவதற்கில்லை. ஒரு முறைதான் வரும், நடப்பு வருஷத்துக்கும் என் ஜனன வருஷத்துக்கும் மத்தியில் ஐம்பத்திச் சொச்சம் வருஷங்கள் இருக்கின்றன என்பது வெள்ளிடை மலையான ஸங்கதி.

ஆயின், ஶ்ரீ எய்ன்ஸ்த்தீன் அவர்களுடைய கூற்றுப்படி, காலம் என்ற அரூப வஸ்து வளைந்த நாடாவாக ஆகிறது. வளைக்கப்பட்ட நாடாவின் இரு முனைகள் அடுத்தடுத்து இருப்பது போல, ராஜ ராஜ சோழன் தஞ்சை பிரகதீஸ்வரர் கோயிலைக் கட்டிய வருஷமும், மதறாஸில் எம்டன் குண்டு போட்ட வருஷமும் அடுத்தடுத்துக் கிடப்பதாய் ஆகிறது.

காலம், இடம் பற்றிய அவதானங்கள் எத்தனை எத்தனை உண்டான பின்னும், முழுக்கத் திறக்கப்படாத கர்ப்பக்கிரஹம் போலவே மர்மம் நிரம்பினதாய் இருக்கிறது அவற்றின் அந்தரங்கம்.

என் ஆருயிர் நண்பரும், இள வயதிலேயே இல்லற மார்க்கத்தைத் துறந்தவருமான ஶ்ரீ முத்துச்சாமி அவர்கள் காலம், இடம் பற்றிய மர்மங்களைப் பற்றிப் பூடகமான விதத்தில் சில தரிசனங்களை வழங்கியவர்.

இந்தப் புஸ்தகத்தை எழுதுவதற்கான வித்து எனக்குள் விழுந்தது ஒரு மயானக்கரையில்...

ஶ்ரீ முத்துச்சாமியின் பூதவுடல் புதைக்கப்பட்டபோது, நான் ஆழ்ந்த துக்கத்தில் இருந்தேன். ஶ்ரீ முத்துச்சாமியின் சிரசில் ஒரு

முழுத்தேங்காயை உடைத்தனர். கபாலத்தில் கீறல் உண்டானது. அவரை அமர்ந்த நிலையில் குழிக்குள் இறக்கினர்.

என் அந்தராத்மாவில் சிறு சலனம் உண்டானது. அவருடைய ஆன்மா பூத சரீரத்திலிருந்து விடுபட்டு வெளியேறி, மயானத்தின் ஒரு மரக்கிளையில் உட்கார்ந்து, நடக்கிற யாவற்றையும் வேடிக்கை பார்த்துக்கொண்டிருக்கிறது என்று தோன்றியது.

எது ஸ்ரீ முத்துச்சாமி, குழிக்குள் இறக்கப்பட்ட பூத சரீரமா, அசரீரியாய் இருக்கும் ஆன்மாவா? என்ற வினாவும் எழுந்தது.

ஸ்ரீ முத்துச்சாமி, காலமற்ற பெருவெளியில் நுழைந்துவிட்டார் என்று பட்டது.

சில வருஷங்கள் அவருடன் நிகழ்த்தக் கிடைத்த சம்பாஷணைகளைப் பதிவு செய்துவிடும் உத்தேசம் உருவான ஸந்தர்ப்பம் அது.

ஸ்ரீ முத்துச்சாமி ஒரு மஹான். பிறர் நலம் கருதிய பெருந்தகையாளர். துன்புற்று வரும் ஹிருதயங்களின் மனோபீஷ்டங்களைப் பூர்த்தி செய்து தந்த வள்ளல். ஆறாத ரணங்களை ஆற்றும் ஔஷதமாய்த் துலங்கியவர். அவருடன் ஸல்லாபிக்கும்போது தம்முடைய மனம் லேசாகிக்கொண்டே போவதை அனுபவித்தவர்கள் அநேகர். அத்தகைய பாக்யம் வாய்க்கப் பெற்றவர்களில் அடியேனும் ஒருவன். அவருடைய தரிசனாதிகளுக்குத் திருஷ்டாந்தமாய் ஓரிரண்டு வாக்கியங்களைப் பிரஸ்தாபிக்க எண்ணுகிறேன்.

ஒரு ஸமயம் ஸ்ரீ முத்துச்சாமி கேட்டார்.

ஆலாஸ்யம், நீர், நாம், பெரியகுளம், நிலக்கோட்டை, நாமக்கல், ப்ரிட்டீஷார், மகாயுத்தம் என்பதான பல்வேறு சம்பவங்களும் யாரோ ஒருவரின் மஹோந்நதமான சொப்பனம் என்பதில் உமக்கு ஆட்பேசணையுண்டா? சொப்பனத்தைத் தரித்தவனின் ஸ்வபாவம் மாற்றமுறும்போது சொப்பனத்தின் தன்மையும் மாறிவிடுமல்லவா?

அன்றைய ஸம்பாஷணையின் இடையில் அவரைக் கேட்டேன்: ‘நீங்கள் சொல்லும் விநோதங்களில் பலவும் நம்பத் தகுந்ததாக இல்லையே.’

அவர் மந்தஹாஸத்துடன் உரைத்தார்:

ஆலாஸ்யம், சாரைப்பாம்பின் பாஷையில் உயரம் என்ற பதமே கிடையாது. காரணம், அதன் தரிசனத்தில் நீளமும் அகலமும்தான் உண்டு. அப்படியிருக்க, உயரம் என்ற அனுபவமே சந்தேகத்துக்குரியது

என்று சாரைப்பாம்பு சொன்னால், அதைத் தமாஷ் என்றுதான் கொள்ளவேண்டும். சாரையின் தர்க்க ஸாஸ்திரத்தில் உயரம் என்ற ஸங்கதி கிடையாது என்பதால், பூலோகத்தில் உயரம் என்ற அனுபவமே இல்லை என்று அர்த்தமாகிவிடுமா?

மற்றொரு சமயம் சொன்னார்:

ராமன் துரத்தின மானுக்கும் இன்று சிறுமலைக் காடுகளில் திரியும் மானுக்கும் வித்யாசம் உண்டா. கலியுகத்தின் ஆரம்பத்தில் தர்ம புத்திரனின் சபைக்கு வந்த கீரிப்பிள்ளைக்கும் கடைவீதியில் நாகத்துடன் சண்டையிடுவதற்காகப் பாம்பாட்டி கட்டிவைத்திருக்கிறானே அந்தக் கீரிக்கும் பேதம் உண்டா? குருக்ஷேத்திரத்தில் யுத்தம் செய்த யானையும், லங்கையில் ராவணாதிகளுடன் சண்டையிட்ட யானையும், நம் ஊர்ப் பெருமாள் கோயிலில் தென்னங்கீற்றைத் தின்னும் யானையும் உணர்வளவில் வேறு வேறுதாமா?

பரிணாமத்தின் அடிப்படையில், நவநவமாக மாறிவருவது மனுஷ்யர்களின் ப்ரக்ஞை மட்டும்தானே. அப்படி மாறி வருங்காலை, நுண்மையான பல விருத்தாந்தங்களைச் சேகரித்து வரும் காரணத்தால், தம்மிடத்தே இயற்கையாகத் தோன்றிய சில மனோபலங்களை மனுஷ்யர்கள் இழந்து வருகிறார்கள் என்று சொல்கிறது தெய்வவாக்கு.

இழந்ததை மனுஷ்யர்கள் திரும்பப் பெறுவது எங்ஙனம் என்பதே சதா சர்வ காலமும் நம்முடைய ஸ்மரணையாக இருக்கிறது.

மேற்சொன்னவாறு, 'தமக்கென வாழாப் பிறர்க்குரியாளர்' ஸ்ரீ முத்துச்சாமி அவர்கள். அன்னாரின் சரித்திரத்தைத் தமிழில் யாக்கும் பாக்யம் அடியேனுக்குச் சித்தியாயிற்று என்பது தெய்வ சங்கல்பம் அல்லாது வேறென்ன?

இச்சரித்திரத்தை இயற்றும் பொருட்டு, தமிழ் மாகாணத்தின் பல ஜில்லாக்களிலும், பல மாதங்கள் அலைந்து திரிந்து குறிப்பெடுத்தேன். அவற்றைத் தொகுப்பதற்கு இன்னும் ஒரு வருஷம் பிடித்தது.

மட்டுமல்லாது, ஸ்ரீ முத்துச்சாமி ஜீவியவந்தராய் இருக்கும்போது, அவருடன் தினசரியும் கேட்டுவந்த அவரது வாழ்க்கைக் குறிப்புகளையும் பொருத்தமான இடங்களில் கோத்திருக்கிறேன்.

இந்தப் புஸ்தகத்தை எழுதும்போது அடியேன் அனுஷ்டித்த யுக்திகள் சில வருமாறு:

1) ஸ்ரீ முத்துச்சாமியின் சரித்திரத்தைப் புதினம் போலே எழுதினால் வாசிக்க சுவாரஸ்யமாய் இருக்கும் என்றெண்ணி, அதுபோலே அமைத்திருக்கிறேன்.

2) சம்பவ ஓட்டத்துக்கு உசிதமாக இருக்கும் என்று பட்ட இடங்களில், அடியேனுடைய வாழ்க்கையிலிருந்தும் சில தகவல்களைச் சேர்த்திருக்கிறேன்.

3) புதினம் போலே அமைத்திருக்கிறபடியால், அடியேனையும் ஸ்ரீ முத்துச்சாமியின் வாழ்க்கையில் ஊடாடின கதாபாத்திரங்களில் ஒன்றாகக் கூறியிருக்கிறேன். வாஸ்தவமும் அதுதானே.

4) சம்பவங்களை அவை நிகழ்ந்த கிரமத்திலே சொல்ல முற்படவில்லை. இங்குள்ள அத்தியாயங்களை எழுதுங்காலை, ஞாபகப்பட்சி எந்தெந்தக் கிளைகளில் அமர்ந்ததோ அவ்வவற்றை விவரித்திருக்கிறேன்.

5) பொருத்தமான இடங்களில் அன்னாரின் வசனங்களைக் கோத்திருக்கிறேன். ஸ்ரீ முத்துச்சாமியின் போதனைகளை விசேஷமாகவும், பிரத்யேகமாகவும், புஸ்தகமாக எழுதும் உத்தேசம் உண்டு. பகவான் அனுக்கிரஹத்தால், இன்னும் ஓரிரு வருஷங்களில் அது நடக்கும்.

இந்தப் புஸ்தகம் வெளிவர உதவிய மதுரை ஸெஷன்ஸ் கோர்ட்டு ஜட்ஜு ஸ்ரீமான். ஆதிகேசவன் அவர்களுக்கும், பேரையூர் ஜமீன் வம்சத்தைச் சேர்ந்த ரத்னாஹர பூபதி அவர்களுக்கும், பாஷைக் கோளாறுகளைக் கண்டு களைந்த தமிழ் வித்வான் ஸ்ரீ துரை ஸ்வாமிப் பிள்ளையவர்களுக்கும், மதுரை வண்டியூர் வாமன ஸ்வாமிகள் அதிஷ்டானத்தில் கேந்திரமான ஸ்தானம் வஹித்த வக்கீல் லேட் ஸ்ரீ நீலகண்டனுக்கும் அடியேனின் அளப்பரிய விசுவாசமும், ஸ்ரீ முத்துச்சாமி மஹாப்பிரபுவின் ஆசீர்வாதமும் அள்ளக் குறையாமல் உண்டு.

தாசன்,

மு.ஹாலாஸ்யமய்யர்

பெரியகுளம்

மதுரை ஜில்லா

4.4.1957.

## அத்தியாயம். 16

அறையெங்கும் அகிற்புகை சூழ்ந்திருக்கிறது. தூபக்கால்களில் ஏற்றிவைத்த தீபங்களின் சுடர்கள் தன்னிச்சையாக நடனமாடுகின்றன. அவற்றுக்கு இணையாக நிழல்களின் நாட்டியம்... திரைச்சீலைகளின் அழுத்தமான பச்சை நிறம் இருளின் அடர்த்தியைக் கூட்டுகிறது. தொலைவில் எங்கிருந்தோ ஒரு காற்றுக் கருவியின் கூர்மையான, மெல்லிய நாதம் அறையின் மையப் பகுதிவரை வந்து மிழற்றுகிறது.

யாரோ வருகிறார்கள். வந்தது ஒருவரல்ல இருவர். விளக்கொளி படும் இடத்தில் வந்து நிற்கிறாள் அவள். அழைத்து வந்த கிழவனை முன்பே பார்த்திருக்கிறேன். ஜஹாங்கீர் பாதுஷாவின் அவையில் துபாஷியாக வேலை பார்ப்பவன். சரளமான உருதுவும், தடுமாறித் தடுமாறி ஆங்கிலமும் பேசுகிறவன். நான் என்ன சொல்வதை இவன் என்னவாக மொழிபெயர்க்கிறானோ என்ற சந்தேகத்துடனேயேதான் நாங்கள் பேசவேண்டிவந்தது.

ஏற்கெனவே கூன்விழுந்த முதுகை மேலும் வளைத்து, ஸலாம் சொல்கிறான். கணுக்கால்வரை நீளும் அங்கியின் பின்புறம் பிதுங்குகிறது அவனது கூன். திணறும் ஆங்கிலத்தில் என்னிடம் சொல்கிறான்.

ஸாஹேபுக்கு பாதுஷாவின் அன்பளிப்பு.

அன்பளிப்பைச் சற்று ஊன்றிக் கவனிக்கிறேன். இந்துக் கோயில் தூணிலிருந்து இறங்கிவந்த சிற்பம் போல இருக்கிறாள். வெண்கல நிற உடல். நேர்த்தியாக வளைந்த புருவங்களுக்கடியில் புடைத்த விழிகள், ஒடுங்கிய இடுப்பின் உலோக வளைவு. ஒல்லியான உடல்வாகுக்குத் தகாத வகிதத்தில் அமைந்த மாபெரும் ஸ்தனங்கள். அவற்றின் மத்தியில் சரிந்திறங்கின பொற்சங்கிலியில் சிலுவை ஒன்று தொங்கியது.

என்னைத் தாண்டித் தேக்குமரக் கட்டிலின் அருகில் செல்கிறாள். கட்டிலின் ஓரத்தில் அமைந்த, சித்திர வேலை கொண்ட வெள்ளிக் குமிழின் மேல் இடது கையைப் பதித்தபடி நிற்கிறாள். நிற்கும்போது,

அவளது இடுப்பு ஒயிலாக வளைந்திருக்கிறது.

மொழிபெயர்க்கும் கிழவன் அடர்பச்சைப் படுதாவுக்குப் பின்னால் செல்கிறான்.

கப்பல் பிரயாணம் செய்யும் வணிகனாய் இருபத்தைந்து வருடங்களைக் கழித்திருக்கிறேன். எத்தனை தேசப் பெண்கள். எத்தனை நிறங்கள். எத்தனை மணங்கள். ஐரோப்பிய உடல்களில் பெருகும் லாவெண்டர் மணமோ, முல்லை மணமோ, எலுமிச்சை மணமோ இல்லை இவளிடம். அவை ரசாயன மணங்கள். என்னைத் தாண்டிச் சென்றபோது அவள் வீசிச் சென்ற பச்சிலை மணம் என்னை வசியம் செய்கிறது. அவள் வந்தவுடன் அறையில் விசித்திரமான அமைதி கவிழ்ந்துவிட்டதாகத் தோன்றுகிறது.

பேச்சு தேவைப்படாத ஒரு காரியம் கருதி வந்திருக்கும் அவளிடம் பேச வேண்டும் போலிருக்கிறது.

> உன் பெயரென்ன?

படுதாவின் பின்னிருந்து கிழவனின் மொழிபெயர்ப்புக் குரல் அரற்றுகிறது. அவளது பதிலையும் மொழிபெயர்க்கிறான்:

> அது அவசியமில்லை ஸாஹேப்.

கிழவன் அவர்கள் மொழியில் ஏதோ சொல்கிறான் அவளிடம். அவன் குரல் நைச்சியமாக வேண்டுகிறது. அவள் குரலில் வீம்பு இருக்கிறது.

> உன்னுடன் சற்றுப் பேசவேண்டும் எனக்கு.

> அவசியமில்லை ஸாஹேப்.

அவள் பேச மறுக்க மறுக்க எனக்கு ஆவல் கூடியது.

> உன்னுடைய பாதுஷா உன்னை இங்கு அனுப்பியதில் உனக்கு சம்மதமில்லையா?

அவள் மௌனமாய் இருந்தாள்.

> உனக்கு சம்மதமில்லையென்றால் நீ தாராளமாகத் திரும்பிப் போகலாம்.

> ஆமாம். இன்று போகலாம். நாளை வேறு யாரிடமாவது அனுப்புவான் பாதுஷா...

இப்போது நான் மௌனம் சாதித்தேன்.

அவனுடைய ஜனானாவில் என்னைக் கொண்டு சேர்ப்பான் என்று நினைத்திருந்தேன். வள்ளல் அவன். ஸாஹேபுக்கு வழங்கிவிட்டான் என்னை.

ஜனானா என்றால் என்ன? எதுவாய் இருந்தால் என்ன. அவளுக்கு உவப்பான இடம்...

ஓ! அங்கு போயிருந்தால் இவ்வளவு கசப்பு இருந்திருக்காது இல்லையா.

தவறாகப் புரிந்துகொண்டுவிட்டீர்கள் ஸாஹேப். இரண்டு இடத்துக்கும் வித்தியாசம் ஒன்றுமில்லை.

அப்படியா சொல்கிறாய்!

பின்னே, பாதுஷா கணவாய் வழியாக வந்தவன். ஸாஹேப் கடல்வழியாக வந்தீர்கள். இருவருக்கும் நோக்கம் ஒன்றுதான். இந்த தேசத்தை, எங்களை அடிமை கொள்வது.

என்ன சொல்கிறாய் நீ? நாங்கள் வெறும் வணிகர்கள்.

நான் காண்பது அத்தனையும் துர்நிமித்தமாகவே இருக்கிறது ஸாஹேப். அடுத்து வரும் நூற்றாண்டுகளில் ரத்தம் படியப் போகிறது இம் மண்ணில். தாயின் உடலில் தனயர்களின் ரத்தம் சிந்தவிருக்கிறது.

சற்று நேரம் அமைதியாக இருந்தோம். இவள் வெறும் பெண்ணில்லை. ஏதோ துர் ஆவி பெண்ணுருக்கொண்டு வந்திருக்கிறது. சற்று ஜாக்கிரதையாக இருக்கவேண்டும். அவள் பாதங்கள் தரையில் ஊன்றி இருக்கின்றனவா என்று பார்த்தேன்.

கணவாய் வழி வந்தவனும் சரி, கப்பலேறி வந்தவனும் சரி. ஒரு உண்மையை உணரவில்லை. பாரதத்துக்கு வருவதற்கு வேண்டுமானால் மார்க்கங்கள் பல இருக்கின்றன. ஆனால், பூமிக்கு வருவதற்கு ஒரே வழிதான் இருக்கிறது ஸாஹேப்.

என்ன சொல்கிறாய்?

தாயின் கருக்குழாய் வழி. நீங்கள் அந்தப் பாதையை நிந்திக்கிறவர்கள். ஓங்கி உயர்ந்த வேகத்திலேயே இறங்கப் போகிறது உங்கள் கொடி. இந்த மண்ணை ஆக்கிரமிக்கும் அளவு இங்குள்ள ஜனங்களின் மனங்களை உங்களால் ஆக்கிரமிக்க முடியாது. இந்த மண்ணுக்கடியில் ஒரு தீக் குழம்பு இருக்கிறது.

அதன் வெம்மை உங்களை நிம்மதியாக இருக்கவிடாது ஸாஹேப். ஆரம்ப வெற்றியை அறுதி வெற்றி என்று எண்ணிவிட வேண்டாம்.

நீ பேசுவது பொருத்தமற்று இருக்கிறது. நாங்கள் மாட்சிமை தங்கிய எலிஸபெத் ராணியாரின் அனுமதி பெற்று வாணிபம் செய்ய வந்திருக்கும் வியாபாரிகள்.

இல்லை. நீங்கள் வந்த கப்பலின் தலைவன் ஒரு கடற் கொள்ளையன். இங்கே ஒரு பழமொழி உண்டு ஸாஹேப். முயல்வேட்டைக்குச் செல்லும் நாயின் முகத்தைப் பார்த்தாலே தெரியும். எங்கள் பாதுஷாவுக்குத் தீர்க்கதரிசனம் இல்லை. உங்களைத் திருப்பியனுப்பியிருக்க வேண்டும் அவன். அவனுக்குத்தான் லாகிரிக்கே நேரம் போதவில்லையே. வெட்டியான் அயர்ந்த நேரத்தில் மயானத்தில் குடியேற வந்து சேர்ந்த நாய்கள் போன்றவர்கள் நீங்கள். நர மாமிசத்துக்கு அலைகிறவர்கள்.

அவளுடைய தீரம் எனக்குள் பேராச்சரியத்தை ஏற்படுத்தியது. நிதானமாகக் கேட்டேன்:

உன்னுடைய பாதுஷாவை அவமதிக்கிறாயே. சிறை பற்றியும் மரணம் பற்றியும் பயமில்லையா உனக்கு?

பூட்டிய அறைக்குள் பேசுவதைக் கேட்கும் அளவு பாதுஷாவின் காதுகள் கூர்மையுடையவை அல்ல ஸாஹேப்.

நீ பேசுவதை மொழிபெயர்க்கும் இந்த வயோதிகள் பாதுஷாவின் ஊழியன் அல்லவா? இவன் சென்று சொல்லமாட்டானா?

அவளிடம் என் கேள்வியைப் பெயர்க்காமல் கிழவனே பதிலிறுத்தான்:

மாட்டான்.

ஏன்.

இவன் அந்தப் பெண்ணின் தகப்பன்.

மொழிபெயர்ப்பாளன் வெளியேறும் சப்தம் கேட்கிறது. பூட்டிய அறைக்குள் கவிழ்ந்த நிசப்தம் அச்சமூட்டியது. அருகருகே இருந்தோம். ஆனால் எங்களுக்கிடையில் அசாத்தியத் தொலைவு இருந்தது. இடைவெளியை உணர்வுறுத்தி ஒரு முழு இரவு கழிந்தது அன்று.

## அத்தியாயம். 17

நூலகத்தின் முன்வாசல் மாடத்திலிருந்து குதித்திறங்குகிறது பூனை. பளீரென்ற வெள்ளை நிறம். அப்போதுதான் குளித்துவிட்டு வந்தது மாதிரி சுத்தமான வெள்ளை. நெற்றியில் சுட்டி போலக் கறுப்புத் தீற்றல். எதிர்பாராத சமயங்களில் எதிர்பாராத இடங்களில் வெளிப்பட்டுக் கடந்து போகும். நூலகத்தின் பொறுப்பாளன் தானே என்பது போலவும் பழனியப்பன் வாசிக்க வந்தவர்தாம் என்பது போலவும் மிதப்பான நடை. எப்போதுமே பழனியப்பனைக் கடந்து சென்று, தள்ளி நின்று திரும்பிப் பார்க்கும். இப்போதும் பார்க்கிறது.

*என்ன வேணும்?*

என்றார் பழனியப்பன்.

*மியாவ்.*

என்றது.

வாசலில் ஒரு கணம் நின்றார். 'வெங்கடேஸ்வரய்யர் நினைவு நூலகம்' என்ற பெயர்ப் பலகையைச் சற்று வெறித்தார். பலகையில் 'ஸ்தாபிதம்: 1956' என்று எழுதியிருந்ததில், இரண்டாவது இலக்கத்திலும் நாலாவது இலக்கத்திலும் துரு ஏறியிருந்தது. 'புதுசாய் ஒண்ணு எழுதச் சொல்லணும்' என்று நினைத்துக்கொண்டார் பழனியப்பன்.

அதற்கும் சடகோபனைப் போய்த் தொங்கவேண்டும். என்னமோ என்னுடைய வீட்டுக்கு வெள்ளையடிக்கப் பணம் கேட்டமாதிரிப் பிசுங்குவான் மனிதன். 'யார் அப்பன் வீட்டுச் சொத்துக்கு யார் அண்ணாவி' என்று ஆத்திரம் தலைக்கேறியது.

அய்யர் வாக்களித்ததே வேறு. அப்பச்சி எங்கு போனார் தெரியாது; திரும்பி வருவதற்கான வாய்ப்பு இல்லை என்று முடிவாகி நாலு வருஷம் கழித்து சிகப்பி வந்து சேர்ந்தாள். தனக்கென்று ஒரு குடும்பம் உண்டான பிறகு, இப்போதைய சம்பாத்தியம் போதுமா என்று சுணங்க

ஆரம்பித்தார் பழனியப்பன். ஒரு நாள் அய்யரைப் பார்க்கப் போன இடத்தில் அவரிடம் தன் கவலையைத் தெரிவித்தார். அய்யர் மனம் நெகிழ்ந்து சொன்னார்:

> அட கிறுக்கா. அப்பிடி ஒன்னை நான் விட்டுருவேனா? மதுரை வடக்கு மாசி வீதியிலே எனக்கு ஒரு வீடு இருக்கு பழனி. அதுல வர்ற வருமானத்தை உம் பேருக்கு எழுதி வச்சுர்றேன். நீ கிரயம் பண்ண முடியாது. ஆனா, அனுபவ பாத்தியத்தை முழுக்க முழுக்க உனக்குத்தான்னு எழுதிர்றேன். இது போக, சேவுகஞ் செட்டி வீட்டை உன் பேருக்கு எழுதி வச்சுர்றேன். போதுமா. நீ போகும்போது சடகோபனை நாளைக்கி வரச் சொல்லிட்டுப் போ.

வாசகசாலைப் பொறுப்புக்கு என்று உண்டான சம்பளத்தை விட இரட்டிப்பாகக் கிடைக்கும் வாடகை வகையில். மதுரையில், வடக்கு மாசி வீதியில் என்றால் சும்மாவா? பொன்னமராவதியில் ஒரு சொந்த வீடு. இதற்குமேல் என்ன இருக்கிறது? அய்யர்தான் எத்தனை தங்கமான மனுஷர்.

வேம்புவைப் பஞ்சாங்கம் எடுத்துவரச் சொன்னார். அதைப் பிரித்துப் பார்த்தவர்,

> பழனி, நாளைக்கி வேண்டாம். அஷ்டமியாய் இருக்கு. மறுநாள் நவமி. அதுக்கு அடுத்த நாள் வரச் சொல்லிக்கலாம். நான் வேம்பு கிட்டச் சொல்லி விடறேன்.

என்றார். பழனியப்பன் நிம்மதியாகத் திரும்பிப் போனார். அம்மாவிடம் சொன்னபோது, ஆசுவாசமாகப் பெருமூச்சு விட்டுச் சிகப்பியிடம் சொன்னார்கள்:

> அம்மாடி. ஒனக்கு விடிஞ்சுருச்சு. இனி ஒன்னையும் ஒன் ஆமக்கனையும் பத்தி ஆத்தாமை இல்லாமெக் கண்ணை மூடுவேன்.

ஆனால், அய்யர்தான் கண்ணை மூடிவிட்டார். மறுநாள் பொழுது விடிந்தபோது வேம்பு அனுப்பியதாக ஆள் வந்தது. நடுராத்திரியில் மாரடைப்பாம்.

பழனியப்பன் புலம்பிக் கொண்டிருந்தது தாளாமல், அம்மா சொன்னார்கள்:

> விடுடா தம்பி, ஒடம்பு முழுக்க எண்ணெயைத் தடவிக்கிட்டு ஆத்து மணல்ல பெரண்டாலும், ஒட்டுறதுதான் ஒட்டும்.

சடகோபனுக்கு ஒட்டியது. அய்யர் இறந்த மறுவாரமே நூலக

விஷயங்களில் தலையை நுழைக்க ஆரம்பித்தார். அய்யரின் சொத்துக்களைப் பராமரிப்பதும், அவரின் உயில் பிரகாரம் தர்ம காரியங்களுக்குச் செலவிடுவதும், வக்கீல் சடகோபய்யங்காரின் பணி. அய்யரின் தர்மத்தில் பெரும்பகுதி, அய்யங்காரைச் செழிப்பாக்கிக் கொண்டிருந்தது. அய்யருக்குச் சுவீகாரமாய் வந்து சொத்துக்களில் பாத்தியம் உண்டானவர் மாதிரி சுதந்திரமாய்ச் சாப்பிட்டார் சடகோபன்.

சடகோபய்யங்கார் முதல் காரியமாய் வாசகசாலையின் பெயரை மாற்றினார். 'பர்மா வெங்கடேஸ்வரய்யர் வாசகசாலை' என்ற பெயர் நவீனமாக இல்லை என்றும், இறந்துவிட்ட அய்யரைக் கௌரவிக்க வேண்டும் என்றும் சொல்லி, 'வெங்கடேஸ்வரய்யர் நினைவு நூலகம்' என்று ஆக்கினார். இப்போது அதிலும் துருப்பிடிக்கிறது. வெளியூரிலிருந்து ஆராய்ச்சிக்காக வாசிக்க வருகிறவர்களிடம் கட்டணம் வசூலிக்கலாமா என்ற யோசனையில் இப்போது இருக்கிறார் ஐயங்கார்...

**சை**க்கிள்மணி ஒலிக்க வந்த தபால்காரன் புத்தகக்கட்டு ஒன்றைக் கொடுத்துச் சென்றான். தபாலைப் பிரித்தார் பழனியப்பன். புத்தகப்பிரதிகள் நான்கு இருந்தன. புதுப் புத்தகத்தின் மனோகரமான வாசனை தொற்றியேறியது. புத்தகங்கள் நான்கையும் ஒவ்வொன்றாகப் பார்த்தார். ஒரே புத்தகத்தின் பிரதிகள்தாம். முதல் இரண்டையும் பார்த்துவிட்டு மூன்றாவதைப் பார்க்கும்போது ஒரு சின்ன ஆச்சரியம் காத்திருந்தது.

'குள்ளச் சித்தன் சரித்திரம்' என்ற அந்தப் புத்தகத்தின் இரண்டு பிரதிகள் ஒருமாதிரியாகவும் மற்ற இரண்டும் வேறு ஒரு மாதிரியாகவும் இருந்தன. பெயரில் மட்டும் ஒற்றுமை இருந்ததே தவிர, இரண்டு பதிப்புகளுக்கும் இடையே ஒரு தலைமுறை இடைவெளி இருந்தது.

முதல் இரண்டும், சென்னை, ரத்தின நாயகர் ஸன்ஸ் அச்சிட்ட பெரிய எழுத்து விக்கிரமாதித்தன் கதை போல இருந்தன. டெம்மி சைஸ். ஊரும் கட்டெறும்புகள் போலப் பருவட்டான எழுத்துகள். அட்டைப் படம் விசித்திரமாக இருந்தது.

கல்யாணப் பத்திரிகையின் உள்புறம் போன்று, கண்ணை எரிக்கும் மஞ்சள் நிற அட்டை. அதில், செங்குத்தான செவ்வகக் கட்டமாகக் காபிப் பொடி நிறத்தில் ஒரு புகைப்படம். தெளிவற்று எடுக்கப்பட்ட படத்தின் இரு ஓரங்களிலும் தோரணங்கள் தொங்கின. கையால் வரையப்பட்டவையா, அல்லது புகைப்படத்தின் பகுதியான

பூச்சரங்களா என்று நிதானிக்க முடியவில்லை.

மையத்தில், மணைப்பலகையில், சற்று முன்னால் சரிந்தவாறு சப்பணமிட்டு, ஒரு மனித உருவம் உட்கார்ந்திருக்கிறது. உடலெங்கும் வெள்ளிக் கம்பிகளாய் விபூதிப் பட்டைகள். சரமாகக் கோர்க்கப்பட்ட உருத்திராட்சக் கொட்டைகளை மொட்டைத் தலையில் உருமால் போலச் சுற்றியிருந்தார். வலதுகை ஆசி அளிப்பதுபோல உயர்ந்திருந்தது. முகம் தெளிவாகத் தெரியாத தொலைவிலிருந்து எடுக்கப்பட்ட படம்.

இரண்டாவது புத்தகம் நவீனமான முறையில் அச்சாகியிருந்தது. அட்டைப்படத்தின் பின்னணி நிறம் ஆகாச நீலம். ஏகப்பட்ட இதழ்கள் கொண்ட ரோஜாவின் பக்கவாட்டுத் தோற்றம் வரையப்பட்டிருந்தது. இடது கீழ் மூலையிலிருந்து முளைத்து நீண்டிருந்தது ரோஜா. மையத்திலிருந்து வெளியேறிய மகரந்தக் கம்பிகளில் ஒன்று தவளையின் நாக்கு போல நீண்டு, பறந்து கொண்டிருக்கும் பூச்சியை வளைத்திருக்கிறது. க்ரவுன் சைஸ் புத்தகம்.

இந்தப் புத்தகங்களை ஏன் இவ்வளவு ஊன்றிக் கவனிக்கிறோம் என்று தோன்றியது திடீரென்று. தினசரி, தமிழிலும் ஆங்கிலத்திலும் எத்தனையோ புத்தகங்கள் வந்தவாறிருக்கின்றன. தென்னிந்தியாவிலேயே அதிக எண்ணிக்கையில் நூல்கள் உள்ள நிலையம் இது. ஆனால், எல்லாப் புத்தகங்களும் கவர்வதில்லை. இந்தப் புத்தகங்களில், ஏதோ ஒரு அம்சம் ஈர்க்கிறது. சொல்லத் தெரியாத ஒரு அம்சம்.

சிலசமயம் புத்தகங்களிலிருந்து கிடைக்கும் விநோத சமிக்ஞைகள், அந்தச் சமயத்தில் மனத்தில் ஓடிக்கொண்டிருக்கும் உணர்வுக்கு இசைந்ததாக அமைந்துவிடும். பிறாண்டிக் கொண்டிருக்கிற ஒரு கேள்விக்கு, சூட்சுமமான பதிலாகவோ, தொடர்ந்து நமைத்துக் கொண்டிருக்கும் வேதனைக்கு மருந்தாகவோ, அர்த்தமற்றுப் பொங்கும் சந்தோஷத்தைச் சமனப்படுத்துவதாகவோ அமைந்துவிடும்.

இப்படித்தான் ஜே. கிருஷ்ணமூர்த்தியின் புஸ்தகம் ஒன்று. பெங்குயின் வெளியிட்டது. அந்தப் புத்தகம் வந்த அன்று அம்மாவின் ஞாபகம் தூக்கலாக இருந்தது. அம்மாவின் பதினோராவது நினைவு நாள். சிகப்பி மிகவும் சாஸ்திரபூர்வமாக அனுஷ்டிப்பாள். அதிகாலையில் எழுந்து குளித்துவிட்டு, ஈரம் உலராத தலையுடன் சமைப்பாள். காலையில் ஐயரை வரச் சொல்லி வாழைக்காய், புது வேஷ்டி, அரிசி என்று சகலமும் தானமாகக் கொடுப்பாள்.

‘என்ன சுகம் கண்டார்கள் அம்மா’ என்று அன்று முழுவதும் தோன்றிக்கொண்டேயிருந்தது. சீனியவரைக்காய் வற்றல்போல இருந்து மறைந்து போன பிம்பத்தின் மீது கழிவிரக்கம் ஊறினபடியிருந்த நாள்...

கிருஷ்ணமூர்த்தியைப் பார்க்க ஒரு அம்மாள் வந்திருக்கிறாள். அவளுடைய கணவர் இறந்துவிட்டார்.

‘ஏன் இப்படி, எனக்கு ஏன் இப்படி’ என்று மன்றாடும் தொனியில் கேட்கிறாள். அதற்கு முந்தின பத்தியில் கிருஷ்ணமூர்த்தியின் பார்வையில் சுற்றுச் சூழ்நிலை விவரிக்கப்படுகிறது. கிளையில் ஒரு புறா உட்கார்ந்திருக்கிறது. இப்படி ஒரு வாக்கியம்.

...presently it flew off and the branch was swinging up and down from the pressure of the flight...

இழந்துவிட்ட எல்லாவற்றுக்குமான சமாதானமாக மனத்தில் வந்து உட்கார்ந்துவிட்டது அந்த வாக்கியம். பின்னால் கடந்தவற்றுக்காக மறுகும் மனநிலை எப்போதெல்லாம் உருவாகிறதோ, இந்த வாக்கியம் ஞாபகம் வரும். ததும்பும் மனம் சமனமாகும்.

யோசனை எங்கெங்கோ நகர்ந்து போகிறது. தபாலில் வந்த புத்தகத்தில் ஏதோ ஒரு ஆகர்ஷணம் இருக்கிறது. இந்தப் புத்தகத்தை வாசிக்கவேண்டும் என்று தோன்றுகிறது. ஒரு பிரதியை எடுத்துப் பையில் வைத்துக்கொண்டார் பழனியப்பன்.

## அத்தியாயம். 18

இருபுறமும் வயல்கள். பச்சைப் பரப்பின் மேல் காற்றின் உல்லாசமான விளையாட்டு. தொலைவில் தென்னைமரங்கள் கொத்தாக நின்றிருந்தன. வண்டிப்பாதை ஓரப் புதரிலிருந்து 'யார் இந்த அந்நியன்' என்பதுபோலத் தலை உயர்த்திப் பார்த்தது ஒரு ஓணான். வண்டி மாடு மூத்திரம் பெய்து போன தடம் நீண்டு நெளிகோடாக ஊருக்குள் அழைத்துப் போனது.

மிகவும் சிறிய ஊர் அது. ஊரின் விஸ்தீரணத்துக்குப் பொருந்தாத விதத்தில், செங்குத்தாக உயர்ந்து நிமிர்ந்த கோபுரம் விறைப்பாக நின்றிருந்தது. பஸ்ஸிலிருந்து இறங்கி வெகுதூரம் நடந்து வந்த அலுப்பில் முழங்கால் கெஞ்சியது. வாசல் திண்ணையில் இருந்த பெரியவருக்கு வயது எழுபது இருக்கலாம். வழித்த மூங்கில் போல மஞ்சள் நிறமான முன்னங்கைகள், கால்கள். டப்பாக் கட்டுக் கட்டிய வேஷ்டியுடன் சாய்வு நாற்காலியில் கிடந்தார். கைகளை உயர்த்தி, தலைக்கு மேலே விச்ராந்தியாகப் போட்டிருந்தார். முழுக்க வழுக்கையாகிவிட்ட முன்னந்தலையும், மூக்கு நுனியும் ஒரே மாதிரி பளபளத்தன. காது மடல்களில் அடர்த்தியான நரைமயிர்க் குச்சங்கள்.

> பலவேச முதலி சொன்னானா? நல்ல மனுஷன். கோடி கோடியாச் சொத்து இருக்குது. அது அத்தனையும் வாணாம்னுட்டு மடத்திலே போய்க் காரியஸ்தனா இருக்கான். சரி, விடுங்க. காபி சாப்புடுறீகளா?
>
> இல்லே. வேணாம்.
>
> நீங்க என்ன ஆளுக? பிறாமணாளோ? அப்பச் சரிதான். எங்க வூட்ல கை நனைக்க மாட்டீக.
>
> அதெல்லாம் இல்லே. நான் போலீஸ் இலாக்காவிலே இருந்தவன். சாப்பிடத் தடையொண்ணுமில்லே. இப்போ வேண்டியிருக்கலே. செத்தெ நாழி போகட்டுமே.

அதுவுஞ் சரிதான். நீங்க கேக்குற வெவரம் முதல்லே என் பொஞ்சாதி கிட்டே கேட்டுருங்க. நான் பெறகு சொல்லுறேன். என்ன, சரிதானா. அமிர்தம்... அமிர்தம்...

ராமாமிர்தத்தம்மாள் வெளியே வந்தார். தாட்டியான உடம்பு. உடலில் அங்கங்கே வழிந்த சதை அவர் நடக்கும்போது அதிர்ந்தது. மகா பெரிய, விகாரமான ஸ்தனங்கள் வெகுவாகச் சரிந்து, அவருடைய பெருத்த தொந்திமேல் படிந்து கிடந்தன. வாய் சற்றுத் திக்கியது. ஆவேசமாகப் பேசும்போது, வாயிலிருந்து எச்சில் தூறலாகப் பொழிந்தது. தடையின்றிப் பேசிக்கொண்டே போனார். பாதிப் பேச்சில் கண்கள் கிறங்கிவிட்டன அவருக்கு. ஒருவிதமான மயக்க நிலையில் இருப்பவர் போலப் பேசினார்...

**...அ**ய்யா, சாமியைப் பத்திச் சொல்லுங்கிறீக. நான் எதைச் சொல்லுவேன். எதை விடுவேன். ஒருநாள்தான் அவரைப் பார்த்தேன். அதுவும் ஒரு ரெண்டு மணிநேரம். நான் ஜென்மமெடுத்த புண்ணியத்தெ எனக்குக் குடுத்துட்டுப் போயிட்டாரு. அது அப்படித்தானே, நமக்கு ஒரு யுகம்ங்கிறது தேவர்களுக்கு ஒரு நொடிப் பொழுதாமே.

நீங்க வந்தப்ப ஒரு பையன் வெளியே போனானே, பாத்தீங்கள்ளே. என்னடா, நடுவயசுக்காரனா இருக்கான். பையன்ங்குறாளேன்னு யோசிக்கிறீகளோ. எத்தனை வயசு ஆனா என்னாங்க. டில்லிக்கு ராசான்னாலும் தல்லிக்கிப் புள்ளேதானே. என்ன, கொஞ்சம் இளநரை பாய்ஞ்சிடுச்சி. பார்த்தா வயசு தெரியிது. வயசு அதிகமொண்ணும் ஆயிரலே அவனுக்கு. வர்ற மாசி மகத்துக்கு முப்பத்தஞ்சு முடியுது. அவ்வளவுதான்.

அவன் வயசுதாங்க நான் சொல்லப்போற சம்பவத்துக்கும்.

இவரைக் கட்டிக்கிட்டப்போ எனக்கு வயசு பதிமூணு. இவருக்கும் எனக்கும் பத்து வயசு வித்தியாசம். மாமனார் வீட்ல வந்துதான் பெரிய மனுசியானேன். எங்க காலம் அப்பிடி. இப்பொத்தான் வயசுக்கு வந்து, அஞ்சாறு வருசம் போன பெறகுதானே சாதகக் கட்டையே தூக்குறாக.

பன்னெண்டு வருசமாக் குடுத்தனம் நடத்துறோம். வயித்துலே ஒரு புளு பூச்சி வய்க்கலே. மனசுல அப்பிடி ஒரு கொமைச்சல். இவுங்க அம்மா, இன்னொரு பொண்ணு பாத்துர வேண்டியதுதான்ங்கிற முடிவுக்கு வர்றாங்க. இவுரு மாட்டேன்ங்கிறாரு. சரி, வம்சம் தளைக்கிறதுக்கு அவசியம்னாப் பண்ணிக்கிறட்டும்ன்னு நானும் நெனைக்கிறேன்.

இவுரு பிடிவாதம் பிடிக்கிறாரு. ‘அமிர்தம், ஒன்னையத் தவிர

இன்னோர்த்தியை மனசால கூட நெனைக்க மாட்டேன். நாங் கும்புடுற தெய்வம் உண்மையானதுன்னா, எனக்கு ஒரு வாரிசைக் குடுக்கட்டும். பார்ப்போம், இதே மாதிரி போச்சுன்னா, கச்சி ஏகாம்பரநாதன் மேலே கேஸ் போட்டுர வேண்டியதுதான். அவனுக்குக் கொஞ்சக் கைங்கரியமா பண்ணியிருக்கு என் பரம்பரை'ங்குறாரு. எனக்குச் சிரிப்பு வந்துருச்சு.

அன்னைக்கி வெடிகாலைல ஒரு கனா... ஒரு பெரிய வயிறு தெரியுது. அதுக்குள்ளே விலாங்கு மீன் மாதிரி வளைய வருது ஒரு கொழந்தெ. என் கொழந்தெ அது. வெளிய வரப்போறேன்னு அறிகுறி காட்டுது. பனிக்கொடத்துச் செவுரை எட்டி எட்டி ஒதைக்கிது. ரொம்ப நேரமா இது நடந்துக்கிட்டிருக்கு.

என் கொழந்தைதான் அதுன்னு நல்லாத் தெரியிது. ஆனா, என் வயித்திலே வலி இல்லை.கொழந்தை என்னுது. வயிறு என்னுதில்லே. எப்யிடியிருக்கு பாருங்க. பல் விளக்கிட்டு வந்தவர் கிட்டே கனாவைச் சொன்னேன். இவுரு சிரிச்சாரு. 'தொடர்ந்து இதையே யோசிச்சிட்டிருக்கியா இல்லியா. அது சொப்பனமா இருக்காது. அரைத் தூக்கத்திலே இந்த மாதிரி யோசனை ஓடியிருக்கும், அவ்வளவுதான். இன்னிக்கு மாசி மகமாச்சுதே. தவசிப்பிள்ளை கிட்டே சொல்லிட்டியா. பொங்கல் போடச் சொல்லு. சாயங்காலம் ஒரு நடை கோயிலுக்குப் போயிட்டு வந்துரலாம்'னுட்டு வெளியே போயிட்டாரு.

பதினொரு மணி சுமார் இருக்கும். நான் அடுப்பாங்கரையிலே நின்னு தவசிப்பிள்ளையோட பேசிக்கிட்டிருக்கேன். வாசல்பக்கத்திலேர்ந்து 'அம்மா'ன்னு யாரோ கூப்புடுற சத்தம். கேட்டது. வந்து பார்த்தேன். திண்ணையிலே இப்பொ மொதலியார் உக்காந்திருக்காகளே, அந்த இடத்திலே ஒரு ஆள் உக்காந்திருக்காரு.

என்னாங்க, என்னா வோணும்

னு கேட்டேன். வாய் கேக்கும்போதே கண்ணு ஆளை அளக்குது. வயசு நிதானிக்க முடியாது. உக்காந்திருக்கும்போதே தெரியுது, ஆள் ரொம்பக் குள்ளம். தும்பைப்பூ மாதிரி வெள்ளை வேட்டி, சட்டை. வசதியானவர் கிடையாது போலருக்கு. தோள்லே துண்டு இல்லே.

இதையெல்லாம்விட, அவரு கண்ணுதாங்க. பச்சப் புள்ளெகளோட கண்ணு மாதிரி, அப்பிடி ஒரு வெள்ளை. நமக்கெல்லாம் பாருங்க, கண்ணுல செவ்வரி ஓடியிருக்கும். கழுத்தில பெரீய ஒத்தை உத்திராட்சம். அவ்வளவு பெரிய உத்திராட்சத்தை அதுக்கு முன்னாடியும் நான் பாத்ததில்லே. பின்னாடியும் பாத்ததில்லே.

சாப்பாடு போடு தாயி

ன்னாரு.

இருங்க. தயாரானதும் போடறேன்...

ன்னு சொல்லிப்பிட்டு உள்ளாற போனேன். எங்க மொதலியாரு கறாராச் சொல்லியிருக்காரு. ‘சாப்பாடுன்னு கேட்டு வாசலுக்கு வர்றவன் வயிறு நெரம்பாமத் திரும்பக்கூடாது. எந்த ஜென்மத்திலே யாரு வயித்திலே அடிச்சமோ, இன்னைக்கி வாரிசு இல்லாமே வயிறு கலங்கீட்டு இருக்கோம்.’

அன்னைக்கி மாதிரி ருசியா என்னைக்குமே சமைச்சதில்லே தவசிப் பிள்ளை. வந்தவரைக் கூடத்திலே உட்கார வச்சுச் சாப்பாடு போட்டேன். சிறுகுழந்தை மாதிரி தலையைத் தலையை ஆட்டிக்கிட்டே சாப்பிட்டாரு. சாதாரணமா ஒரு மனுஷன் அவ்வளவு சாப்பிட முடியாதுங்க. அதுக்கப்புறம் ஒரு மாசத்துக்குச் சாப்பிடவே போறதில்லேங்குற மாதிரி. தொடுகறியெல்லாம் தீந்து போச்சு. மத்தவங்க சாப்பிடறதுக்காக மறுபடி காய்கறி வெட்ட ஆரம்பிச்சாரு தவசிப் பிள்ளை.

வெளியே போன மொதலியாரு திரும்பி வந்தாரு. இந்த மனுஷர் சாப்பிட்டுக்கிட்டிருக்கிறதைப் பாத்து என்ன நெனைச்சாரோ, எதுத்தாப்பிலே கைகட்டிக் கண்மூடி உக்காந்திட்டாரு. மூடின கண்ணுலேயிருந்து மாலைமாலையாக் கண்ணீர் வடியுது. வீட்லே ஏதோ விநோதமா நடந்துக்கிட்டிருக்குன்னு தோணுச்சு எனக்கு. பொறவாசல் பக்கம் போனேன். சாப்பிட்டு முடிச்சுக் கைகழுவத் தண்ணி எடுத்து வைக்கலாம்னு.

கொட்டடத்திலே பசுமாடு ரெண்டும் காலை மாத்தி மாத்தி வெச்சு அலைபாயுது. வீட்டுக்குள்ளாற போற நிலைவாசலை வெறிச்சுப் பாக்குதுக. கழுத்துக் கயித்தை அறுத்துக்கின்ற மாதிரி முளையிலேருந்து இழுக்குதுக. அதுக கண்ணுலயும் கண்ணீர் கோடு மாதிரி இறங்குது. என்னைப் பாத்ததும் அடிவயித்திலேர்ந்து ம்மான்னு அலறுதுக.

உள்ளே போனேன். அவுரு சாப்பிட்ட இலையை எடுத்துக்கிட்டுப் பொறவாசல்லே போட வர்றேன். அந்தக் கறுப்பு நாய் நின்னுக்கிட்டிருந்துச்சு. அதுக்கு மொதலியார் சோமசுந்தரம்னு பேர் வச்சிருந்தாரு. ‘தர்மரு வானப் பிரஸ்தம் போனப்போ கூடப்போன நாயோட வம்முசம் இந்த நாய்’ன்னு கேலியாச் சொல்வாரு. எச்சிலை பக்கத்திலே வந்ததுமே கரண்ட்டு அடிச்சமாதிரி பதறி ஓடுது சோமசுந்தரம். நான் நெனச்சது சரிதான். வீட்டுலே ஏதோ வினோதமா

நடக்குது. சாப்பிட வந்திருக்கிறது சாமான்ய ஆளில்லே.

அவரும் மொதலியாரும் மௌனமா உக்காந்திருந்தாங்க. வெத்திலைத் தட்டை அவர் முன்னாலே கொண்டு வச்சேன். மொதலியார் வெத்திலை மடிச்சுக் குடுக்கிறாரு. செவுத்த ஒட்டி மாக்கோலம் பளிச்சுன்னு இருக்கு. விசேஷ நாள்ன்னு போட்டது. அவரு அதை வெறிச்சுப் பாக்கிறாரு. வாய் நெறைய வெத்திலையோட, வந்த மனுஷர் கேக்குறாரு.

கோலத்தை அழிக்க ஆளில்லே, இல்லையா?

எனக்கு அடிவயித்திலேயிருந்து அழுகை வெடிச்சிருச்சு. குமுர்றேன் குமுர்றேன், அப்படி ஒரு குமுறல். என் முந்தானை முழுக்க நனைஞ்சு போச்சு. அவரு சொல்றாரு.

> ராமாமிர்தம், அழாதே. உன் கஷ்டமெல்லாம் தீந்தாச்சு. இன்னிக்கி என் வயிறு குளுந்த மாதிரியே உன் வயிறும் குளுந்துரும். என்ன முதலியார்வாள், இது என்ன சின்னப் புள்ளெ மாதிரி. கண்ணைத் தொடைங்க.

...சரி, நான் வரட்டுமா. ஏகப்பட்ட ஜோலி இருக்கு.

அவரு இறங்கிப் போயிட்டாரு. நாங்க ரெண்டு பேரும் பிரமை பிடிச்ச மாதிரி உக்காந்திருந்தோம். சாப்பிடக்கூடத் தோணலே.

மதியத்துக்கு மேல தூங்கிட்டேன். காலைலே விட்ட கனா திரும்ப வருது. அந்தக் குழந்தை வயித்திலேயிருந்து விடுபட்டுருச்சு. ஒரு அழுகை இல்லே. சிணுக்கம் இல்லே. கை ரெண்டையும் றெக்கை மாதிரி அசைச்சுக்கிட்டு உல்லாசமாப் பறக்குது. சிட்டுக்குருவி மாதிரி ஆகாசத்திலே மிதக்குது. எதுத்தாப்புலே ஒரு கழுகு. புள்ளே அதைப் பாத்திருச்சு. வீல்ன்னு ஒரே கூப்பாடு. நான் மெரண்டு போனேன். அய்யோ, எம் புள்ளேன்னு பதறுது எனக்கு.

அய்யா, கனாவுலே எவ்வளவோ வஸ்துக்களைப் பாக்குறோம். தத்ரூபமா இருக்கு. கனாவுலே நாமளும் நிஜம். நாம பாக்குறதெல் லாமும் நிஜம். ஆனா, கனாவுலே பாத்த வஸ்துவை நனவுக்குக் கொண்டுவர முடியுமா சொல்லுங்க. அந்த வரம்தான் எனக்குக் கெடைச்சது.

கனாவுலே கேட்ட கொழந்தையோட அழுகை, திண்ணையிலே கேக்குற மாதிரி இருக்கு. தூக்கம் கலைஞ்சுருச்சு. திண்ணையி லேயிருந்து அழுகை கேட்டுக்கிட்டேயிருக்கு. எனக்கு ஒண்ணும் புரியலே. வாசலுக்கு ஓடுறேன்.

சாமி உக்காந்துச்சே, அதே இடத்துல கிடந்தான் இவன். அதுதான், நீங்க

பாத்தீகளே, எம் மவன். அவந்தான். சொர்ண விக்கிரகம் மாதிரிக் கிடந்தான். வலது தொடையிலே ஓட்டைக் காலணா அளவு கருமச்சம். கையிலே எடுத்து மாரோட அணைச்சிக்கிட்டேன். தூக்கீட்டு உள்ளாற ஓடியாந்தேன். மொதலியாருக்கு நல்ல தூக்கம். எழுப்பினேன்...

சாய்வு நாற்காலியில் கிடந்த முதலியாருக்கு மூச்சிறைத்தது. அருகிலிருந்த செம்பிலிருந்து தண்ணீரை வாயில் கவிழ்த்துக் கொண்டார். மேலெல்லாம் சிந்தியது நீர். மடக் மடக்கென்று குடித்துக்கொண்டேயிருந்தார்.

## அத்தியாயம். 19

வெள்ளிக்கிழமை விடிந்ததிலிருந்தே ஒரு கலக்கம் இருந்தவாறிருந்தது. வாசல் திண்ணையில் உட்கார்ந்து வாசித்துக் கொண்டிருந்தபோது, மனதில் கடந்த ஒரு வாரமாகப் புரண்டு கொண்டிருந்த கேள்வி உச்சகதியில் உருள ஆரம்பித்துவிட்டது.

தொரே, யாரைக் காப்பாத்த யாரை அடிக்கிறே?

நியாயம்தானே. எத்தனை நட்புணர்வோடு பழகினாலும், வெள்ளைத் துரைகளுடன் உண்டாகும் அன்பிலும் சரி, குரோதத்திலும் சரி, உபரியாக ஏதோ ஒன்று கலந்திருக்கிறது. இனம் புரியாத ஒரு தொலைவு.

ஸிம்ஸன் துரை தகப்பனுக்குச் சமமானவர். பரிவே உருவானவர். குற்றவாளிகளுக்கும், சுயராஜ்யக்காரர்களுக்கும் சிம்ம சொப்பன மாக இருந்தாரே தவிர, தனக்குக் கீழ் பணிபுரிபவர்களிடம் அவ்வளவு வாஞ்சை. சற்று முன்கோபி. இருந்தாலும், பயிற்சிக் காலத்தில் ஹாலாஸ்யத்தை அவ்வளவு கொண்டாடுவார்.

ஆனால், அவரிடம் உணரும் இடைவெளியை, இந்தப் புது ஊரின் மளிகைக் கடைக்காரனிடம்கூட உணரக் கிடைக்கவில்லை. துணிமணி, சாப்பாடு, கடவுள், சீதோஷ்ணம் எல்லாமே அவனுக்கும் எனக்கும் பொது. துரைக்கும் எனக்கும் ஒரு ஒற்றுமையும் கிடையாது.

தலையை உலுக்கி நினைவுகளைக் கோதிக்கொண்டார் ஹாலாஸ்யம். இன்று ஏகப்பட்ட வேலை இருக்கிறது. ஸிம்ஸன் துரை விஸிட் இருக்கிறது. முந்தின நாள் எட்வர்ட் பூங்கா முன்பு காங்கிரஸ்காரர்கள் நடத்திய மறியல் போராட்டத்தில் கைதானவர்களிடம் விசாரணை நடத்த வருகிறார் துரை. கச்சேரியில் வைத்து எத்தனை மண்டைகள் உடையவிருக்கிறதோ.

நேற்று பந்தோபஸ்துக்குப் போன இடத்தில் தன்னைப் பார்த்துச் சிரித்த நாவிதனின் முகம் நினைவு வந்தது. அந்தச் சிரிப்புதான் கலக்கத்தைத்

தூண்டிவிட்டிருக்க வேண்டும். என்ன மனிதன் அவன். அவனையும் அவன் கூட்டாளிகளையும் ஒடுக்க வந்திருக்கிறேன். என்னைப் பார்த்துப் புன்னகைக்கிறான். நெஞ்சின் ஆழத்திலிருந்து வந்த அந்தக் குறுஞ்சிரிப்பு, அவன் கண்களில் பிரகாசத்தைக் கூட்டியது.

போராட்டக்காரர்கள் மொத்தமாக ஐம்பது அறுபது பேர் இருந்தார்கள். நாலைந்து வரிசைகளாக அமர்ந்திருந்தார்கள். மூன்றாவது வரிசையில் அவன் உட்கார்ந்திருந்தான். இருபது வயதுதான் இருக்கும். முந்தாநாள் அவனிடம் க்ஷவரம் செய்துகொள்ளப் போனதை நினைத்துக் கொண்டார்...

தனக்கொரு செங்கல்லும் வாடிக்கையாளருக்கு இரண்டும் ஆசனமாய் அமைத்து, ஆலமரத்தடியில் குந்தியிருந்தான். போன மாதத்தைவிடச் சற்று இளைத்திருந்தான். நல்ல தொழில்காரன். வெண்ணெயை வழிப்பதுபோலத் தீண்டியிறங்கும் சவரக்கத்தியைத் தாள லயத்தோடு தோல்பட்டையில் தீட்டும் ஓசையில், தூக்கம் கண்களைச் செருகும்.

வாங்க ஸாமீ.

என்று சொன்ன முகத்தில் கண்ணியம் மிகுந்திருந்தது.

உக்காருங்க ஸாமி...

என்று சொல்லிவிட்டுக் குடிசைக்குள் போனான். குடிசையின் வாசலில் சாணம் தெளித்த பச்சைப் பரப்புக்கு வெளியே ஒரு உருவம் உட்கார்ந்திருந்தது. அவ்வளவாகக் குளிர் இல்லை என்றாலும், கறுப்புப் போர்வை ஒன்றைத் தலையோடு காலாகப் போர்த்தியிருந்தது. போர்வையின் சிவப்புநிறக்கரை, முக்காடாக இறங்கி முகத்தின் பாதியை, மூக்குவரை, மறைத்தது. அவ்வப்போது இருமிக்கொண்டது அந்த உருவம்.

அதனிடமிருந்து கவனத்தைப் பறிக்கிறமாதிரி, இரண்டு நாய்கள் ஓடிவந்தன. தெருவின் குடிசைகளும், ஆற்றங்கரையும், பிடாரியாய்த் தலைவிரித்து நின்ற மரமும், ஆற்றில் சிறு கோடாக ஓடும் தண்ணீரும் அதிர, அடிக்குரலில் வெறியோடு குரைத்துக் கொண்டு வருகிறது துரத்தும் நாய்.

இத்தனைக்கும், சற்றுச் சோனியான நாய்தான் அது. முன்னே ஓடிவரும் நாய்க்கு நன்கு விளைந்த உடம்பு. அவ்வப்போது திரும்பிப் பார்த்துக் குரைக்கிறது. ஆனால், பின்னங்கால்களிடுக்கில் செருகிய வாலுடன் படுவேகமாக ஓடியவண்ணமிருக்கிறது. இரண்டும் தெரு முனையை நெருங்குகின்றன. துரத்திய நாய் திரும்பிவிட்டது. முதல் நாய் ஓடி

மறைந்து விட்டது.

நம்ம நாய்தான் ஸாமி. ரொம்பக் கெட்டி.

கையில் இருந்த கிண்ணியில் புதுத் தண்ணீருடனும், மடக்கிய கொடுங்கையில் வெளுத்த துவாலையுடனும் நின்றிருந்தான் நாவித இளைஞன். தன்னுடைய செங்கல்லில் உட்கார்ந்து, வெதுவெதுப்பாகத் துவாலையைப் போர்த்திவிட்டான். ஹாலாஸ்யத்தின் தலையில் தண்ணீரைத் தெளித்து, முடிக்குள் விரல்களை விட்டு அளைந்தவாறு சொன்னான்.

நம்ம எல்லைக்குள்ளே அந்நிய நாய் எதையும் அண்டவிடாது. களுத்தைப் பிடிச்சுக் கொதறிரும். லெச்சுமண பண்டிதர் வீட்டு நாய்ன்னா சும்மாவா?

அது யாரப்பா, லெச்சுமண பண்டிதர்?

அந்தா உக்காந்திருக்காருல்ல. அவருதான். எங்க அப்பாரு.

குடிசையின் வாசலை விட்டு விலகி உட்கார்ந்திருந்த உருவத்தைச் சுட்டினான். கறுப்புப் போர்வைக்குள்ளிருந்து பலத்த இருமல் ஒன்று கிளம்பியது. போர்வைப் பொதி இடவலமாக அசைந்தது.

காந்திக்கு மூச்சடைச்சா, இவுருக்கு இருமல் வந்துரும். எல்லா ஊர் ஜெயில்லேயும் இருந்திருக்காரு. அலிப்புரம் ஜெயில்லே பத்து வருசம் இருந்துட்டு வந்தாரு. சுப்பிரமணிய சிவம் இருந்தாருல்லே, அவுருகூட ஜெயில்ல இருந்தவரு. வெளியே வரும்போது அவர மாதிரியே பெருவியாதியோட வந்து சேர்ந்தாரு. தலையை அசைக்காதீங்க ஸாமி. கத்தி பட்டுரும்.

ஹாலாஸ்யத்தின் வயிற்றில் ஒரு சங்கடம் கிளம்பியது. கறுப்புப் போர்வையை விட்டுக் கண்களை நீக்கிக்கொள்ள முயன்றார். அத்தனை லேசான காரியமாயில்லை அது.

என்ன கிடைத்தது அந்தக் கிழவருக்கு. தன் வீட்டிலேயே வெளியில் உட்கார்த்தி வைக்கிற நிலைமை. ராஜ்யம் சுதந்திரமாகிவிட்டதா என்ன? இதோ, மகன் உழைத்துப் பிழைக்கவில்லையா. சாமான்ய ஜனங்களுக்கு ராஜாங்க அரசியல் எதற்கு. ஏதோ, சாப்பாடு, துணிமணி, ராத் தங்க ஒரு இடம். இதற்கு மேலே என்ன தேவையிருக்கிறது. விவரம் தெரியாமல் போய் சிக்கிக் கொள்கிறவர்கள்தாம். வெறும் ரத்தக் கொதிப்பு. இந்த ஊரில் இருக்கிற ஆயிரக்கணக்கான மற்றவர்கள் சும்மாதானே இருக்கிறார்கள். இந்த ஆளுக்கு மட்டும் என்ன கொள்ளை. ரத்தக்

கொதிப்பு.

> என்ன ஸாமீ, பலமான யோசனை. பெரியவரைப் பார்த்து ஆச்சரியப்படுறீங்களா? பெரிசு கிட்டெக் கேளுங்க. தன் பெரிய மகன் கால் தூசுக்குத் தான் பெற மாட்டாதுங்கும்.
>
> அவன் என்ன பண்ணினான்.
>
> போலீசுப் புலிகள் சுத்தி நின்னு அந்தப் போடு போட்டாங்களே. லத்தியெல்லாம் முறிஞ்சு போச்சு. நம்ம வீட்டு சிங்கக் குட்டி 'வந்தே மாதரம்'ங்கிறதைத் தவிர்த்து வேற ஒரு வார்த்தை சொல்லிக் கதறலையே. மாதாதான் செவுட்டுக் களுதை. என்னைக்கி அவளுக்குக் காது திறக்குமோ.

என்ன சந்தோஷமாய்ச் சொல்கிறான்.

> அண்ணாரு நம்மளை விட அஞ்சுவயசு மூத்தவரு. நாலெளுத்துப் படிச்சவரு. பாரதி பாட்டெல்லாம் பாடக் கூடியவரு. நம்ம அப்பாருகூட அவுருகிட்டக் கத்துக்கிட்டு ஏளெட்டுப் பாட்டுப் பாடுவாரு. அண்ணாரு தொளில் பாக்கிறதும் ஒரு தனி அளகுதான். விடுங்க. கடவுளுக்குப் பிடிச்சவங்களெல்லாம் சின்ன வயசிலேயே போய்ச் சேந்துடுவாங்களாமில்லே...

வாசல் திண்ணையில் நன்றாக வெளிச்சம் படிந்துவிட்டது. ஸ்நானம் செய்யவேண்டியதுதான். பசுவையும் கன்றையும் கம்பி அழியில் கட்டிவிட்டுப் போகிறார் கோனார். அதன் முன்னால் நகர்த்தி வைத்த குளுதாடித் தொட்டியிலிருந்து கழுநீரை உறிஞ்சுகிறது பசு.

நாவிதனின் நினைவிலிருந்து சற்று விலகும் மனத்தில் திடீரென்று ஏதோ பொறிதட்ட, மடியில் விரிந்திருந்த புத்தகத்தை ஆவேசமாகப் புரட்டினார் ஹாலாஸ்யம். பக்கங்களை வேகமாகத் தாண்டி வருகிறது பார்வை. தேடிய பக்கம் கிடைத்துவிட்டது.

சென்ற நூற்றாண்டுக் கடைசியில், மதறாஸ் கலாசாலை ஆசிரியர் ஒருத்தர் எழுதியது...

இக்காலத்தரசர் குணாதிசயம்

நம்மைப் பரிபாலித்து வருகிற பிரித்தானிய துரைத்தனத்தாரைக் குறித்து நமக்குத் தெரிந்த மாத்திரம் பேசுவோம். மேற்படி துரைத்தனத்தாருடைய சுகுணங்களும் அவர்கள் தங்களுக்கு நெடுநாளாகச் சுவாதீனப்பட்டிருக்கிற இங்கிலாந்து முதலான தேசங்களை அரசாளும்

முறைமையையும் என்னவென்று சொல்கிறது!

ஆங்கிலோ தேசத்தில் மகிமை தங்கிய பிருன்ஸ்விக்கு வமிசத்தில் வலம்புரிச் சங்கில் உற்பவித்த அழகான ஆணிமுத்தைப் போலத் தோன்றி விக்டோரியா என்ற சிறந்த பெயர்பெற்ற அருமைத் துரைமகள் பட்டம் தரித்துக் கிரீடதாரியாய் செங்கோல் ஏந்திச் சிங்காசனத்தில் வீற்றிருக்க, அவ்வரசிக்குப் பிரதான மந்திரியாகப் பல்மர்ஸ்டன் பிரபுவும், இந்திய மந்திராலோசனை சபைத் தலைவராக ஸ்ரீ.சுரோலஸ் ஊட் என்பவரும் அச்சிங்காசனத்தின் இருபக்கங்களிலும் அடுத்திருக்க, மாட்சிமை பொருந்தின கானிங்கு பிரபு என்னும் கவர்னர் ஜெனரல் முதலானவர்களும் வீற்றிருக்க... இந்தியாவின் தலைநகர் ஆகிய கல்கத்தாவை உள்ளிட்டிருக்கின்ற வங்காளம், சென்னைப் பட்டணம், பம்பாய், ஆக்ரா என்னும் நான்கு ராச்சியங்களின் தலைவர்களாகிய கவர்னர்களும், லெப்டினண்டு கவர்னர்களும், நீதிபதிகளாய் ஆங்காங்குள்ள ஜட்ஜுகளும், அரசிறை விசாரணைக் கர்த்தர்களாகிய அக்கவுண்டண்டு ஜெனரல்களும், பொக்கிசத் தலைவர்களாகிய டிரெஷரர்களும், ஜில்லாதோறும் அரசிறை சேகரிக்கும் கலெக்டர்களும், அதிகாரஸ்தர்களாகிய போலீஸ் கமிஷனர்களும், மற்றும் உயர்வும் தாழ்வுமாகிய பற்பல துரைத்தன உத்தியோகம் பார்ப்பவர்களும் கிரமமாக ஏற்பட்டிருக்க, குதிரை ராணுவங்கள், ஒட்டக ராணுவங்கள், பீரங்கி ராணுவங்கள், அவ்வவ் இராணுவங்களில் வெவ்வேறாயுள்ள சேனைத் தலைவர்களாகிய ஜெனரல், கர்னல், மேஜர், காப்டன் முதலானவர்களும், ஒவ்வொரு ராச்சியத்திற்கும் ஆங்காங்கு வகுப்பு வகுப்புகளாய்க் காவலாயிருப்பதுமின்றி, அவசியமானபோது யுத்த சன்னத்தராய் ஆயுத முஸ்தீபுடனே போர்க்கோலம் கொண்டு, அந்நிய தேசங்களுக்குத் தண்டெடுத்துப்போய், அரசர்க்குரிய சதுர்வித உபாயங்களில் சாமதான பேதங்களாற் கைவசமாகாத பகைவர்கள், ‘சடையைப் பிடித்திழுத்தாற் சந்நியாசி கிட்டே வருவான்’ என்பதாகத் தண்டோபாயத்தைச் செய்தால் இணங்குவார்களென்று அவர்களுடைய கோட்டையை முற்றுகை செய்ய, அதுநோக்கி அவர்கள் கடற்கரை மணல் போல அளவிறந்த சேனைகளோடு திரண்டு எதிர்த்த சமயத்தில், கீரைத் தண்டு பிடுங்க ஏலப்பாட்டும் வேண்டுமோ, ஆயிரங் காக்கைக்கு ஒரு கல்லே போதும் என்பதாகச் சில பீரங்கிகளைக் கொண்டு குண்டுப் பிரயோகஞ் செய்து, நாசமாம் படி ஜெயித்து, ஜய பேரிகை முழக்கி, பல தேசங்களில் வெற்றிக் கொடியை நாட்டி, பல தேசத்தாரிடம் கப்பம் வாங்கிவர, யாதொரு தவறும் வராமற் கட்டுக் காவலுடனே அரசாட்சி நடந்து வருகிறது...

ளண்டையில் காறியது. தூ தூவென நாலைந்து முறை துப்பினார் ஹாலாஸ்யம். மொத்தத்திலேயே ஏதோ குழப்பம் இருக்கிறது. நியாய அநியாயங்களைச் சுலபமாக முடிவு செய்ய முடியவில்லை. நாம் நினைக்கிற அளவு எளிமையாகவும் திறந்ததாகவும் இல்லை வாழ்க்கை. வீர வாஞ்சி கதை சொன்ன அன்று அப்பா சொன்னார்:

> ஹாலாஸ்யம், தன் பொண்டாட்டியோட வளெகாப்பு அன்னிக்கி, வெள்ளைக்காரனைக் கொன்னுட்டு, தானும் சுட்டுண்டு செத்தானே... என்னவொரு வீரம். என்னவொரு தியாகம். இது மாதிரித் தியாக சீலர்களாலேதான், நாம சாப்பிடற சாப்பாட்டுலே உப்புச் சேர்றது...

வைஸ்ராயில் தொடங்கி, கலெக்டர்கள், தாஸில்தார்கள், போலீஸ் புலிகள் வழியாக, கலெக்டர் ஆபீஸ் டவாலி வரை, யூனியன் ஜாக், நிர்வாகம், வரிகள், சட்டம் ஒழுங்கு, பொது அமைதி, இதெல்லாம் ஒருபுறமும்; பரதேசிகள், நாவிதர்கள், அப்பா அம்மாக்கள், மரத்தடித் தெய்வங்கள், அரிசிச்சாதம், ஹோமம், ராஜாக்கள், சுலோகங்கள், நதிகள், மலைகள், இதெல்லாம் இன்னொரு புறமும் இருந்து கயிறிழுக்கும் போட்டி நடத்துகிறார்கள். இருபுறமும் இழுபடும் அறுபடாத கயிறாகத் தான் இருப்பதாகத் தோன்றியது ஹாலாஸ்யத்துக்கு.

கயிற்றை அறுத்துவிடவேண்டியதுதான்.

கழுத்துக் கயிறு இறுக, எட்டாத் தொலைவிலிருந்த தாயின் மடுவை நோக்கித் திமிறியது கன்றுக்குட்டி. குளித்துவிட்டுப் புறப்பட எழுந்தார் ஹாலாஸ்யம்...

> ஸிம்ஸன் துரை ரொம்ப ஆச்சரியப்பட்டுட்டார்ம்மா.
>
> ஒய் ஹலாஸ்.... வாட் ஹேப்பன்ட்...

ன்னு திரும்பித் திரும்ப என்னைக் கேட்டுண்டிருந்தார். என்ன பதில் சொல்றது சொல்லு.

சரி, விடு. சரியாத்தான் பண்ணியிருக்கே. போக்கத்தவனுக்குப் போலீசு உத்தியோகம்னு சொல்லுவா. முத்து சொல்றா மாதிரி கொஞ்சநாள் இருந்து பாரு. ஒத்து வரலேன்னா வேற உத்தியோகம் சம்பாதிச்சுக்கறது. நீ என்ன விலை போகாத சரக்கா?

## இரண்டாம் பதிப்பின் பதிப்புரை

என் தகப்பனார் திரு. ஹாலாஸ்யமய்யர் சிறந்த கல்விமான். உருது உள்ளிட்ட பத்து மொழிகளில் பாண்டித்தியம் உள்ளவர். எந்த ஒரு வேலையை எடுத்துச் செய்தாலும் தன் முழு ஆன்மாவையும் அதில் செலுத்தக்கூடியவர். பல ஆண்டுகள் தொடர்ந்து ஆராய்ச்சி மேற்கொண்டு, தமிழ்நாடு முழுவதும் பயணம் செய்து, அவர் எழுதிய குள்ளச் சித்தன் சரித்திரம் என்ற வரலாற்று நூலுக்குத் தமிழ் மக்கள் அமோக ஆதரவை அளித்திருக்க வேண்டும். ஆனால், அவ்விதம் நிகழவில்லை. தமிழ் மரபு அப்படி. பாரதி, பிச்சமூர்த்தியிலிருந்து தொடங்குகிறது; வெகுஜனப் புறக்கணிப்பு.

முதல்பதிப்பு வெளிவந்து, முழுவதும் விற்றுத் தீர்வதற்கு ஏறக்குறைய பதினெட்டு ஆண்டுகள் ஆகிவிட்டன. இந்த இரண்டாவது பதிப்புக்கான வேலைகளைத் தொடங்கியபோது, நூதனமான ஒரு யோசனை உதித்தது. என் மூத்த மகனும், கல்லூரி மாணவனுமாகிய செல்வன். ஹாலாஸ்யத்திடம் அவனுடைய தாத்தா எழுதிய நூலைப் படிக்கச் சொல்லலாம் என்பதே அது. படித்துவிட்டு அவன் கூறிய அபிப்பிராயம் என் சிந்தனையைத் தூண்டியது. அவன் சொன்னான்:

> அப்பா, தாத்தா மிகவும் உழைத்து இந்த நூலை எழுதியிருக்கிறார் என்பது புரிகிறது. இதில் வரும் சம்பவங்கள் எதுவுமே என்றுமே பழசாகாது என்பதும் தெரிகிறது. ஆனால், தமிழ்மொழி வெகு தொலைவு கடந்து வந்துவிட்டது. இந்தக் காலகட்டத்தில், இந்த மொழி நடையில், இந்த நூலை மறு பதிப்புச் செய்வது, இந்நூலின் பழமைக்குப் பெருமை சேர்க்கலாம்.
>
> ஆனால், பெருவாரியான வாசகர்களைப் போய்ச் சேராது. தற்காலத்தில் புழங்கும் பிரயோகங்களின் வழி இந்நூலைத் திருத்தி எழுதி, பிறகு பிரசுரிக்கலாம் என்று தோன்றுகிறது.

நல்ல யோசனைதான். அதிக எண்ணிக்கையிலான வாசகர்களுக் குப் பலன்தரக்கூடிய யோசனை. சமீபகாலங்களில் நான் படிக்கக் கிடைத்த

சில பத்திரிகைகள் - அவற்றில் எழுத்து, நடை, ஞானரதம் போன்றவை குறிப்பிடத்தக்கவை - தமிழைப் புதுப்பித்துக் கையாள்கின்றன. அந்த வகையான தமிழில் இந்த நூலைத் திருத்தி எழுதும் பொறுப்பை மேற்கொண்டேன்.

நூலில் சில இடங்களை, என் தகப்பனாரின் மனோதர்மம் கெடாத வகையில் மாற்றி எழுதவும் நேர்ந்தது. சில தகவல்களைக் கோக்கவும், சிலவற்றை நீக்கவும் செய்திருக்கிறேன். சில இடங்களில் வாசிப்பில் சுவாரசியம் கூடும் விதமாகச் சில பத்திகளைப் புதிதாக எழுதிச் சேர்த்திருக்கிறேன்.

மொழி அழகு கருதி, சில சொற்களை, சில வாக்கியங்களை, சில பத்திகளை, முதல் பதிப்பில் இருந்தவண்ணமாகவே விட்டிருக்கிறேன்.

ஆயினும், மணிப்பிரவாள நடையில் என் தந்தையார் இயற்றிய நூலையும் தமிழ் வாசகர்கள் இழந்துவிடலாகாது என்றும் எண்ணுகிறேன். ஆகவே, நூற்பதிப்பின் மொத்த எண்ணிக்கையில் சரிபாதியை மட்டும் திருத்திய மொழியில் வெளியிடுகிறேன்.

தமிழ் மக்கள், இரண்டாம் பதிப்பின் இரண்டு வகைகளையும் வாங்கி ஆதரிக்க வேண்டுகிறேன்.

ஹா. சப்தரிஷி

மெட்ராஸ்

5.4.1976

# அத்தியாயம். 20

ஞாபகத்தில் ஓடும் காட்சிகள், புலனாவது எந்த வெளிச்சத்தில். வாசனைகளும், ஒலிகளும் உருவப்பட்ட காட்சிப் புலத்திலிருந்து வெளிச்சத்தையும் உருவி எடுத்துவிட்டால், என்ன மிஞ்சும்? அப்போது, தகப்பன் எது, தாய் எது, பள்ளி எது, கல்வி எது, சுற்றிலும் இவை எதுவுமே இல்லாத சூழலில், இவையனைத்துமே இருப்பது எங்ஙனம்?

ஜடப்பொருட்களின் மேலும் உயிர்ப்பொருட்களின் மேலும் மனம் கொள்ளும் உணர்ச்சிகளின் பௌதிக வரைபடம் போலத் தென்படுகின்றன உறவுகள். வரைபடத்தின் கோடுகள் சுயேச்சையான இயக்கத்தில் கூடுகின்றன, கலைகின்றன.

வரைபடம் மிதவையாகிறது. காலங்காலமாக ஓடும் நதியில் இழுபடுகிறது.

ஒங்க பேரு?

பழனியப்பன்.

அவருக்கு நீங்க என்ன வேணும்?

பையன்.

கொஞ்சம் பொறுங்க. வந்துருவாரு. வளக்கமாப் பத்தரை வண்டியிலே வர்றவர்தான். இன்னைக்கி என்னமோ லேட்டாயிருச்சு. உள்ளெ வந்து உக்கார்றீங்களா?

இருக்கட்டும்.

அறைக்குள்ளிருந்த தொலைபேசி அலறியது. கையிலிருந்த பச்சை சிவப்பு நிறக் கொடிகள் இரண்டையும் வாசலுக்கருகிலிருந்த இரும்பு பெஞ்ச்சில் வைத்துவிட்டு உள்ளே போனார். அறைக்குள்ளிருந்த மங்கலான வெளிச்சத்தில் அவருடைய வெள்ளை நிறச் சீருடை பளீரென்று தெரிந்தது.

பழனியப்பன் பெஞ்ச்சில் உட்கார்ந்தார். இரவு முழுவதும் பயணத்தில் ஒரு நிமிஷம்கூடத் தூங்கவில்லை. காலையிலிருந்து ஏழெட்டு ஸ்டேஷன்களில் இறங்கி விசாரித்தாயிற்று. முத்தலீப் வாத்தியார் பார்த்ததாக செய்யது சொன்னபோது நம்பிக்கை உண்டாகவில்லை. கிழம் ஏதோ உளறுகிறது என்று தோன்றியது. ஒரு வாரம் முழுக்கச் சொல்லிக்கொண்டேயிருந்தார் என்பதால், செய்யதுதான் வற்புறுத்தி அனுப்பி வைத்தான். பத்து வருஷம் கழித்து ஆள் எப்படியிருப்பார் இப்போது...

தண்டவாளங்கள் கண்காணாத் தொலைவை நோக்கி விரைகின்றன. நிலையத்தின் எல்லையில் விறைப்பாக நின்றிருக்கும் கைகாட்டி மரங்கள். அவ்வப்போது ஊதும் காற்றில் பழுத்த இலைகளை உதிர்த்தவாறு இருக்கும் பூவரச மரம்.

வெய்யில் சிறுகச் சிறுகக் கனத்து வருகிறது. நிலையப் பெயர்ப் பலகையின் மேல் தனியாக உட்கார்ந்திருக்கிறது ஒரு காகம். தொலைவில், ரயில் பாதைக்கு இருபுறமும் விரிந்த கட்டாந்தரையில் கானல் ததும்புகிறது.

இந்தப் பத்துவருஷத்தில் என்னவெல்லாம் நடந்துவிட்டது.... அப்பச்சியின் மேல் கோபமா, பச்சாதாபமா, வெறுப்பா... கிளைக்கும் உணர்ச்சியை என்னவென்று அடையாளம் காண்பது. தொண்டைக்குள் ஏதோ கசப்பாக ஊறிப் பெருகியது. அது சரி, வரவிருக்கும் மனிதன் என்னுடைய அப்பச்சிதானா என்பதே இன்னும் ஊர்ஜிதமாகவில்லை.

பெரும் ஓசையுடன் வந்து நின்ற ரயிலின் கடைசிப் பெட்டியிலிருந்து இறங்கிவரும் அந்த மனிதரைப் பார்த்தவுடன் வயிற்றில் ஒரு பள்ளம் உருவாகித் திரும்ப மேடிடுவது போல உணர்ந்தார் பழனியப்பன். பல வருஷங்களாக வளர்ந்தது போன்ற தாடியும் மீசையும். முடியை வெட்டும் பழக்கம் கிடையாது போல. கொண்டையாகப் போட்டிருந்தார். கெச்சலான உடலமைப்பு. இரண்டு கைகளிலும் பிடித்திருந்த பித்தளைக் குடங்களின் மஞ்சள் நிறம் சூரிய வெளிச்சத்தில் பளபளத்துக் கண்களைக் கூசச் செய்தது. அருகில் அவர் நெருங்க நெருங்க, உடல் முழுவதும் ஒரு வெதுவெதுப்பு உண்டாகியது.

அவரேதான்!

அப்பச்சி!

அவருக்கும் உடனடியாக அடையாளம் தெரிந்திருக்க வேண்டும். முகம் சலனமற்றிருந்தது. கணக்குப்பிள்ளை மேஜை முன்பு உட்கார்ந்து

வளர்ந்திருந்த அந்தத் தொந்தி எங்கே அப்பச்சி. நெற்றி அடர்ந்த திருநீறும், வெளுத்த வேஷ்டியும், மழித்த முகமும், வெற்றிலைச் சிவப்பில் கனிந்த வாயும்... அவர் வேறு மனிதர். இவர் வேறு. பித்தனைப் போல, அங்கங்கே கிழிந்த அரைக்கைச் சட்டையின் பூர்வீக நிறம் எதுவாகவும் இருந்திருக்கலாம். ஆனால், சுத்தமாகத் துவைக்கப்பட்ட உடைகள்.

வயிற்றில் திரண்டிருந்த பந்து, நெஞ்சில் கனமாக அடைத்தது. தொண்டையில் எதுவோ சிக்கிக்கொண்டது போன்ற அவஸ்தை. பழனியப்பன் நெருங்கிச் சென்று அவருடைய முன்னங்கையைப் பிடித்துக்கொண்டார்.

வா, பளனி.

நிழல் நோக்கி நடந்தார்கள் இருவரும். சிமெண்ட்டுப் பெஞ்சில் அமர்ந்து கொண்டார்கள். சற்று விலகியே உட்கார்ந்தார் ராமநாதன்.

சொல்லு. முத்தலீப்பு சொன்னானாக்கும்?

ஆமா. அப்பன்னா நீங்களும் அவரெப் பாத்தீகளா?

ஆமா. பாத்தேன்.

அவுரு சத்தம் போட்டுக் கூப்புட்டாராமேப்பச்சி.

கூப்புட்டான் கூப்புட்டான்...

வேகமாப் போயிட்டீகளாம். ரெண்டு வார்த்தை பேசியிருக்கலாமேப்பச்சி.

அதெல்லாம் சரிவராது பளனியப்பா.

அவருடைய முகம் இறுகிவிட்டது. நடைமேடையை அடுத்து இருந்த தண்டவாளப் பள்ளத்தின் மறுகரையில் அடர்ந்த கருவேலம் புதரைக் கண்கள் நிலைத்து வெறித்தன. அந்த ரயில் நிலையத்தில் அவரைத் தவிர யாருமே இல்லாதது போலத் தனிமை பூண்டு, கண்கள் திறந்த தியானத்தில் ஆழ்ந்துவிட்டவர் மாதிரி, இருந்தார். வெகுநேரம் கனத்திருந்த மௌனத்தைக் கீறி வெளியேறியது ஒரு கேள்வி.

ஒங்கம்மை எப்பிடி இருக்கா?

காலமாய்ட்டாங்கப்பச்சி...

முகத்தை மறைத்து எதிர்ப்புறம் திருப்பிக்கொண்டார். திமிறும் உணர்ச்சிகளைக் கட்டுப்படுத்தப் பிரயாசைப்படுகிறார் என்பது

தெரிந்தது. பழனியப்பன் அவரது வலது முன்னங்கையை ஆதுரத்துடன் பற்றினார். ராமநாதனின் உடம்பு ஒருமுறை விதிர்விதிர்த்து அடங்கியது. மீண்டும் அவரது பார்வை மகனின் புறம் திரும்பியபோது கண்கள் கடுஞ்சிவப்பாய் மாறியிருந்தன.

நல்ல மனுசி. பாவம்.... பளனீ. எனக்கு இஷ்டமேயில்லே. சிறு வயசிலிருந்தே, தேசாந்திரம் போயிரணும்; மனுஷங்க கூட இருக்கக் கூடாதுங்குற எண்ணம். ஒங்க அப்பத்தாதான் வற்புறுத்தி அவளை என் கழுத்திலே கட்டி வச்சாக. மேயப்போற எருமை களுத்துலே கட்டையைக் கட்டி விடுறது மாதிரி. என்னைப் பாத்தாச் சண்டி எருமை கணக்காத் தெரிஞ்சிருக்கும் போல. அய்யர்ட்டக் கணக்கப்பிள்ளை வேலை பார்க்கப் போயிச் சேந்தேன். ரெண்டு கட்டை கட்டின மாடு போலப் பெரீய்ய அவஸ்தை. அய்யன் தேனாப் பேசுவான். உள்ளுக்குள்ளே ஆள் சுத்தமில்லே. அவனைப் பாக்கும்போதெல்லாம் மிளகாய்ப்பழம் ஞாபகம் வரும் எனக்கு. பார்க்க எவ்வளவு அழகாயிருக்கும் அது? ஒரு வாய் கடிச்சுற முடியுமா. காந்தித் தள்ளீராது?

அவரும் போய்ச் சேந்துட்டாருப்பச்சி.

அப்பச்சியின் முகம் மறுபடி இளகியது. எதையோ நினைத்தவர் போலத் தனக்குத்தானே சிரித்துக்கொண்டார்.

அந்தப் பய வேம்பு உடன்கட்டை ஏறினானா!

கேட்டுவிட்டு வாய்விட்டுச் சிரித்தார். பழனியப்பனும் சிரித்தார். நெகிழ்வான அந்தத் தருணத்தில் அப்பச்சியின் மேல் பழைய நாட்களில் இருந்த பிரியம் திரும்ப வந்து மனதில் கவிந்ததுபோல இருந்தது.

அப்பச்சி. எனக்குக் கல்யாணம் ஆயிருச்சப்பச்சி. பொண்ணு நேமத்தாம்பட்டி. மூனா லேனா வகையறா.

அட கிறுக்கா. அவ பேரைச் சொல்றான்னா...

செகப்பி.

பேருக்கேத்த நெறமா.

இல்லேப்பச்சி. நேர்மாறு...

பெரியவர் திரும்பவும் மனம் விட்டுச் சிரித்தார்.

அதானே. நம்ம குடும்பங்கள்ளே பேர் மட்டும்தானே செகப்பு.

அய்யர்தான் பாத்துப் பண்ணி வச்சாரு. நீங்க பொறப்புட்டு வந்ததுக்கப்புறம் அவருதான் பெரிய சப்போட்டு.

அந்த ஆளுக்கு உன்னை எப்பிடியோ பிடிச்சுப் போச்சு.

எம் பேருலே ஒரு வீடு எளுதி வய்க்கிறேன்னு சொல்லியிருந்தாரு. மதுரை வடக்கு மாசி வீதியிலே அவருக்கு ஒரு வீடு இருக்காமில்லே...

ஆமா. கிருஷ்ணன் கோயில் சந்துலே. யே யப்பா. அது பெரிய வீடுல்லே.

அதைத்தான். ஒனக்கு எளுதி வச்சுர்றேன். வாசகசாலை உத்தியோகத்துக்கு வர்ற வரும்படியும், மதுரை வீட்டு வாடகையுமா வச்சுப் பொளைச்சுக்கோன்னிருந்தாரு. எளுதுறதுக்குள்ளே தவறிப்போயிட்டாரு.

ராமநாதன் சற்று அமைதியாய் இருந்தார்.

நாம ரெண்டு பேரும் காரைக்குடியிலே இங்லீசு டாக்டரைப் பார்க்கப் போனமே, யாவுகம் இருக்கா?

இருக்கப்பச்சி, அதுக்கு மக்யா நாளைக்கி மக்யா நாளுதானே நீங்க கௌம்புனது.

ஆமா, அய்யர்ட்டெப் போய் உபகாரம் கேட்டேன். வைத்தியத்துக்குக் காசு வேணாமா. அவரு ரொம்ப சுபாவமாச் சொன்னாரு. ‘அஞ்சு வட்டியாகுமே ராமநாதா. கட்டுமா ஒனக்கு?’ எம்புட்டுப் பேரோட வட்டிக் கணக்கு எளுதியிருப்பேன் அந்த அய்யருக்காக. எத்தனை பேர்ட்டத் தண்டல் பண்ணியிருப்பேன். காயிதத்திலே எளுதுற ஒவ்வொரு லெக்கத்துக்கும் பின்னாலே ஒரு உசிருள்ள மனுசன் இருக்கான்னு தெரியாமப் போயிருச்சே.... சின்ன வயசுலே முளை விட்டிருந்த ஆசை திரும்பவும் எந்திரிச்சிருச்சு. அந்தப்படிக்கிப் பட்டணத்துக்கு ரயிலேறிட்டேன்.

இப்போ ஒடம்பு எப்பிடிப்பச்சி இருக்கு?

ஸ்பொடம் போட்ட மாதிரி ஆயிருச்சு. அன்னைக்கி ரயிலுக்குள்ள உக்காந்திருந்த முத்தலீப்பைப் பார்த்தேனே. எப்படிப் பெருத்து, கெழண்டு... சளிஞ்சு போயிட்டான் பய. நான் எப்பிடி இருக்கேன் பாத்தியா. இன்னும் பத்துப்பதினஞ்சு வருசத்துக்கு கியாரண்டி. ஆமா, அவம் மகன் ஒருத்தன் இருப்பானே, ஒஞ் சேக்காளி. எப்படியிருக்கான். நல்ல மரியாதையான பய.

அவன் மதுரைலே காலேஜ் வாத்தியாரா இருக்கான்.

நல்லாப் படிப்பான் அப்பவே. நீ மட்டும் என்ன. நீயும் நல்லாப் படிக்கக் கூடியவன்தான்.

இங்கே என்னப்பச்சி செய்றீக.

நானா.

அப்பாவின் முகம் பெருமிதம் கொண்டது. தன் ஆரோக்கியம் பற்றிச் சொன்னது சரிதான். உடல் சோரவில்லை இன்னும். முன்னங்கைச் சதை கல்லாய் இறுகியிருக்கிறது. நடையிலும் கொஞ்சம்கூடத் தளர்ச்சியில்லை.

சொல்லுங்க.

திருவொத்தியூரிலேருந்து, பேஸின் ப்ரிட்ஜு வரைக்கும் உள்ள எல்லா ஸ்டேஷன்லேயும் மரம் வளக்குறேன்.

என்னப்பச்சி சொல்றீக.

ஆமாய்யா. நான் இங்கே வந்தப்போ வச்ச செடிகள்லாம் இப்போ மரமாயிருச்சு. விடியக் கருக்கல்லே எழுந்திரிச்சு, இந்த ரெண்டு கொடத்தையும் தூக்கிக்கிட்டுப் பொறப்புட்டுருவேன். ஒவ்வொரு ஸ்டேஷன்லயும் இறங்கி, ஒவ்வொரு மரத்துக்கும் ரெவ்வெண்டு கொடம் தண்ணி ஊத்துவேன். பத்தரை மணிக்கு இந்த ஸ்டேஷனுக்கு வந்துருவேன். சாயங்காலம் வெய்யில் இறங்கினதும் எதிர்ப்பக்கம் உள்ள ஸ்டேஷன்களுக்குப் போய்த் தண்ணி ஊத்துவேன். ராத்திரி இங்கெனேயே தங்கிக்கிர்றது. யாராவது உபகாரிகள் குடுக்குற காசிலே சாப்புட்டுக்குர்றது. சில பேர் சாப்பாடாவே வாங்கிக் குடுத்துருவாக. நல்லதாப் போச்சுன்னு சாப்பிட்டுக்கிருவேன்...

ஏம்ப்பச்சி இந்தக் கஷ்டம், வயசு காலத்திலே.

கஷ்டமென்னடா இதுலே? மனுசங்களோட வாழ்ந்திட்டிருக்கும் போது சய ரோகம் வந்துச்சு. மரங்களோட இருக்கும்போது, வந்த வியாதி தானாப் போயிருச்சு. பகல்முழுக்க யார் கூடவும் பேசக் கூட வேண்டியிருக்காது. பேசாம இருந்தா எம்புட்டு சக்தி மிச்சம் ங்குறே!

ஏம்ப்பச்சி தனியா இருந்து கஷ்டப்படணும். எங் கூட வந்திருங்கப்பச்சி.

அதெல்லாம் சரிவராது பளனியப்பா. எனக்கு இந்த இடமும், இந்த

வேலையும்தான் சரி. விடு. சாப்பிடப் போலாம் வா.

நிலையத்தை விட்டு வெளியில் வந்தார்கள். எதிர்ப்பட்ட ஒருவரை நிறுத்தி,

டாக்டர் ஸார், எம் பையன். பாத்துட்டுப் போக வந்திருக்கான். இவன் விலாசம்தான் உங்கள்ட்டெக் குடுத்து வச்சிருக்கேன். தம்பீ, வியாதி வெக்கைன்னா இவர்ட்டதான் பாத்துக்கிறது. சயம் போயிருச்சுன்னு இவர்தான் பாத்துச் சொன்னவரு...

என்றார். அவர் புன்னகையுடன் தலையசைத்து, வணக்கம் தெரிவித்துவிட்டுப் போனார். பெரிய ஓட்டல் ஒன்றில் நுழைந்தார் ராமநாதன்.

வளக்கமா இங்கெல்லாம் வரமாட்டேன். வயித்துக்கும் கட்டாது. சட்டைப்பைக்கும் கட்டாது. இன்னைக்கி நீ வந்திருக்கே. விருந்தாளியைப் போயி ரயில்வே கேண்டீன்ல சாப்பிடச் சொல்லலாமா!

ஏம்ப்பச்சி விருந்தாளிங்குறீக. மனசுக்குக் கஷ்டமா இருக்கப்பச்சி.

அடப் போடா. பைத்தியக்காரன். சும்மா ஒரு வார்த்தைக்கிச் சொன்னா, அதைப் பிடிச்சுக்கிட்டுத் தொங்குறான். அந்த டாக்டர்ட்டெ உன்னை அறிமுகப்படுத்தலையா. நாளைக்கே எனக்கு ஒண்ணுன்னா, நீதானய்யா வந்து பொறுப்பேத்துக்கிறணும்.

அப்பச்சி, எங்கூட வந்துருங்கப்பச்சி.

விடுய்யா. அதையே திருப்பித் திருப்பிச் சொல்லாதே. சாப்பிடு. இங்கே சாப்பாடு நல்லாயிருக்கும்.

மோடம் போட்டுவிட்டது. இதமான காற்று உரசிப் போகிறது. ரயில்நிலையத்தின் விளக்குகள் எரிய ஆரம்பித்துவிட்டன. வெகு நீண்ட கூட்ஸ் வண்டி நிலையத்தைக் கடக்கிறது. தடதடதட வென்ற இரும்போசை நடைமேடையை நிரப்புகிறது.

காணாமல்போய், எங்கெங்கும் தேடி அலுத்து, இனிக் கிடைக்க மாட்டார் என்று உறுதியான தினத்தில் மனதில் படர்ந்த சோர்வை விடவும் அதிகமான சோர்வு இருக்கிறது இன்று. பிடிவாதம் பிடிக்கும் மனிதனை என்ன செய்வது?

என்ன பலமான யோசனெ?

ஒண்ணுமில்லப்பச்சி.

தம்பீ, நீ எனக்கு ஒரு உபகாரம் பண்ணணுமே.

சொல்லுங்கப்பச்சி, செய்யிறேன்.

வாக்குக் குடுப்பியா.

சத்தியமா செய்யிறேன் ப்பச்சி.

அடிக்கடி என்னை வந்து சந்திக்கக் கூடாது.

என்னப்பச்சி இது!

வாக்குக் குடுத்திருக்கே. மாறப்புடாது. இந்தா நீ வந்துட்டுப் போறே. என் மனசு களங்கப்பட்டுருச்சுன்னு வையி, நாளைக்கி என் வேலையை நிம்மதியாப் பாக்க முடியாது பாரு. அப்புறம் எங் கொளந்தைகளெல்லாம் ஏங்கிப் போகும்.

இது 1966 ஏப்ரலில், '68 செப்டம்பரில் போனபோது, 'அவர் இப்போது இங்கு தங்குவதில்லை, எங்கு போனார் என்று தெரியவில்லை' என்று சொன்னார் அந்த நிலையத்துக்குப் புதிதாக வந்திருந்த அதிகாரி... 'சரி, நாளைக்கே அவருக்கு ஒண்ணுன்னா நமக்குத்தான் தகவல் வருமே' என்று சமாதானம் சொல்லிக் கொண்டார் ராம. பழனியப்பன்.

## அத்தியாயம். 21

ஆலாஸ்யம், சிறுவயதில் எனக்குத் தூக்கத்தில் நடக்கிற வியாதி இருந்தது. உண்மையில், அதை வியாதி என்று சொல்லக் கூடாது. கனவின் முற்றிய தத்ரூப நிலை.

கனவில் வந்த பண்டத்தைத் தின்றுகொண்டிருப்பேன். ஏதோ ஒரு ஓசை விழிக்கச் செய்துவிடும். தின்பண்டத்தைப் பிடித்த நிலையில் விரல்கள் கூடியிருக்க, மெல்லுவதுபோல வாய் அசைந்துகொண்டிருக்க, கண் மட்டும் நனவுலகத்தைப் பார்த்துக் கொண்டிருக்கும். அதாவது தேகத்தின் ஒரு பகுதி கனவு நிலைக்கு ஆட்பட்டும், இன்னொரு பகுதி நனவு நிலைக்கு விழித்தும் இருக்கும்.

அந்த நிலையிலிருந்து விலக ஓரிரு கணங்கள்தாம் ஆகும். என்றாலும் அன்று முழுவதும் பீடிக்கப்பட்டவன் மாதிரி இருப்பேன். கனவிலிருந்த வஸ்துவை நனவுலகத்துக்குக் கொண்டுவர இயலாமல் போனது பெரும் ஏக்கமாய்ப் படரும்...

கனவில் நடந்து சென்று வாசல் கதவைத் திறந்து சுற்றுச் சுவருக்கு வெளியே போய் வஸ்திரத்தை விலக்கிக் குந்தி உட்கார்ந்து படுக்கையில் சிறுநீர் கழித்துவிடுவேன். கிட்டத்தட்ட பதினைந்து பதினாறு வயதுவரை இந்தப் பழக்கம் இருந்தது. சிலசமயம் ஆதங்கமாக இருக்கும். கனவுக்கும் நனவுக்கும் இடையிலான தடுப்பு ஒரு சுவர் மாதிரித்தானே மற்றவர்களுக்கு இருக்கிறது. எனக்கு மட்டும் மெல்லிய கோடாக, அதுவும் அங்கங்கே அழிந்து, இருப்பது ஏன்?

கனவிலிருந்து மீண்டதும், கனவு முடிந்துவிட்டதா அல்லது தொடர்கிறதா என்று நிதானிக்க முடியாமல் போகும் சிலநாள். கனவில் தூங்கிக்கொண்டிருப்பேன். அப்பா வந்து எழுப்புவார். விழிப்பேன். படுக்கைக்கு அருகில் நின்றுகொண்டிருப்பார் அப்பா. எனக்குக் குழப்பமாகிவிடும். அப்பா நின்றுகொண்டிருப்பது கனவிலா, நனவிலா.

இதன் அடுத்த கட்டமாக, இன்னும் விசித்திரமான கேள்வி உண்டானது ஒருமுறை. அவர் நின்று கொண்டிருப்பது என்னுடைய கனவிலா,

அவருடைய கனவிலா.

மொத்தத்தில், கனவு நிலை என்பது விழிப்பு நிலையின் அம்சங்கள் அனைத்தையும் கொண்டதாகவும், நனவு நிலை என்பது மானசீகக் கற்பனாதீதத்தின் பெறுபொருள் போலவும் தென்படத் தொடங்கியது. மீள முடியாத பொறி ஒன்றில் சிக்கிவிட்டதான பிரமை உண்டானது.

பார்வைகொள்ளும் காட்சிகளின் அகத்தன்மை பிறழ்ந்து போனது. தஞ்சாவூர்ப் பெரிய கோவிலைப் பார்க்கும்போது ராஜராஜசோழனின் கனவுதான் கட்டடமாக நின்றுகொண்டிருக் கிறது என்று தோன்றும். என் தகப்பனின் காதற்கனவு முத்துச்சாமி என்ற பெயரில் நடமாடுவதாகத் தோன்றும். இதன் உச்சமாக, புறவுலகெங்கும் யாரோ ஒருத்தரின் கனவில் இயங்குவதாகத் தோன்ற ஆரம்பித்தது.

கனவு அல்ல, கனவு பற்றிய சிந்தனைதான் என்னைப் பிடித்த வியாதி என்றறிந்தேன். மற்றவர்களுக்கு இதுவொன்றும் தெரியாது என்பது எனக்குத் தெரியுமே. ஒரு முழுப் பிரபஞ்சம் பிரத்தியேகமாக என்னிடத்தில் இருக்கிறது. அதில் மற்றவர்களால் சரளமாக நடமாடமுடியும். ஆனால் அவர்களுக்கு என் அபிலாஷைகளின் வரப்புக்கு வெளியில் ஓரடிகூட வைக்கும் சுதந்திரம் இல்லை...

என் கனவுப் பிரபஞ்சத்தில் நானாக ஆசையுடன் நுழையும்போது அதன் நிலப்பரப்பு ஒரு விதமாகவும், தானாய் அது என்னை சுவீகரிக்கும்போது வேறுவிதமாகவும் இருந்தது.

கடைவாய்ப் பல் வளர்கிறமாதிரி, பருவம் வந்ததும் மறைவிடங்களில் ரோமம் வளர்கிற மாதிரி, உடம்பின் ஆழத்தில் கண்ணுக்குப் புலனாகாமல் வியாதி வளர்கிற மாதிரி, என் பிரத்தியேகக் கனவுப் பேரண்டம் என்னுள் ரகசியமாக வளர்ந்துகொண்டு போனது.

இந்த நிலையில்தான் அப்பா இறந்து போனார். அடுத்து அவருடைய கருமாதிக் காரியங்கள் முடிகிறவரை அந்த வீட்டுக்குள் அவர் வளைய வருகிற மாதிரியே ஒரு உணர்வு இருந்துகொண்டிருந்தது. சிலசமயம் அவர் என்னை ஸ்பரிசிக்கிற மாதிரி. ஓரிரு வார்த்தைகள் பேசுவது மாதிரி. பிரமைக்கும் நிஜத்துக்கும் இடைப்பட்ட ஒரு பிராந்தியத்தில் அவர் இருந்துகொண்டேயிருந்தார் எனக்கு. வீட்டில் மற்றவர்களிடம் சொன்னபோது யாரும் நம்பவில்லை.

ஆறுமாதம் கழித்து மதுரையில் ஒரு கல்யாணத்துக்குப் போயிருந்தோம். மண்டபத்தின் தரைத் தளத்தில் சடங்குகள் நடந்தன. மாடியில் சாப்பாடு. மாடிக்குப் போக மண்டபத்தின் முன்புறம் ஒன்றும் பின்புறம் ஒன்றுமாக

இரண்டு படிக்கட்டுகள் இருந்தன. சாயங்கால நேரம். கல்யாண வீட்டுக்கு வந்தவர்களில் அநேகர் புறப்பட்டுப் போய்விட்டார்கள்.

பின்கட்டுக்குப் போவதற்காகப் படியிறங்குகிறேன். மாடிப்படி வளைந்து திரும்புகிற இடத்தில் ஒரு அறை இருந்தது. யதேச்சையாக அறைக்குள் பார்த்தேன். சற்றுத் தாராளமாகவே இருட்டு நிறைந்திருந்த அறையின் தரையில் என் அப்பா படுத்திருந்தார். நல்ல உறக்கம். இடுப்பில் வெள்ளை நிறத் துண்டு மட்டுமே உடுத்திக் கொடுங்கை மடித்துத் தலைக்கணையாக வைத்துப் படுத்திருந்தார். சந்தேகமேயில்லை. என் அப்பாதான் அது.

அவசரமாக விலகி வந்துவிட்டேன். கீழே வந்ததும் யாரிடமும் பேசமுடியவில்லை என்னால். குற்றவுணர்வு பிடுங்கித் தின்கிறது. சில நிமிஷங்களுக்குமேல் தாள முடியவில்லை. விறுவிறுவென்று மாடிக்கு ஏறிப் போனேன்.

அறைக்குள் அப்பா படுத்திருந்த இடம் வெறுமையாக இருந்தது.

துக்கம் பெருகி வந்தது. அப்பாவை மறுபடி சந்திக்கும் வாய்ப்பை இழந்தது குறித்து பெரும் ஏக்கம் படர்ந்துவிட்டது மனத்தில். அப்பாவைக் கனவில் பார்க்கும்போது உண்டாகும் உத்ஸாகமும், வாத்ஸல்யமும், நிஜத்தில் பார்க்கும்போது ஏன் இல்லாமல் போய்விட்டது? தொடர்ந்து ஒரு வாரம் புழுங்கிய பிறகு பெறற்கரிய பாடம் ஒன்று சித்தித்தது. நிஜம் எப்போதுமே பயங்கரமான ஒன்றாகவும், கனவு ஒரு சரணாலயம் போலவும் தென்பட்டன.

சோழவந்தானில் சிகாமணி என்று ஒரு சிநேகிதர் இருந்தார். அவர் கொஞ்சம் வேறுமாதிரியானவர். வள்ளுவர் குலத்தவர்தான். வரவிருக்கும் சிலவற்றை, ஜாதகங்களைப் பார்க்காமலே கணித்துச் சொல்லக்கூடியவர். வித்தையை விற்பதில்லை என்ற கொள்கை கொண்டவர்.

அவருக்குப் பிடித்த சிற்றுண்டி என்ன தெரியுமோ? நெல்லை அரைத்து மீறும் தவிடு! இதுபோக, இரும்புத் தகடுகள், கண்ணாடிச் சில்லுகளைக் கறகறவென மென்று தின்பார். பொதுவாக அவரிடம் யாரும் பேச்சு வைத்துக்கொள்வதில்லை.

நாம் ஏதாவது ஆரூடம் கேட்டால், பூடகமாகப் பதில் சொல்வார். சிலவேளை, தானாகவும் சொல்வார். ஒருமுறை, அவரும் நானும் ஊருக்கு வெளியே நடந்து செல்கிறோம். சுடுகாட்டைத் தாண்டிச் செல்கிறோம். தற்செயலாகத் திரும்பிக் காட்டுக்குள் பார்த்தேன். சிகாமணி கடுகடுத்துச்

சொன்னார்:

அங்கே என்ன பார்வை? அதுதான் ஒருமாசத்தில் வரப்போகிறாயே.

உனக்குத்தான் தெரியுமே. இருபது நாட்களில் அப்பா இறந்துவிட்டார்.

நாதமுனி கோயில் கட்டாந்தரையில் படுத்துக்கொண்டார் ஒருதரம். தன் அக்குள்களில் சொருகி, முதுகின் குறுக்காக நுனிகளை வெளியேற்றின துண்டைப் பிடித்து இழுத்துக்கொண்டு போகும்படி சொன்னார். நான் கூசினேன். திரும்பத் திரும்ப வற்புறுத்தினார். நான் இழுத்துக்கொண்டு போனேன்.

குப்புறப் படுத்திருந்த சிகாமணி, தரையில் தரதரவென இழுபட்டார். நெஞ்சில் தாறுமாறாய்க் கீறல்கள். ரத்தம் கசிகிறது. எதற்காக இந்தப் பாடு என்று தோன்றியது. எழுந்து துண்டை உருவித் தன் நெஞ்சைத் துடைத்தவாறு,

ஸர்ப்பம் நன்றாகப் போயிற்றா. எப்படி நெளிந்தது பார்த்தாயா...

என்று என்னைக் கேட்டார். எனக்கு ஒன்றும் விளங்கவில்லை. துண்டால் துடைத்ததும் நெஞ்சு முன்போலாகி விட்டது! கீறல்கள் இருந்த சுவடேயில்லை. துடைத்த துண்டை என்னிடம் கொடுத்தார். ஜவ்வாது வாசனை வீசியது அதில்.

கல்யாண மண்டபத்தில் அப்பாவைப் பார்த்தது பற்றி சிகாமணியிடம் தெரிவித்தேன். சிகாமணி சொன்னார்:

> நிஜத்திலும் கனவிலும், கனவுக்கும் நிஜத்துக்கும் இடைப்பட்ட பிளவிலும் காட்சி தந்து மறைந்த பிம்பத்துக்கு அப்பா என்று பெயர் வைத்திருக்கிறாயாக்கும்?

சிகாமணியின் சிஷ்யனாகிவிட்டேன். சில அப்பியாசங்களைச் சொல்லித் தந்தார். சில சுவடிகள் வாசிக்கத் தந்தார். நிஜத்திலிருந்து கனவுக்குள் நுழைந்து முன்னேறும் பாதை ஒன்று அறிமுகமாகி விட்டது. உம்மை மாதிரிக் கோழைகளுக்கு ஒத்துவராது ஆலாஸ்யம். காலனைத் துச்சமாக மதிக்கிற மனம் உள்ள தீரர்கள் மட்டுமே நடக்கக் கூடிய பாட்டை அது.

வேறுவிதமான தரிசனங்கள். எண்ண ஓட்டங்கள். அதையெல்லாம் எல்லாரிடமும் பகிர்ந்துகொள்ள முடியாது. அநேகம் பேரிடம் சொல்ல ஆரம்பிக்கும்போதே உள்நாக்கில் கசப்பெடுத்துவிடும். உடனே வேறு ஏதாவது பேச ஆரம்பித்துவிடுவேன்.

உம்மிடம் சொல்லும்போது வாயில் கற்கண்டின் சுவை பெருகுகிறது. இப்போதைக்கு இது போதும். சந்தர்ப்பம் வரும்போது இன்னும் விஸ்தாரமாகச் சொல்லுகிறேன்.

ஆனால் ஒன்று ஆலாஸ்யம்.

மனித மனம் ஒரு பெரிய மாளிகை மாதிரி. நகரத்தார் வீடுகளைப் பார்த்திருக்கிறீரா? அது மாதிரி. ஏகப்பட்ட அறைகள் கொண்டது. அத்தனை அறைகளையும் உபயோகப்படுத்த முடியுமா? புழக்கத்துக்குத் தேவையான அறைகளில் மட்டும் ஆள் நடமாட்டம் இருக்கும். மற்றபடி, திறக்கப்படாத அறைகள்தான் ஜாஸ்தி இருக்கும்.

சாதாரண ஜனங்களுக்கு, அவர்களுடைய தினசரிப் பாட்டைக் கழிக்க, சில அறைகள் போதும். அவற்றில் மட்டும் போய்ப் போய் வருவார்கள். நான் இன்னார், இன்ன இடத்திலே இருக்கிறேன், இன்ன பொழுதிலே இருக்கிறேன், இன்ன தொழில் பார்க்கிறேன், இன்ன மாதிரிப் பிறந்தேன், இன்ன இடத்திலே வளர்ந்தேன் என்கிற மாதிரி. அவ்வளவுதான்.

அதே, அஷ்டாவதானம், சதாவதானம் செய்கிறவனைப் பாரும். அவன் கூடுதலான அறைகளைத் திறந்து பார்த்தவன்.

என்னைப் போன்றவர்கள், இன்னுங் கொஞ்சம் அறைகளைத் திறந்து பார்ப்போமே, என்னதான் இருக்கும் அதிலே என்று முயற்சி செய்கிறோம்.

ஆலாஸ்யம், அறிந்தோ அறியாமலோ, நான் ஒரு அறையைத் திறந்து பார்த்துவிட்டேன்.

அது அறை இல்லை ஆலாஸ்யம். குகை. போய்க்கொண்டே இருக்கிறது.

## அத்தியாயம். 22

தலைநகரின் வெளிவிளிம்பைத் தாண்டியதும் பசுமை போர்த்த வயல்கள் தொடங்கிவிடுகின்றன. வாலாட்டித் தொடரும் வளர்ப்பு நாயின் விசுவாசத்துடன் யமுனை உடன்வர மாலைநடையில் வெகுதூரம் நடந்து வந்திருந்தோம். என்னுடைய கால்கள் துவளத் தொடங்கியிருந்தன. மவுல்வி, புறப்பட்ட போதிருந்த அதே விறைப்பும் உற்சாகமும் கொண்டு நடந்தார். கொஞ்ச நேரமாகப் பேசாதிருக்கிறார்; அது மட்டுமே வித்தியாசம். தொலைவில், யமுனையின் பரப்பில், குமிழ்கள்போல எழுந்து அடங்கின முதலைகள்.

எனக்கு வலதுபக்கம் மவுல்வி நடந்துவந்தார். அவருக்கும் எனக்குமான இடைவெளியில் இரண்டு மூன்று அடிகள் பின்தங்கி துபாஷிக் கிழவன் வந்துகொண்டிருந்தான். மவுல்வி நல்ல உயரம். சராசரி இந்தியர்களை விடச் செந்நிறமாய் இருந்தார். ரோஜா நிற நெற்றியில் அழுத்தமான, அகலமான கருந் தழும்பு இருந்தது. நெஞ்சுவரை நீண்ட வெண்தாடியின் பிசிறுகள் காற்றில் பரபரத்தன.

மவுல்வி சுமாராக ஆங்கிலம் பேசக்கூடியவர். உலகத்தின் உச்சியில் நிற்பவர் போன்ற மனோபாவம்; வார்த்தைகளிலும் குரலின் த்வனியிலும், சொற்களை எறியும் விதத்திலும் புலப்படும். பேச்சில் ஒருவிதமான நிர்தாட்சண்யமும், வேகமும் தெரியும். அவருடைய பேச்சின் கனத்திலும் வசீகரத்திலும் நான் மூழ்கிவிடுவேன்.

ரொம்பத் தெரிந்ததுபோல இருக்கும் என்னுடைய வாழ்க்கை கொஞ்சமும் அறியாததுபோல ஆகிவிடும், அவருடன் பேசக் கிடைக்கும் நேரங்களில்.

பேசாத நேரங்களில் நடையின் வேகம் அதிகரித்துவிடுகிறது.

மனதின் தன்னிச்சையான அசைவில் மவுல்வியிடம் சொன்னேன்:

> பாதுஷா அமைத்திருக்கும் மிருகக் காட்சிசாலைக்குச் சென்றுவந்தேன் நேற்று.

மவுல்வி முகத்திலடித்தாற்போலப் பதில் சொன்னார்.

ஆமாம். பறவைகள் அரசாள வந்திருந்தால், மனிதர்கள் காட்சிப் பொருட்களாகியிருப்பார்கள். மனிதர்களின் சம்போகம் பற்றி மயில்கள் குறிப்பு எடுத்திருக்கும். மயில்கள் புணர்வது பற்றி பாதுஷா எழுதியிருப்பது போல.

மேற்கொண்டு என்ன பேசுவது என்று தெரியவில்லை. சில கஜங்கள் கடந்த பிறகு மீண்டும் சொன்னேன்:

இல்லை, ஒவ்வொரு பிராணியின் பெயரும் எனக்குத் தெரிந்திருக்கிறதல்லவா. பிற ஜீவராசிகளுக்கு அப்படித் தெரியாதே என்று தோன்றியது.

அதாவது...

எனக்கு மானை மான் என்றும், மயிலை மயில் என்றும், குதிரையைக் குதிரை என்றும், குருவியைக் குருவி என்றும் தெரிகிற தல்லவா? ஆனால், மானுக்கு மயிலைப் பார்க்கும்போது, அது தன் சக மான் அல்ல, வேறு இனம் என்று மட்டும்தானே தெரியும்? மனிதனுக்குக் காணக் கிடைக்கும் இத்தனை விந்யாசங்களும் அவை பற்றிய அறிவும் மிருகங்களுக்கும் பட்சிகளுக்கும் இருக்குமா என்ன?

இல்லாமல் என்ன? அவற்றுக்கு மிக முக்கியமான இன்னொன்று தெரியுமே. தனக்கு இரையாகக்கூடியது எது? தன்னை இரையாகக்கொள்வது எது? இந்த இரண்டின் அடிப்படையில் அவற்றின் பிரபஞ்சம் இரண்டாகப் பிளந்து கிடக்கிறது.

**ய**முனையின் பரப்பில் அவ்வப்போது படகுகள் சென்று வருகின்றன. சாலையின் மறுபுறம் நன்கு வளர்ந்து உயர்ந்த நெல் நாற்றுக்கள்; நீர் கோர்த்த வேரடிகளுடன் அசைகின்றன. காற்றில் குளிரும் ஈரமும் அதிகரித்துவிட்டது. பகற்பொழுது என்னும் கனி உண்ணும் பதத்துக்குக் கனிந்தது போன்ற அந்தியின் மஞ்சள் வெய்யிலில் முயங்கிக் கிடக்கின்றன சகலமும். சதுரங்கக் கட்டங்கள் போன்ற வரப்புகளால் பகுபட்டுக் கிடக்கின்றன வயல்கள். மவுல்வியிடம் கேட்டேன்:

இந்த தேசத்தில் எதற்காக இத்தனை கடவுள்கள்? கடவுளின் பேரால் ஏன் இவ்வளவு பிரிவுகள், பிரிவினைகள்?

ஐயா, வரப்புகளுக்குக் கீழே நிலம் ஒன்றேயாக இருப்பதைப் பார்த்தீர்களா? வயலில் நீர் நிரம்பியிருக்கும்போது பறவைகளுக்கு யமுனையும், வயல்வெளியும் சமமான இடங்கள்தான் நீர் அருந்த.

உண்மையில், வடிவங்களாய்க் கடவுளை அறிந்து வணங்குபவர்கள் இருக்கிறார்கள். வடிவமின்மை என்னும் மகத்தான வடிவமே கடவுள் என்று நம்புபவர்களும் இருக்கிறார்கள்.

விளங்கவில்லை எனக்கு.

உம்முடைய அறையில் நாற்காலி இருக்கிறதல்லவா? இடத்தை அடைத்திருக்கிறது அது என்பது ஒரு பார்வை. நாற்காலி இடமாகவே இருக்கிறது என்பது மற்றொரு பார்வை. இரண்டு பார்வைகளுமே ஒரு அடிப்படை உண்மையை மறுக்கவில்லை. இடம் என்ற ஒன்று உண்டு என்பதை.

புரிகிறது. மேலே சொல்லுங்கள்.

இதற்கு மாறான பார்வை ஒன்றேதான் உண்டு. இடம் என்ற ஒன்றே இல்லை என்பது. அவர்களின் நோக்கமும் உயர்வானதுதான். பிசாசை ஒழிக்கவேண்டுமானால், கடவுளை ஒழித்தாகவேண்டும் என்கிறார்கள் அவர்கள். நியாயம்தானே.

நான் சும்மாயிருந்தேன்.

ஆனால், பாமர ஜனங்களுக்கு வேண்டியிருக்கிறது. காப்பதற்குக் கடவுளும் மிரட்டுவதற்குப் பிசாசும் இல்லாது போனால் அவர்களு டைய மனங்கள் சிதறிவிடும். தங்கள் பிரக்ஞைவெளியின் கவனிக்கப்படாத மூலையில் காத்துக்கொண்டிருக்கும் மரணம் என்ற விஷப்பூச்சியைச் சதா சர்வகாலமும் தரிசிப்பவர்களாகி விடுவார்கள்.

மௌனமாக வந்துகொண்டிருந்த துபாஷிக் கிழவன், வலது கையைத் தலை வரை உயர்த்தி மானசீகச் சிலுவை ஒன்றைத் தன் உடலின் மேற்பாதியில் வரைந்துகொண்டான்.

சாலையில் எங்களை எதிர்கொண்டு தாண்டிச் செல்லும் நபர்களின் எண்ணிக்கை அதிகரித்தது. எதிர்த்திசையில், சாலையோரத் திடலில் கனன்று தெரியும் ஆரஞ்சு நிறப் பிழம்பும் அதன் உச்சியில் பெருகி விலகிய புகையும் தென்பட்டன. எதிர்ப்பட்டவர்கள் மவுல்விக்கு ஸலாம் செய்து போனார்கள். மிகுந்த பணிவுடன் ஒவ்வொருவருக்கும் பதில் வணக்கம் சொல்லிவந்தார் மவுல்வி.

எங்கு சென்று திரும்புகிறார்கள் இவர்கள்.

மயானத்துக்கு.

தொலைவில் தெரிந்த பிழம்பு, எரியும் சிதை என்று புரிந்தது எனக்கு. மவுல்வி தாமாகச் சொன்னார்:

முந்தாநாள் ஒரு இசை நிகழ்ச்சி கேட்டீர்களில்லையா. அன்று பாடியவன்தான் எரிந்துகொண்டிருக்கிறான்.

நான் பதறிவிட்டேன்.

அப்படியா...! என் ஆண்டவரே!

நமக்கெல்லாம் அவன் வழங்கிய இசையின் போதையே அபரிமிதமாய் இருந்தது. அவனுக்கு அது போதவில்லை. அன்று இரவெல்லாம் குடித்துக்கொண்டே இருந்திருக்கிறான். மறுநாள் காலை ரத்த வாந்தி. இப்போது நெருப்பைக் குடித்துக்கொண்டிருக்கிறான்.

சிதை எரியும் இடத்தை நெருங்கியிருந்தோம். நெருப்பிலிருந்து பார்வையை மீட்டெடுக்க முடியவில்லை எனக்கு. மயிரும் சதையும் கருகும் நாற்றம் வயிற்றைப் புரட்டுவதாக இருந்தது. ஏன் என்றே தெரியாமல் என் அடி வயிற்றிலிருந்து துக்கம் பீறிக் கிளம்பியது. முந்திய தினத்தில் அவனுடன் உணர்ந்த ஒன்றிணைவு என் கண்களிலிருந்து உருகி ஓடியது.

அவன் குரல் இன்னமும் ரீங்கரித்துக்கொண்டிருக்கிறது என் செவிகளில்.

பின்னே, மகா விற்பன்னன் அல்லவா அவன். ஏழு வயதில் பாட ஆரம்பித்தவன்.

திரும்பி நடக்க ஆரம்பித்தோம். அவனுடைய முகம், வெற்றிலைச் சாறிறங்கிய கடைவாய், கலைந்த கேசம், கரங்களின் வெறித்தனமான அசைவு... இதோ, அருகிலிருக்கும் பித்தளைப் பளபளப்பில் அவன் ரத்தச் சிவப்பாய் உமிழும் தாம்பூலச் சாறு வயல்வெளியெங்கும் தெறிக்கிறது.

நிரந்தர விலாசம் கிடையாது. மதுக்கூடங்களில்தான் வாசம். குடித்துவிட்டு ஏதாவது கழிவு நீர் ஓடைக்கருகில் விழுந்து கிடப்பான். எந்த ஊரில் என்றுதான் சொல்ல முடியாது. உங்களுக்காக ஏற்பாடு செய்யப்பட்ட கச்சேரியில் அவன் பாடவேண்டும் என்று பாதுஷா விரும்பினார். மூன்று மாதங்களுக்கு முன்பே அவனைத் தேடிப் புறப்பட்டுப் போனார்கள் ஆட்கள். இறப்பதற்காகத் தலைநகருக்கு வந்து சேர்ந்தான் போலிருக்கிறது.

இவ்வளவு மேதைமை உள்ளவனுக்கு மதுவிடமிருந்து தப்பிக்க

முடியாமல் போனதே.

அவனிடம் ஒரு முறை கேட்டேன். ‘ப்ருத்வீ, இப்படி, சதா குடியில் மூழ்கிச் சிறுகச் சிறுக மாய்த்துக்கொள்கிறாயே உன்னை.’ அவன் சொன்னான்: ‘ஐயா, நான் பாடும்போது ஜனங்கள் கிறங்குகிறார்கள். ஆனால், தோல்வியின் துக்கம் பீடித்துத்தான் ஒவ்வொருமுறையும் என் நிகழ்ச்சியை நிறைவு செய்கிறேன். பட்சிகளும், காற்றிலாடும் மரங்களும், வீறிட்டழும் குழந்தைகளும், திறந்து மூடும் கதவுகளும், மழைத்தாரைகளும், கடலலைகளும் எழுப்பும் மகோன்னதமான இசைக்கருகில், வியாதியஸ்தனின் இருமல் போல ஒலிக்கிறது என் இசை. என் தோல்வியை மறக்கக் குடிக்க வேண்டியதாகிவிடுகிறது. மதுவின் கிறுகிறுப்புக் குறையும்போது, ஒலித் தாதுக்கள் துரத்த ஆரம்பித்துவிடுகின்றன என்னை. என்ன செய்வது?’ என்றான். நமக்கு சப்தமாகக் கேட்பது அவனுக்கு ஸ்வர வரிசையாகக் கேட்குமாம்... பித்தன்.... பித்தன்...

ஞாபகங்களை ஊதி விரட்டுவதுபோல, மவுல்வியிடமிருந்து நீண்டதொரு பெருமூச்சு வெளியேறியது. திரும்பிப் பார்த்தேன். காற்றிலாடும் ஜ்வாலையில் அவனுடைய இசை, நாட்டிய ரூபமாய்ப் பொங்கியது தென்பட்டது. மவுல்வியிடம் அதைச் சொன்னேன்.

காட்சிசாலையில் மயிலைப் பார்த்தது பற்றிச் சொன்னீர்களல்லவா?

மயில் சாதாரணமாக நடக்கும்போதே அது நாட்டியப் பறவை என்று தெரிகிறது என்று மவுல்வியிடம் நான் சொன்னது நினைவு வந்தது.

ஆமாம்.

மயில் நடனமாடும் என்பது தெரிந்த பிறகு பார்த்ததால் உருவான காட்சிப் பிம்பம் அது. மற்றபடி, கோழியின் பாதங்கள் போன்று அமைந்தவைதான் மயிலின் பாதங்களும். யாருடைய சிதை எரிந்தாலும் ஜ்வாலை நாட்டியமாடும். மரணம் அடைவது மனிதர்களுக்கு இயல்பு. காற்றுக்கு இசைவது ஜ்வாலையின் இயல்பு.

டெல்லி நகரத்தின் இரவு விளக்குகள் புலப்பட்டன.

## அத்தியாயம். 23

முந்தின நாள் வந்த அதே ஜட்காக்காரக் கிழவன் வந்திருந்தான்.

அய்யா கூட்டிட்டு வரச்சொன்னாரு

என்றான். குதிரைக் கவிச்சி அடித்த கோணித்துணிக்கு அடியில் புதிதாகப் போடப்பட்ட வைக்கோல் தாள்கள் உறுத்தின. வழி நெடுக நீலகண்டனைப் பற்றிச் சொல்லிக்கொண்டு வந்தான்.

நீலகண்டனின் அப்பா காலத்தில் இரண்டே தறிகள்தாம் இருந்தனவாம் அவர்களிடம். சுங்கடிச் சேலைகள் போடுவதில் பெரியவர் நிபுணர். தானே தறியில் உட்கார்ந்து நெய்த துணிகளைச் சாயம் தோய்த்து, கித்தான் பையில் வைத்து வீடுவிடாகக் கொண்டு விற்பார்.

> பையன் பட்டணத்துல போய்ப் படிச்சிட்டு வந்து, மதுரையிலே கோர்ட்டுக்குப் போக ஆரம்பிச்சதும் குடும்ப ஸ்திதி கொஞ்சம் கூடிருச்சு... துணிமூட்டையை ஸைக்கிளில் வைச்சு எடுத்துட்டுப் போக ஆரம்பிச்சாரு பெரியவரு...

வண்டியூர்த் தெப்பத்துக் கிட்டே அந்தச் சாமியாரு வந்ததுக்குப் பெறகு ஓஹோன்னு ஆயிட்டாங்க. இப்போ நூறு தறி ஓடுது. இன்னைக்கி மதுரைலே அவங்களை அடிச்சிக்க ஆள் கெடையாது. பெரியவர் காலாட்டிப் பொழைச்சாரு. சின்னவர் வாயாடிப் பொழைக்கிறாரு. ஆனா ஒண்ணு சாமி, சின்னவர் கொஞ்சம் முசுடு... நான் சொன்னேன்னு சொல்லிப்பிடாதீங்க.

வண்டிச்சத்தம் அய்யா குடுத்துட்டாரு.

நீலகண்டனின் வீடு பந்தடி நாலாவது தெருவில் இருந்தது. வீடு என்று சொல்லக் கூடாது. மாளிகை. அவர் வீட்டு மாடியிலிருந்து பார்க்கும்போது நாயக்கர் மஹாலின் குமிழ்க் கூரை தெரிந்தது. வீட்டின் உட்புறத்திலிருந்து ரசம் கொதிக்கும் மணமும், ஊதுபத்தி மணமும் கலவையாய் வந்து ரேழியில் பரவின.

நீலகண்டன் வெற்றுடம்புடன் ஊஞ்சலில் அமர்ந்திருந்தார். மார்பின் குறுக்காக ஓடிய பூணூலில் அழுக்குச் சேர ஆரம்பித்திருந்தது. மனிதர் நல்ல சிவப்பு. சுண்டினால் கன்றிவிடும் போல மிருதுவாகத் தெரிந்த சருமம். சராசரி உயரம். சதைப்பிடிப்பான உடம்பு. கைகால்கள் ஒட்டப்பட்ட உருளைக்கிழங்கு போல இருந்தார். நன்கு கழுவப்பட்ட உருளைக்கிழங்கு....

**...ரா**த்திரி நல்லாத் தூங்கினீங்களா? சத்திரத்திலே கொஞ்சம் கொசுத்தொல்லை இருக்கும். மத்தபடி தங்குறதுக்கு சவுகரியமான இடம். ஸ்நானம் ஆயாச்சா?

யோகீசுவரரைப் பற்றி இன்று பூராச் சொல்லிக்கொண்டே இருக்கலாம். கலியுகத்தில் உண்டான சித்தபுருஷர் அவர். சுவாமிகளின் பூர்வீகம் அம்பாசமுத்திரம் பக்கம் வீரவநல்லூர். தகப்பனாருக்கு நாறும்பூ நாதன் என்று பெயர். தாயார் காந்திமதி அம்மாள். சுவாமிகளுடைய பூர்வாசிரமப் பெயர் பால்வண்ணம். சைவப் பிள்ளைமார் குடும்பம். அவருடைய மூதாதையர்கள் நெல்லையப்பர் கோயிலில் காரியஸ்தர்களாக இருந்திருக்கிறார் கள்.

பன்னிரண்டு வயதாகும்போது சுவாமிக்கு ஒருமுறை காக்காய் வலிப்பு வந்திருக்கிறது. அவருடைய வாழ்வில் அது ஒரு முக்கியமான சம்பவம். அதைப்பற்றி என்னிடம் சொன்னபோது,

> நீலகண்டன், உடல் வெட்டி வெட்டி இழுப்பதும், வலி கூடிக் கொண்டே போவதும், அங்கங்களைக் கட்டுப்படுத்த முடியவில்லை என்பதும், வேதனையிலிருந்து விடுவிக்க யாராவது வர மாட்டார்களா என்ற ஏக்கம் கூடுவதும் தெரிகிறது. ஆனால், எனக்குள்ளே, இதுவெல்லாம் தெரிந்துகொண்டபடி இருந்தவனுக்கு ஒன்றுமே நேரவில்லை. அவன் வேடிக்கை மாத்திரம் பார்த்துக்கொண்டிருக்கிறான். அவன்தான் நானா? இல்லை, வதைபடும் உடம்பா, என்று என்னையே கேட்டுக் கொண்டேன்.

இந்த உடம்பு இல்லாவிட்டால், அவன் இருந்து வேடிக்கை பார்க்க ஸ்தலம் ஏதும் கிடையாது. உடம்பின் அனுபவத்தில் அவனுக்குப் பங்கு இல்லையென்றாலோ, அவன் எனது உடம்பின் பகுதி கிடையாது.

> ஆனால், அவன் என்னோடு பிறந்தவன்தான். என்னுடைய இரட்டையன், சரீரமற்றவன்.

முதல்காரியமாக, அவன் என்று சொல்லக்கூடாது. அது. அந்த இரண்டாவது ஸ்தானத்தின் நேரடி தரிசனத்தை நோக்கித்தான் என் முழு

வாழ்க்கையையும் நகர்த்தி வந்திருக்கிறேன். அதுதான் முதல் ஸ்தானம் என்று ஒரு நம்பிக்கையும் உண்டு.

என்றார்.

சுவாமிகள் பேசும்போது சில சமயம் கண்கள் சொருகிக்கொண்டு விடும். விழிவெண்படலம் மாத்திரம் நன்றாகத் தெரிய, கருவிழி மேல் இமைக்குள் முழுசாகச் சென்றுவிடும். பார்ப்பவர்களுக்கு அச்சம் உண்டாகும். அது ஒரு விதமான சொரூப நிலை. அதிலிருந்து மீண்ட பிறகு சுவாமியின் பேச்சில் அடர்த்தி கூடிவிடும். குரலில் நிதானம் ஜாஸ்தியாகிவிடும்.

இரண்டாவது சம்பவம் சற்று வேறுமாதிரியானது. சுவாமிகளின் தகப்பனார் ஒரு ஜமீன்தாரிடத்தில் ஆஸ்தான வித்வானாக இருந்தார். ஜமீன்தார் தம்முடைய ஆட்சிப்பகுதியை ஜமீன் என்றோ, கொஞ்சம் உசத்தியாக, ஸமஸ்தானம் என்றோ சொல்லமாட்டாராம். நம்முடைய ராஜ்யத்திலே... என்றுதான் ஆரம்பிப்பார். குடிகள் அவரிடம் பேசும்போது ராஜாங்கத்திலே... என்றுதான் சொல்லவேண்டும்.

ஜமீன்தாருக்குக் கலைஞானமோ ஆர்வமோ கிடையாது. சும்மா, அந்தஸ்துக்காக, ஆஸ்தான வித்வான், வித்வாம்ஸினி, நடனமணி, கவிராயர் என்று பதவிகள் உண்டாக்கி வைத்திருந்தார். சுவாமிகளின் தகப்பனார் பாடகர். சக்ரவாகம் மாதிரியான சில குறிப்பிட்ட ராகங்களைத் தந்தையார் பாடும்போது உயிரை உருக்கும் என்பார் சுவாமிகள்.

ஜமீன்தார் எப்போது பாடச் சொல்வார் என்று யூகிக்க முடியாது. சீட்டு விளையாடுவார். நண்பர்களோடு உரக்கச் சல்லாபித்துக் கொண்டே, ‘நாறும்பூ’ என்று அவர் குரல் கொடுத்தவுடன் இவர் சென்று பாட ஆரம்பித்துவிட வேண்டும்.

கூத்தியார் வீட்டுக்குப் போவார். வாசல் திண்ணையில் உட்கார்ந்து உள்ளே கேட்கும்படி உரத்துப் பாடவேண்டும். நாமெல்லாம் இப்போது ரேடியோ கேட்கிறோம் இல்லையா? அதுமாதிரி.

அப்படியான ஒரு சந்தர்ப்பத்தில்தான் சுவாமிகளுக்கு ஒரு விசேஷமான தரிசனம் கிடைத்ததாகச் சொல்வார்.

ஜமீன்தார் சீட்டு விளையாடிக்கொண்டிருக்கிறார். முன்பக்கம் விதவிதமான படங்களும் எண்களும், பின்புறத்தில் ஒரே வடிவமும் அச்சிடப்பட்ட சீட்டுகளை இளம் பால்வண்ணம் வேடிக்கை பார்த்துக்கொண்டிருக்கிறான். வரவிருக்கும் கணத்தின் மர்மம் சீட்டு

விளையாட்டுக்கொப்பானது என்று தோன்றியது என்பார் சுவாமிகள்.

> ஆட்டவிதிகள் அத்தனையும் தெரியும். கைக்கு வரும் சீட்டைக் கவனமாக எப்படிக் கையாள்வது என்பதும் தெரியும். ஆனால், என்ன சீட்டு விழும் என்பதுதான் தெரியாது. சீட்டுகள் அகாலமாய் இருந்து காலத்துக்குள் இறங்கிக்கொண்டேயிருந்தன. அடுத்த கணம் மரணத்தின் கணமா, ஜனனத்தின் கணமா, இரண்டும் ஒன்றில் ஒன்று முயங்கிய கணமா என்பதை யாரறிவார்?
>
> நான் போகவேண்டிய பாதையின் மைல்கற்களில் ஒன்று அப்போது தென்பட்டது.

என்று சொல்வார். இதுபோல ஏகப்பட்ட சம்பவங்கள் உண்டு அவருடைய ஜீவிய சரித்திரத்தில். அதையெல்லாம் என் புஸ்தகத்தில் எழுதியிருக்கிறேன். நீங்கள் படித்திருக்கிறீர்களோ?

இல்லை.

என்று பணிவாகப் பதில் சொன்னார் ஹாலாஸ்யம்.

நான் ஒரு காப்பி தர்றேன். போகும்போது ஞாபகமாக் கேளுங்க.

சுவாமிகள் சித்து ஏதாவது செய்து காமிச்சதுண்டா?

'இருக்கிறதை இல்லாமெச் செய்யறதும், இல்லாததை உருவாக்குறதும் பாமரர்களைச் சந்தோஷப்படுத்துறதுக்கோசரம் செய்யுறது. அதெல்லாம் சிறுபிள்ளை விளையாட்டும்'பாரு. ஆனாலும் ஹரித்துவாரம் போனபோது ஒரு லீலை செஞ்சார்.

சொல்லுங்களேன்.

நம்பவே முடியாதுங்க. அப்பிடி ஒரு லீலை அது.

நீலகண்டன் கண்களை மூடிக்கொண்டார். இமையின் உள்திரையில் ஹரித்துவாரத்தைப் பார்த்துக்கொண்டிருக்கிறார் அவர் என்று தோன்றியது.

நீலகண்டனின் இமைக்குள் இப்போது வாமன ஸ்வாமிகளும் இருக்கிறார். மூடிய இமைகளின் வெளிப்புறம் உள்ள கால - இடமும், உள்புறம் உள்ள கால - இடமும் முழுக்க முழுக்க வேறானவை. நீலகண்டன் தொண்டையைச் செருமிக் கொண்டார்.

**...ப**னித்தரையிலே உக்காந்திருக்கோம். நாங்கள்ளாம் கம்பளி உடுத்தியிருக்கோம். அந்த விஜயத்தில், சுவாமிகள் எங்களை

விளையாட்டாக வெங்காயம்னுதான் கூப்பிடுவார். அத்தனை ஆடைகள் ஒன்று மேல் ஒன்றாக உடுத்தியிருப்போம். உரிக்க உரிக்க உடைகள் வந்துகொண்டேயிருக்கும். அவர் குளிருக்காக விசேஷமாய் எதுவும் தரித்துக்கொள்ள மாட்டார். எப்போதும் வெறும் கௌபீனம் மாத்திரம்தான். கேட்டால், 'தேகத்தை ஸ்புடம் போடணும்' என்பார்.

அபூர்வமாய், அன்றைக்கு வெய்யிலடிக்கிறது. முற்பகல் நேரம். சுவாமிகள் பேசிக்கொண்டிருக்கிறார். நாங்கள் முழு கவனத்தோடே கேட்டுக்கொண்டிருக்கிறோம். விஸ்வரூபத் தத்துவம் பற்றிப் பேச்சு. சடாரென்று பேச்சை நிறுத்தினார் சுவாமி.

'நீலகண்டம்...' என்று கூப்பிட்டார்.

அப்போதுதான் கவனித்தேன். அவருடைய நிழல் மாத்திரம் அசைந்து கொண்டிருந்தது. சுவாமிகள் கண்ணை மூடி நிஷ்டையில் ஆழ்ந்தவர் போல, ஸ்தம்பிதமாய் உட்கார்ந்திருக்கிறார். காற்றில் மரம் அசைவது மாதிரி அசைகிறது நிழல். எனக்கு முதலில் பயம் உண்டாகியது.

மறுகணமே, சுவாமிகள் மகாபெரிய ஸித்தபுருஷர். தம்முடைய ஸித்திகளில் ஒன்றை நிகழ்த்திக் காட்டுகிறார் நமக்காக என்று சமாதானம் உண்டாயிற்று. அவர் இருக்கிறார் நம்மைக் காக்க. அஞ்ச வேண்டியதில்லை.

நிழல் அசைகிறதா. நாங்கள் பார்த்துக்கொண்டேயிருக்கிறோம். நிழல் ரூபம் மாறுகிறது. மனித வடிவு போய், நந்தி வடிவமாகிறது. பிறகு மயில், யானை, ஒட்டகம், கருடன், மீன். மீண்டும் மனித ரூபம்.

தோல் பாவைக் கூத்து பார்த்திருக்கிறீர்களா? தரை அந்த மாதிரித் திரையாகிவிட்டது. எதிரே உட்கார்ந்திருக்கும் ஒரே சரீரம் விதவிதமான நிழல்களைப் படிய வைத்துக்கொண்டிருக்கிறது. கிட்டத்தட்ட இரண்டு நாழிகை இந்த விளையாட்டுத் தொடர்ந்தது.

சுவாமி கண்களைத் திறந்தார். எங்கள் அனைவருக்கும் ரோமாஞ்சனம் ஆகிவிட்டது. நெடுஞ்சாண்கிடையாக அவர் காலில் விழுந்து நமஸ்கரித்தோம். ஒவ்வொருவர் ஒவ்வொரு விதமாக அரற்றிக்கொண்டிருந்தோம். சுவாமி எழுந்தார்.

அசடுகளா.

என்று சொல்லிக்கொண்டே கூடாரத்துக்குள் போய்விட்டார்...

அப்போது உங்கள் நிழல்கள் எப்படியிருந்தது, சொல்ல முடியுமா?

நீலகண்டனின் முகச் சிவப்பு சடாரென்று கூடியது. குறிப்பாக மூக்கு நுனி. கோவைப்பழம் போலக் கனிந்தது.

அடடா, நாங்கள் யாருமே அதைக் கவனிக்கவில்லையே.

சுவாமிகள் சொன்னது சரிதான். அசடுகள்.

வஸ்துவை அசைக்காமல் நிழலை அசைக்கவேண்டுமென்றால், வெளிச்சத்தையே அசைத்தாக வேண்டும். வெளிச்சத்தை அசைப்பதென்றால், கால உணர்வையே அசைத்துவிடுவது போலத்தான். அதாவது, முழுப் பிரபஞ்சத்தையும் அசைத்துவிட்ட மாதிரி. இவர்கள் வெறுமனே வேடிக்கை பார்த்துக் கொண்டிருந்திருக்கிறார்கள்.

சரிதான், அவர் சுட்டிக்காட்டியது இதுதானோ, அல்லது வேறு ஏதாவதொன்றோ. நானுமேகூட அசடாக இருக்கலாம் என்று எண்ணிக்கொண்டார் ஹாலாஸ்யம். தவிர, இவர்களை அசடு என்று முடிவு கட்ட எனக்கு என்ன அதிகாரம் இருக்கிறது?

# அத்தியாயம். 24

**ஊ**ர்: ஏனாதி செங்கோட்டை. மானாமதுரையிலிருந்து பத்து மைல் தொலைவில், வைகையாற்றின் கரையில் உள்ளது.

நாள்: மாசி மாதம் 28ஆம் தேதி, வருஷம் 1955

பேட்டி: பெருமாள்

வயது: நாற்பத்தெட்டு

தொழில்: கோயில் பூசாரி

**ஊ**ருக்குள் நுழைந்தபோது உச்சிப்பொழுது. மானாமதுரை வரை ஸதர்ன் ரோட்வேஸ் பஸ்ஸில் வந்து இறங்கி அங்கிருந்து மாட்டு வண்டியில் தொற்றிக்கொண்டு பிரயாணம். எந்த ஊருக்குச் சென்றாலும் பகல் பொழுதிலேயே செல்கிறேன். இரவைக் கண்டால் பயம். பகலில் சுவாதீனமாகத் தென்படும் அந்நிய ஊர்கள், இருள் கவியும்போது மர்மம் சூழ்ந்தவையாகி விடுகின்றன. வஸ்துக்கள் தம் உருவ வேற்றுமையைப் பறிகொடுத்து இருள் என்னும் ஒரே நிறத்தைப் பூண்டுகொள்கின்றன. இரவு, வவ்வால்கள் மற்றும் ஆந்தைகளின் பொழுது. திருடர்கள் மற்றும் வேசையரின் பொழுது. பகலில் பிறந்த குழந்தைகள் கதறிக்கதறி அழும் பொழுது. மற்றும் சித்தர்களின் பொழுது.

ஸ்ரீ முத்துச்சாமி சொல்வார்:

> ஹாலாஸ்யம், இருட்டு இறங்கும்போது, எனக்குள் விடியத் தொடங்கிவிடுகிறது. இருளின் அடர்த்தி கூடும் அதே விகிதத்தில் எனக்குள் வெளிச்சம் அடர்கிறது. தீராத பகல்வெளிச்சத்தில் யாவும் துல்லியமாகத் தெரிந்தவண்ணம் இருக்கின்றன. பகல் பொழுதில் என் கண்களிலிருந்து வெளிச்சம் வஸ்துக்களின் மேல் பாய்வதுபோல, இரவில் என் சிந்தையின் நிரந்தரப் பகல் வெளிச்சம் ஊடுருவிப் பரவுகிறது. நான் தூங்கி எத்தனை வருஷங்கள் ஆகின்றன தெரியுமா. இதைப் புகாராகச் சொல்லவில்லை. இந்தச்

சரீரத்துக்குத் தூக்கம் வேண்டியிருக்க வில்லை என்கிறேன்...

‘சரியாகத் தூங்க முடிகிறதில்லை’ என்று என்னிடம் பிராது கொடுக்க வருபவர்கள்தாம் எத்தனை பேர்? அவர்களுக்கெல்லாம் நான் வழக்கமாகச் சொல்லுவேன். சரீரம் தனக்குத் தேவையான ஓய்வைத் தானே எடுத்துக்கொள்ளும். மூன்றாந்தல் முச்சந்தியிலும், சந்தை வாசலிலும், பஸ் ஸ்டாண்டுக்கு வெளியிலும் பட்டப் பகலில் தட்டுவண்டியில் சுற்றிலும் பெருகும் ஓசையின் மத்தியில் தூங்குகிறவர்களைப் பார்த்ததில்லையா. அவர்கள் சரீரம் அந்த இடத்தில் தூக்கத்தை எடுத்துக்கொள்கிறது. அவ்வளவுதான்.

குடிக்க மோர் தந்தார் பெருமாள். சற்றுத் தகிப்பாறினதும் தான் பூசை செய்யும் கோயிலுக்கு அழைத்துப் போனார். கோயில் வாசலின் அகலமான இரும்புக் கிராதிக் கதவுகள் பூட்டியிருந்தன. தன் இடுப்பில் சொருகியிருந்த சாவிக் கொத்தை எடுத்துப் பூட்டைத் திறந்தபோது, பெருமாள் என்னை எச்சரித்தார்: ‘சந்நிதியை அடையும் வரை கைவீசி நடக்கவேண்டாம்.’ தெருவில் செல்லும்போதும், கோயில் வாசலைத் தாண்டுகையில், கைகள் இரண்டையும் உடம்போடு ஒட்டி வைத்துக்கொள்ளவேண்டுமாம். ‘இந்தக் கோயில் சம்பந்தமாக உள்ள ஐதீகம் இது’ என்றார்.

கோயில் கட்டப்பட்டு முப்பது வருஷங்கள்தாம் ஆகிறது. மிகவும் சக்திவாய்ந்த கடவுள். சுற்றுச் சுவருக்குள் விரிந்திருந்த மைதானத்தின் எல்லாப் புறங்களிலும் புதராக அடர்ந்த செடிகொடிகளிலிருந்து கனத்த மூலிகைமணம் எழுந்து நாசியை நிறைத்தது. சுற்றுச் சுவருக்கு அப்பால் உடனடியாகச் சரியும் கரைக்குக் கட்டுப்பட்டு மெல்ல நகரும் வைகையின் நீர்ப்பரப்பு உச்சிவெய்யிலில் வெள்ளியாய்ப் பளபளத்தது. ஆற்றிலிருந்து மேலேறி வரும் காற்றில் தண்மை கலந்திருந்தது.

மைதானத்தின் நட்ட நடுவில் நின்றிருந்தது ஒரு அரசமரம். அகலவசமாய் அகட்டின கைகள்போல விரிந்த கிளைகள் இரண்டும் யாரோ பிடித்து முறுக்கியவை போலத் திருகி ஓடிய வரிகளுடனிருந்தன. இலைகளின் பச்சைநிறத்தில் ஒரு ஒளிரும் குணம் கூடியிருந்தது. உறுத்துப் பார்த்தால் கண்கள் கூசின. அடிமர வேர் முடிச்சையொட்டிய மண்ணைக் கொண்டுபோய், பிறந்த குழந்தைக்குச் சேனை வைப்பார்கள் என்றும் குழந்தையின் ஆயுள் நீடிக்க அது உதவும் என நம்புகிறார்கள் என்றும் தெரிவித்தார் பெருமாள்.

மரத்துக்குத்தான் பூஜை, கிடா வெட்டு எல்லாம். தை மாதக் கடைசியில்

ஆட்களை விட்டுப் புதர்களை அகற்றுவோம் என்றார். மாசி மகம் மிக விசேஷமான நாள் இந்தக் கோயிலில். கோயில் வளாகத்துக்குள் குண்டூசி குத்த இடமிருக்காது என்று சொன்னார். அந்த ஒரு நாளில் மட்டும் மேல்ஜாதிக்காரர்களும் வழிபட வருவார்களாம்....

அப்போது நான் சின்னப்பையன். கால்கள் இரண்டிலும் முடக்கு வாதம் போல வந்து, நடப்பதே சிரமமாக இருந்தது. காலனி வாசலில், எங்கள் வீட்டுத் திண்ணையில் உட்கார்ந்திருக்கிறேன். நிலாக்காலம். இருட்டுவதற்கு முன்பாகவே முழுநிலா வந்துவிட்டது. என் வயதுப் பையன்களும் சிறுமிகளும் காலனிக்கெதிரே இருந்த பொட்டல் வெளியில் விளையாடிக் கொண்டிருக்கிறார்கள்.

குழந்தைகளின் சப்தமும், வீடு திரும்பும் ஊர்க்காலி மாடுகளின் கழுத்தில் தொங்கும் மணிகளின் சப்தமும், எருமைகளின் கழுத்தில் தொங்கவிட்ட மரக் கட்டைகள் தரையில் உரசிப் போகும் ஓசையும் கேட்டவாறிருந்த சாயங்காலத்தின் ஒரு பகுதி மாதிரி அவன் வந்து சேர்ந்தான்.

இப்போது 'அவன் இவன்' என்று சொல்ல நாக்குக் கூசுகிறது. ஆனால், அவர் வந்து நின்றபோது நான் என்னவிதமாக நினைத்துக்கொண்டேனோ, உண்மையில் என்ன நடந்ததோ அதைத்தான் சொல்லப் போகிறேன்.

அவன் வந்து நின்ற மாத்திரத்தில் குழந்தைகளின் சப்தம் ஒடுங்கியது. ராசய்யாதான் முதலில் குரல் கொடுத்தான்.

டோய், பிள்ளை பிடிக்கிறவன்... டோய்...

குழந்தைகள் கூவென்று கத்திக்கொண்டு ஓடின. யாரோ ஒருவன் ஒரு கல்லை விட்டெறிந்துவிட்டு ஓடினான்.

வந்தவன் சிரித்தான். எதிர்ச்சாரி வீட்டில் நடந்துகொண்டிருந்த கொத்துவேலைக்காக ஆற்றுமணல் அடித்திருந்தார்கள். மணல்குவியலில் அவன் உட்கார்ந்தான். வெகுதூரம் நடந்து களைத்தவன்போலத் தன் கால்களின் குதிரைச்சதையை அழுத்திப் பிடித்துவிட்டுக்கொண்டான். ஆள் நல்ல குள்ளம். கறுப்பு உடம்பு. வஸ்தாது மாதிரிக் கரணை கரணையாய்ச் சதை. புது ஆள்களைப் பார்த்தால் கெண்டைச் சதையைக் கவ்விரும் எங்க கருப்பு. அவனைப் பாத்து வேகவேகமா வாலாட்டுது. கிட்டெப் போயி அவன் காலை மோந்து பாக்குது. அவன் மூஞ்சியை நக்கப் பாக்குது.

குழந்தைகளின் கூச்சல் திரும்பக் கேட்டது. அவர்களில் யாரோ போய்ச்

சொல்லியிருக்க வேண்டும். மாடசாமி சேர்வை முன்னால் வந்தார். பெரியவர்கள் இன்னும் நாலைந்து பேர் வந்தார்கள். இன்னின்னாரென்று எனக்குச் சரியாக ஞாபகமில்லை. மாடசாமி சேர்வை கேட்டார்:

யாரப்பா நீ?

அவன் சிரித்தான். அப்பிடி ஒரு சிரிப்பை நான் பார்த்ததேயில்லைங்க. மனசோட ஆழத்திலேயிருந்து வரும் சிரிப்பு.

சேர்வகாரர் மாற்றி மாற்றிக் கேள்விகள் கேட்டார். எல்லாக் கேள்விக்கும் அவனிடம் ஒரே சிரிப்புத்தான் இருந்தது. சில கேள்விகளுக்குக் குறுஞ் சிரிப்பாய்ச் சிரிப்பான். சிலவற்றுக்கு வெடிச்சிரிப்பு. சேர்வகாரருக்கும் சில இடங்களில் சிரிப்பு வரத்தான் செய்தது. தன் பொறுப்பை நினைவுபடுத்திக்கொண்ட மாதிரி, சிரிப்பை அடக்கிக்கொள்வார்.

எவ்வளவோ நேரம் கேட்டும் அவனிடமிருந்து பதில் ஒன்றும் வாங்க முடியவில்லை. முந்தின மாதம்தான், வயல் வேலைக்குப் போன செல்லியின் குழந்தை காணாமல் போயிருந்தது. மரக்கிளையில் தூளியில் கிடந்த ஒன்றரை வயதுக் குழந்தை. செல்லியின் தலைச்சன் குழந்தை அது.

பெரியவர்கள் நிறையப் பேர் சேர்ந்துவிட்டார்கள். குழந்தைகளை வீடுகளுக்கு விரட்டினார்கள். தாங்கள் ஆரம்பித்துவைத்த சமாசாரம் தங்கள் கையை மீறிப் போய்விட்டதை நினைத்து வருந்துகிற மாதிரி தயங்கித் தயங்கிக் குழந்தைகள் அவரவர் வீடுகளுக்குத் திரும்பினார்கள்.

எப்படி அது ஆரம்பித்தது என்று தெரியவில்லை. எல்லார் கையிலும் ஆயுதங்கள் முளைத்திருந்தன. அரிவாள், திருக்கைவால், உருட்டுக்கட்டை, நாலைந்து பேர் கையில் தீப்பந்தம். அவனைத் துரத்த ஆரம்பித்தார்கள். அவன் ஓடுகிறான். ஒட்டுமொத்த ஊரும் துரத்துகிறது. திண்ணையில் இருந்த நானும் இறங்கி ஓடுகிறேன். கூட்டத்தின் கடைசி ஆளாய் ஓடுகிறேன் என்பதால் யாரும் கவனிக்கவில்லை. ஒரு சிறுவனும் பெரியவர்கள் கூட்டத்தில் கலந்துவிட்டதை.

இந்த இடத்தில் பெருமாளின் முகம் கனிந்துவிட்டது. அவர் கண்களில் நீர் ஊறிப் பளபளப்பு ஏறியது. பேசும்போது உதடுகள் கோணின. மூச்சில் சன்னமான விசிப்பு கூடிவிட்டதும், அதை அடக்கிக்கொள்ள அவர் பிரயத்தனப்படுவதும் தெரிந்தது.

நாங்கள் அமர்ந்திருந்த மரத்தடியிலிருந்து வைகையாற்றின் பரப்புத்

தெரிந்தது. நீர் ஓடுவது போலில்லை. யுக யுகமாகக் கிடைதண்ணீராக இருந்தது போன்ற நிதானம்.

முதன்முதலில் நடக்க ஆரம்பித்தபோதே நான் காலை நொண்டித் தான் நடப்பேனாம். மற்றவர்கள் நடப்பதை, ஓடுவதை, விளையாடுவதைப் பார்க்கும்போது, நான் மட்டும் ரொம்பத் தனியாக உணர்வேன். அன்று ஓடினேன் என்பதை இப்போது நினைத்தாலும் புல்லரிக்கிறது.

அதற்குப் பிறகு ஒரு நாளும் அந்த வலி வந்ததே கிடையாது. சாதாரணமாக எல்லாரையும் போல நடக்கிறேன். சித்தரின் கருணைதான் அது. அத்தனை பேரில் என் மீது மட்டும் இவ்வளவு கருணை காட்டக் காரணம் என்ன என்று யோசித்து யோசித்துப் பார்க்கிறேன். புரியவில்லை.

ஆனால், ஒன்று தோன்றுகிறது. அவர்கள் அவரை விரட்ட ஆரம்பித்தபோது, எனக்குள்ளே ஏதோ உடைந்துவிட்டது மாதிரியிருந்தது. கண்ணிலிருந்து தண்ணீராய்க் கொட்டியது. சிறுவன்தானே. நான் சொன்னால் யார் கேட்பார்கள். மனதுக்குள் மறுகிக்கொண்டேயிருந்தேன்.

> அய்யா, விட்ருங்கய்யா, பாவம்யா. அவன் ஒரு தப்பும் பண்ணலையேய்யா. இம்புட்டுப் பெரிய ஊருலே அந்த ஒரு ஆள் இருக்க இடமில்லாமயாப் போச்சு? அய்யோ பாவம், அவனெக் கொன்னு போட்ராதீங்கய்யா.

கண் இமைக்காத வேகத்தில் அவன் ஓடுகிறான். அத்தனை பேர் துரத்தியும் யாரும் அவனை நெருங்க முடியவில்லை. கூட்டம் எறியும் கற்கள் அப்பப்போ அவன் மேல் தாக்கும். ரத்தக்காயம் உண்டாகும். எதுவும் அவனைப் பாதிக்கவில்லை. ஓட்டத்தின் வேகம் குறையவில்லை.

திடீரென்று அவன் வேகம் அதிகரித்தது. கூட்டத்துக்கும் அவனுக்குமான இடைவெளி கூடியது. அவ்வளவுதான். தப்பித்துவிட்டான் என்றே நம்பினேன். அதோ, வைகை தட்டுப்படுகிறது. ஆற்றில் இறங்கிவிட்டான் என்றால் போதும், இவர்கள் திரும்பிவிடுவார்கள். இந்த ஊர்க்காரர்கள் இரவு நேரத்தில் ஆற்றில் இறங்குவதில்லை. கூட்டத்தின் கூச்சல் அதிகரித்தது.

சடாரென்று அவன் நின்றுவிட்டான்.

கண்ணிமைக்கும் நேரம்தான். அவன் நின்ற இடத்தில் ஒரு அரசமரம்

நின்றிருக்கிறது. துரத்தியவர்களில் சிலர் மயக்கம் போட்டுவிட்டார்கள்.

பெருமாள் கண்களைத் துடைத்துக்கொண்டார்.

இப்பிடித்தாங்க, கடவுள் நம்ம வீட்டைத் தேடி வர்றாரு. நாமளானா, 'போய்யா, நான் பூசை பண்ணிட்டிருக்கேன். கெடுக்காதே'ன்னு விரட்டிவிட்டுர்றோம்.

மூன்று நாள் கழித்துப் பெருமாளின் தகப்பனார் கனவில் சித்தர் வந்தாராம். 'இந்த ஊரின் எல்லைக் காவல் தெய்வமாய் இருப்பேன். ஊருக்கு ஒரு கெடுதியும் வராமல் காப்பேன். நான் விஜயம் செய்த நாளை நீங்கள் விசேஷமாகக் கொண்டாட வேண்டும். ஏழைகளுக்குக் கூழ் ஊற்றவேண்டும். நான் அவதாரமெடுத்த மரத்தைக் கோயிலாய் ஆக்கிப் பூசைகள் நடத்த வேண்டும்' என்று கட்டளைகள் பிறப்பித்தாராம்.

> அன்னையிலேயிருந்து இன்னை வரைக்கும், வைகையிலே வெள்ளம் வரும்போதெல்லாம் சுத்துப்பட்டுக் கிராமங்கள் எல்லாம் முழுகிப் போனாலும், ஏனாதி செங்கோட்டைக்குள்ளே மட்டும் வெள்ளம் கரையேறாதுங்க. சத்தியத்துக்குக் கட்டுப்பட்டதுமாதிரி ஒதுங்கித்தான் போகும்.

எங்கப்பன் இருக்கிறவரைக்கும் அதுதான் பூசாரியாய் இருந்துச்சு. இப்போ நான் இருக்கேன்.

என்று சொல்லி முடித்தார் பெருமாள்.

நான் புறப்படத் தயாரானேன். பெருமாள் தயங்கித் தயங்கி ஒரு விஷயம் சொன்னார்:

> அதுக்கு அப்புறமும் ஒருவாட்டி அவரைப் பார்த்தேங்க. ஆனா, சொன்னாக்க, யார் நம்புவாங்க சொல்லுங்க. என் மனசுக்குள்ளேயே பூட்டி வச்சிருக்கேன்.
>
> எங்கே பார்த்தீங்க!
>
> மதுரையிலே பட்டுநூல்கார ஆசிரமம் ஒண்ணு இருக்குங்க. தெப்பக்குளத்துக்கிட்டெ. அங்க ஒரு சாமியார் வந்திருக்காருன்னு ஒரே பேச்சா இருந்துச்சு. எங்க காலனியிலேருந்து வண்டி கட்டிப் போனாங்க. நானும் போனனா. அங்கே இவுரு கண்ணை மூடி உக்காந்திருக்காரு. மரமானவரு, இங்கே சாமியாரா

உக்காந்திருக்காரேன்னு தெகைச்சுப் போனேன். ஒரு வாரம் கிட்டெ பேச்சு வராமப் போச்சுங்க. அங்க ஒரு வக்கீலய்யாதான் என்னைப் பாத்துக்கிட்டாரு.

அவருதான் இங்கே வர்றதுக்கு யோசனை சொன்னாரு.

அப்படீங்களா!

## அத்தியாயம். 25

**த**ன்னிடம் ரகசியங்கள் எதுவுமில்லை என்று திறந்து கிடக்கும் வெளியைப் பார்க்கும்போது மனம் வெகுவாகக் கனிந்துவிடுகிறது. கட்டாந்தரையில் அங்கங்கே முளைத்திருக்கும் சிறுபுற்கள், மேலே ஒன்றுமில்லாவிட்டாலும் தரை தனக்குள் ஏதேனும் ரகசியங்களைப் புதைத்து வைத்திருக்கிறதா என்று விசாரிக்க வேர்களை அனுப்பியிருப்பதான பாவனையில் இறுமாப்பாக அசைகின்றன.

என்னுடையது புல்மனம் அல்லவே. மனிதமனம் அல்லவா. பரந்த வெளியைப் பார்க்கும்போது நானும் அதே அளவு விஸ்தாரமடைகிறேன். பெண்ணுடல் போல விரிந்து கிடக்கும் வெளியைப் புணர உன்னுகிறது மனம்.

**வை**த்தீஸ்வரன் கோயில் குளத்தின் தண்ணீரில் அழுக்கும் பச்சை நிறமும் படர்ந்திருந்தன. அவசியம் இதில் இறங்கிக் குளிக்க வேண்டுமா என்று யோசித்தார் பழனியப்பன். அவருடைய யோசனையைப் படித்தவள் போல, சிகப்பி விரட்டினாள்.

> ம்... என்ன பாத்துக்கிட்டே நிக்கிறீங்க. வாங்க, உள்ளாற எறங்குங்க. நேரமாகுதில்லையா.

நீரில் இறங்கி மூழ்கியதும் உடல் மட்டுமல்லாமல் உள்ளுக்குள்ளும் எதுவோ நனைந்தது. மூச்சுத் திமிறும்வரை நீருக்குள் கிடந்துவிட்டு, தலையை வெளியே உயர்த்தினார் பழனியப்பன். பார்வைபட்ட இடத்தில் அந்தப் பெண் நின்றிருந்தாள்.

அவளும் அப்போதுதான் நீர்மட்டத்துக்கு வெளியில் உயர்ந்திருக்க வேண்டும். காவி நிற உள்பாவாடையுடன் தொடைகளின் மேல் பகுதிவரை நீருக்குள் இருக்க, அவள் உடலில் அபிஷேகம் செய்யப்பட்டது போல நீர் வழிந்தது. கருப்பட்டி வட்டுக்கள் போல இருந்த முலைகளின் வடிவம், நெஞ்சில் இறுக்கிக் கட்டிய, நனைந்த பாவாடைத் துணிக்கு மேல் துல்லியமாகத் தெரிந்தது. வட்டுக்களின்

கீழ்மையத்தில் தெரிந்த கறுப்புப் புள்ளிகள் கிளர்ச்சியூட்டின. பெரும் பிரயத்தனத்துடன் பார்வையை விலக்கிக்கொண்டார்.

தலை துவட்டும்போது அந்தப் பெண் தட்டுப்படுகிறாளா என்று பார்த்தார். காணவில்லை. ஒரு அவசர தரிசனம் வழங்குவதற்காக வந்து சென்றுவிட்டாள் போல.

சந்நிதியில் நிற்கும்போது மனம் தன்னிச்சையாக அலைந்தது. பூக்கள், எண்ணெய், குங்குமம் இவற்றின் கலவையான நெடியும் புழுக்கமும் நெரிந்த இடத்தில் சுற்றிலும் இருந்த பெண்கள் மேல் பார்வை படிந்து படிந்து விலகியது. சிகப்பி கண்களை மூடிக் கை கூப்பி நின்றிருந்தாள். கன்னங்களில் சன்னமான நீர்க்கோடு இறங்கியிருந்தது.

தன்னுடைய மனம் பிரார்த்தனைகளற்று வெறுமையாக இருப்பதை உணர்ந்தார் பழனியப்பன். சுற்றிலும் மனிதர்கள் மனமும் உடலும் குழைந்து நிற்கிறார்கள். விசேஷ நாட்களில் வெங்கடேஸ்வரய்யரிடம் வேலை செய்பவர்கள் அவரை தரிசிக்க வருவது ஞாபகம் வந்தது. கொடுங்கையில் ஏந்திய துண்டுடன், தலை கவிழ்த்தி நிற்பார்கள். ஐந்தாறடி தொலைவில். என்ன இருந்தாலும் படியளப்பவர் இல்லையா.

சுற்றியுள்ள மனிதர்கள் முகத்தில் தெரியும் உணர்வை பக்தி என்று சொல்லமுடியுமா. வட்டிக் கடைக்கு வந்தவர்கள் போல இருக்கிறார்கள். ஒன்று வட்டி செலுத்த வந்தவர்கள், அல்லது, வட்டிக்குக் கடன் கேட்டு வந்தவர்கள்.

செய்யதுவோடு ஒருமுறை பேசிக்கொண்டிருக்கும்போது பழனியப்பன் சொன்னார்:

> செய்யது, கடவுள்னு ஒருத்தர் இருக்கார்னு ஒத்துக்க முடியலே. குறைந்தபட்சம், இதுவரைக்கும் சொல்லப்பட்ட வடிவங்களிலே இருக்கார்னு நிச்சயமா நான் நம்பலே. ஒரு வேளை இருந்தார்னு வச்சிக்கோ, என்னுடைய பிரெண்டாகத்தான் இருப்பார். நான் ஏதாவது வேணும்னு கேட்டால் உடனே கொடுத்துருவார். ‘இதுவரைக்கும் ஒண்ணுமே கேக்காத ஆள் கேக்கிறானப்பா; கொடுத்தனுப்புவோம்’னு நெனைப்பார்.

செய்யது சிரித்தான்.

இப்போது அந்த நண்பனிடம் கேட்க வேண்டிய நேரம் வந்துவிட்டதோ. தலையை மறுப்பாக ஆட்டிக்கொண்டார். சிகப்பியிடமோ, என்னிடமோ உடற்கூறில் கோளாறு இருக்கிறது. மெட்ராஸ் மாதிரி ஊரில் நல்ல டாக்டரிடம் காண்பித்தால் கண்டுபிடித்துச் சொல்லிவிடுவான். ‘தெய்வ

குற்றம்தான் இது, மருத்துவம் உதவாது' என்று வருஷக் கணக்காகப் பிடிவாதம் பிடிக்கிற பெண்மணியை எப்படிக் கூட்டிக்கொண்டு போவது? தன்னிடம்தான் கோளாறு என்று இங்கிலீஷ் வைத்தியன் கண்டுபிடித்துச் சொல்லிவிட்டால் என்னாவது என்று உள்ளூற பயப்படுகிறாளோ?

> ...ஏங்க, எனக்கோ ஒங்களுக்கோ கொறையிருக்கூன்னு வய்யுங்களேன், அது ஒரு ஊனம்தானேங்க. யாராலேயும் பாக்க முடியாது. ஆனா அம்புட்டுப் பேருக்கும் தெரியுங்குற தினுசு ஊனமில்லையா அது. கடவுள் குடுத்த ஊனத்தை அவருதானேங்க எடுக்கணும். மனுசங்களாலே முடியுமா...

திருக்கருகாவூரில் சந்நிதியின் படிகளை நெய்யால் மெழுகச் சொன்னார்கள் சிகப்பியை. கர்ப்பரட்சாம்பிகையின் அருள் கலந்த நெய்யை உணவில் சேர்த்துக்கொள்ளச் சொல்லி ஒரு சீசாவில் கொடுத்தார்கள். நாற்பத்தெட்டுப் பிரதட்சணங்கள் செய்யச் சொன்னார்கள். சிகப்பி ஆர்வமாகச் சுற்றிவரச் சென்றாள். கோயில் மதிலின் உட்புறம் போட்டிருந்த கீற்றுக் கொட்டகையில் போய் அமர்ந்தார் பழனியப்பன்.

பக்கத்தில் ஒரு சிறு கூட்டம் உட்கார்ந்திருந்தது. நடுநாயகமாக அமர்ந்திருந்தவர் காவி உடுத்தியிருந்தார். ஆலம்பால் சேர்த்துத் திரித்த சடைத் திப்பிகளுடன் செம்பட்டை பூத்திருந்தது தலை. சுற்றிலும் இருந்தவர்கள் வெள்ளை உடை உடுத்தியிருந்தார்கள். அவர் மடைதிறந்த மாதிரிப் பேசுவதைக் கவனித்துக் கொண்டிருந்தார் பழனியப்பன்.

> ...திருமந்திரம் இருக்கே. அது ஒரு பெரிய சொத்து. வருஷத்துக்கொண்ணா மூவாயிரம் பாட்டு எழுதி வச்சிருக்காரு திருமூலர். பொதுவா, பட்டினத்துச் செட்டியார் மாதிரி, அருணகிரிநாதர் மாதிரியானவங்க ஆண்பெண் சேர்க்கையைக் கொஞ்சம் தாழ்வா நெனைக்கிறவங்கதான். சிற்றின்பம்னு சொல்லி விலக்கிடுவாங்க. திருமூலர் அப்படியில்லே. மனுஷ வாழ்க்கையிலே கலவீங்குறது தவிர்க்க முடியாத அவசியம்னு கண்டறிஞ்சவரு. பேரின்ப அனுபவத்தை வார்த்தையாலே எப்படியப்பா சொல்ல முடியும்... தன் புருஷனோட காமசுகம் கண்டதை மகள் கிட்டெ அம்மா எப்படிச் சொல்லுவாங்கிறாரு. இதுமாத்திரமில்லே, உடல் சேர்க்கையாலே கரு உண்டாகிறதைப் பத்தி ரொம்ப ஆராய்ச்சிபூர்வமா சில உண்மைகள் சொல்லியிருக்காரு.

> கலவியிலே ஆணுக்கு இன்பம் அதிகமா இருந்தா ஆம்பளைப் பிள்ளை பிறக்குமாம். பெண்ணுக்கு இன்பம் அதிகமா இருந்தா பொம்பளைப் பிள்ளை. ரெண்டு பேருக்கும் சமமா இன்பம் இருந்ததுன்னு வச்சிக்கோங்க, பிறக்குற கொழந்தை அலியாய் இருக்குமாம். புணரும்போது அபானம் - அதான் காத்து - போச்சுன்னா, ரெட்டைக் கொழந்தெ பிறக்கும்ங்குறாரு திருமூலர்.

சிகப்பி பிரதட்சணங்களை முடித்து வியர்த்து விறுவிறுத்து வந்து சேர்ந்தாள்.

அங்கிருந்து திருவலஞ்சுழி. மூலவரான விநாயகர் விக்ரகம் கடல்நுரையால் செய்யப்பட்டதாம். ஓரடிக்கும் குறைவான உயரம். வெள்ளை நிறம். குழந்தைகள் சொப்புவைத்து விளையாடும் பொம்மை போல இருந்தது. சந்நிதியை விட்டு வெளிப் பிராகாரத்துக்கு வந்ததும், திறந்தவெளி மறுபடி ஆக்கிரமித்தது.

உயரமான சுற்று மதில்களுக்குள் கோயில் வளாகம் ஒரு கிண்ணம் போல இருந்தது. சாந்தமும் அமைதியும் அமானுஷ்யத்தின் கூச்சலும் நிரம்பின கிண்ணம். மனோவலு இல்லாதவர்கள் ஒரு கணம்கூட அமிழ்ந்திருக்க முடியாது. தரிசனம் முடித்தவுடன் ஒரே ஓட்டமாக வெளியில் ஓடிவிட வேண்டியதுதான்.

கோயில் மணியை யாரோ ஒலிக்கிறார்கள். வெண்கலத்தின் ரீங்காரம் நிசப்தத்தின் பரப்பில் மகா வளையங்களைக் கிளர்த்துகிறது. அலைகள் மெல்ல மிதந்து கரையடைந்து காணாமல் போகின்றன. சுற்றிலும் உள்ள காட்சியின், ஓசைகளின், வாசனைகளின் மையக் கேந்திரமாகத் தான் நின்றுகொண்டிருப்பதை உணர்ந்தார் பழனியப்பன்.

இந்த மணியை முதன்முதலில் மாட்டியபோது ஒலித்துப் பார்த்திருப்பார்கள், இல்லையா. அப்போது எழுந்த ரீங்காரம் இந்த வளாகத்துக்குள்ளேயே ரகசிய மடிப்புகளாய்க் கிடக்கிறது. இப்போது யாரோ மணியின் நாவை இழுத்து மோதியதும், ரகசியம் தொலைந்து வெளியே வருகிறது அந்த முதன்முதல் ரீங்காரம். உணரக் கிடைக்கும் எதுவுமே அசல் அல்ல. வெறும் பிரதிகள்தான் என்று நினைத்துக்கொண்டார் பழனியப்பன்.

தஞ்சாவூரில் பஸ்ஸேறியவுடனே தூங்கிவிட்டாள் சிகப்பி. வலது தோளில் தன் தலையைப் பதித்து நிச்சிந்தையாய் உறங்குகிறாள். பஸ்ஸின் அதிர்வுகளுக்கொப்ப முன்னும் பின்னுமாகப் புரள்கிறது தலை. நுனிமுடிச்சிட்ட கூந்தலாய்ப் பிசிறடித்திருந்த தலைமுடியிலிருந்து

சுகந்தமான மணம் எழுகிறது. முகத்தில் தெரியும் வெகுளியும் சாந்தமும் நம்பிக்கையும் அவள்மேல் அபரிமிதமான பரிவைக் கிளர்த்துகின்றன. இது மட்டும் வீடாக இருந்திருந்தால் அவளை முத்தமிட்டிருக்கலாம். தன் வலதுகாதை அவளது உச்சந்தலையில் அழுத்தினார் பழனியப்பன்.

ஏதேதோ குறுக்குச்சந்துகளில் உதறி உதறிப் போய்வந்து, குருவாயூரிலிருந்து சோற்றானிக்கரைக்கு பஸ்ஸில் போன ஞாபகத்தில் வந்து நிலைக்கிறது மனம். குருவாயூரில் பிரஸ்னம் சொன்ன நம்பூதிரி,

> இவ்வளவு தூரம் வந்துவிட்டீர்கள். அப்படியே பகவதியைப் பார்த்துவிட்டுப் போகலாமே. குருதி பூஜை ரொம்ப விசேஷம் அங்கே.

என்றார்.

முன்னிரவில் அந்தப் பூஜை ஆரம்பித்தது. ஓராள் உயரம் வரை இடைவெளியும் ஒழுங்கும் இல்லாமல் ஆழ அடித்து இறக்கப்பட்ட இரும்பு ஆணிகளுடன் நின்றிருந்த மரத்துக்கருகில், சமதளமாய் இருந்த சிமெண்ட் தரையில் கொத்தாக உட்கார்ந்திருந்தவர்களுடன் இவர்களும் சென்று அமர்ந்தார்கள். அந்த மரத்தில் ஆணிகளுடன் அங்கங்கே தென்பட்ட மயிர்க்கற்றைகள் பீதியும் அருவருப்பும் ஊட்டின.

வலதுபுறம் சிகப்பி அமர்ந்திருக்க, இடதுபுறம் ஒரு கேரளப் பெண் வந்து உட்கார்ந்தாள். அவளுடைய வயோதிகப் பெற்றோரும் உடன் வந்திருந்தனர். பழனியப்பனின் தொடையுடன் அழுத்தமாய் நெருங்கி உட்கார்ந்தாள் அந்தப் பெண். அவளுடைய உடலிலிருந்து தேங்காய் எண்ணெய் மணம் எழுந்தது. நெற்றியில் விபூதி போலப் பூசிய சந்தனக் கீற்று. சன்னமான, வெண்ணிற நூல் புடவை. ஒல்லியான உடம்புக்கு எதிர்மறையான அளவில் பெருத்துப் புடைத்திருந்த மார்புகள் அடிக்கடி ஏறித் தாழ்ந்தன.

பஞ்சவாத்தியங்கள் முழங்கத் தொடங்கின. செண்டையில் நிதானமான தாளக்கட்டு பேச ஆரம்பித்தது. யானைக் காது அளவு பெரிதாய் இருந்த ஜால்ரா உடன் தொடர்ந்தது. நம்பூதிரி பூஜையைத் தொடங்கினார். நிம்மதியற்றுக் கூண்டில் நடைபழகும் புலியையொத்த அசைவுகளும், மூச்சிறைக்கும் சப்தம்போலக் கேட்ட மந்திர உச்சாடனமும் கொண்டு பூஜை நகர்ந்தபோது, செண்டையின் தாள நடை வேகமெடுத்தது.

நின்றவாறு தன் தொடைகளின் உட்புறம் கைகளால் அடிக்கடி ஓங்கி அறைந்துகொண்டும், இரண்டு கை விரல்களாலும் தாந்திரீகக் குறிகளை அம்மன் சொரூபத்திற்கு முன்பாக அபிநயித்துக்கொண்டும் பூஜையை

நடத்துகிறார் நம்பூதிரி. மதுரை பீமபுஷ்டி அல்வா வண்டியில் வைத்திருக்கும் ஓவியத்திலிருந்து இறங்கிவந்தவர்போல இருக்கிறார் அவர். நெஞ்சிலும் புஜங்களிலும் கரணை கரணையாய்த் திரண்டிருக்கும் தசைகள். கடுஞ் சிவப்பேறிய கண்கள். மூச்சுவிடும் ஓசை சீறலாய்க் கேட்கிறது. பூஜையை ஆரம்பித்தபோது இருந்த மனிதாம்சம் குறைந்துகொண்டே போகிறது அவரிடம். பிசாசுகளின் சாம்ராஜ்யத்தில் நுழைந்து மல்யுத்தம் நடத்துவது போல இருக்கின்றன அவரது அசைவுகள்.

கூட்டத்தில் அங்கங்கே உறுமல்களும் உரத்த கேவல்களும் எழுகின்றன. சிலர் உட்கார்ந்த நிலையிலேயே சக்கரவட்டமாக உடலைச் சுழற்றி ஆடுகிறார்கள். பெண்கள்தாம் அதிகம். கூந்தலை விரித்து ஆடுகிறார்கள். முன்னும் பின்னுமாகச் சுழல்கிறார்கள். உடல்கள் முறுக்கேறியிருக்கின்றன. அருகில் அமர்ந்திருந்த பெண்ணிடம் ஆடுவதற்கான அறிகுறிகள் தோன்றுகின்றன.

நம்பூதிரியின் முன்னுள்ள பிரம்மாண்டமான வெண்கல உருளியில் குங்குமம் கரைத்து வைக்கப்பட்டிருக்கிறது. இரவின் மூட்டத்தில், அந்த இடத்தின் அசாதாரணக் காற்றில், பஞ்ச வாத்தியத்தின் துரித கதியில், பாத்திரத்தில் உள்ள கரைசல் பச்சை ரத்தத்தின் தோற்றம் கொள்கிறது. சிகப்பி பழனியப்பனின் கையை இறுகப் பிடித்துக்கொள்கிறாள்.

ஆடீருவேனோன்னு பயம்மா இருக்குங்க.

என்கிறாள். தன்னுடைய நெற்றிப் பொட்டுகள் விண்விண்ணென்று தெறிக்கிற மாதிரி உணர்ந்தார் பழனியப்பன். அருகிலுள்ள கேரளப் பெண் தன் வசீகரம் அனைத்தையும் இழந்து அச்சில் சுழல்வதுபோலச் சுற்றுகிறாள்.

உச்சமான ஒரு தருணத்தில், பாத்திரத்திலுள்ள குருதியை வாரி வாரி அம்மன் சொரூபத்தின் மேல் வீசுகிறார் நம்பூதிரி. ரத்த மழையின் சாரல் சுற்றிலும் தெறிக்கிறது.

பஞ்சவாத்திய ஓசை சடாரென்று நின்றுவிட்டது.

கேரளப் பெண் மூர்ச்சையுற்று வீழ்கிறாள். கூட்டத்தில் பலரும் வீழ்ந்து கிடக்கிறார்கள். சிகப்பியைக் கூட்டிக்கொண்டு வெளியே வந்தார். மனிதர்களுக்குள் அடைந்து கிடந்த பிசாசுகள் தறிகெட்டு உலவின. அபூர்வ வெளிக்குள் நுழைந்து மீண்டது போல இருந்தது பழனியப்பனுக்கு. இன்னும் கொஞ்ச நேரம் பூஜை நீடித்திருந்தால், சொல்ல முடியாது, நானும் சிகப்பியும் கூட ஆடியிருக்கலாம். மிதப்பது

போல நடந்துவந்தாள் சிகப்பி.

பஸ் புதுக்கோட்டை பஸ் ஸ்டாண்டுக்குள் நுழைந்தது.

ஆத்தா, செகப்பி... முளிச்சுக்கோ, புதுக்கோட்டை வந்திருச்சி.

## அத்தியாயம். 26

வெயில் காந்துகிறது. மண் பாதையின் சிறுசிறு கற்கள் நெருப்புத் துண்டங்களாய்க் காலில் குத்துகின்றன. அலையாடும் கானலில் தரை மிதக்கிறது.

சண்டாளி... சண்டாளி...

என்று அரற்றுகிறது மனம். ஊருக்குள் நுழையுமிடத்தில் இருக்கும் ஆலமரம் தலையை விரித்து நிற்கிறது. அருந்தவம் போல.

தாயாரம்மாள் புடவைத் தலைப்பை வலது கையில் ஏந்தி நெற்றியையும் இடது முன்னங்கையையும் துடைத்துக்கொண்டாள். நான் எப்படி நுழைவேன் இந்த ஊருக்குள்ளே. கொதிக்கிற உலையையும் மெல்லுகிற ஊர்வாயையும் மூட முடியுமா என்னால்.

ஆனானப்பட்ட ஆண்பிள்ளைகளையே மென்று தின்று ஏப்பம் விடுகிற ஊர்ஜனங்கள். ஒரு பொட்டச்சி, அதிலும் கைம்பெண்டாட்டி என்ன செய்ய முடியும். ஒரு மாசம் மறைக்கலாம். ரெண்டு மாசம் மறைக்கலாம். காலத்துக்கும் மறைக்க முடியுமா. புடைத்த வயிற்றுக்குள் இருக்கும் கதையை மறைக்கத்தான் முடியுமா? ஒரு வாந்தி காட்டிக் கொடுத்துவிட்டதே.

சண்டாளி. இன்னாரென்றும் சொல்ல மாட்டேனென்கிறாள். சுப்பா நாயக்கர் தோட்டத்தில் கிணறு தோண்ட வந்த அந்த ஒட்டனாக இருக்குமோ. இல்லை. கரகாட்டக் கோஷ்டியுடன் வந்த பம்பைத் தலையனோ. அவனும் இல்லை. திருவிழாவுக்குப் பூசாரியாக வந்த மேல்மங்கலப் பார்ப்பானாக இருக்குமோ. யாராய் இருந்தால் என்ன, ஒரு அத்தாட்சி உண்டா. சாட்சி உண்டா. சாட்சி வைத்துக்கொண்டு இந்த வேலையைச் செய்வார்களா யாரும்.

யாராய் இருந்தால் என்ன. வக்கில்லாத கைம்பெண்டாட்டியும், கூறு கெட்ட மகளும் என்ன செய்துவிட முடியும். அருந்தவமும் அதைத்தான் சொல்கிறாள்.

விடும்மா. மோசம் போயிட்டேன். என் கண்ணையும்தானே மறைச்சிருச்சு. தப்பிதம் என் மேலதான். அரளி விதையை அரைச்சுக் குடு. சந்ததியில்லாமப் போயிர்றேன்.

என் கண்ணே, இதுக்கா உன்னை அரும்பாடுபட்டு வளத்தேன். போனாப் போகுது போ. வேற ஊருக்குப் போயிரலாம். இங்கேயே இருந்து குப்பை கொட்டுறதுக்கு நமக்கென்ன ஐவேஜி பாளாப் போகுது.

எங்கெ போனாலும் ஒடம்புல இருக்குற மச்சத்தை அழிக்க முடியுமா அம்மா.

அப்ப ஒங் கையால அரளியை அரை. ரெண்டு பேருமாச் சாவோம்.

எங் கண்ணான ஆத்தா, என்னைப் போயிப் பெத்தெயே.

அடங்கின குரலில் ஒப்பாரி வைத்தார்கள் இருவரும்.

**ஆ**லமரத்தடியில் ஈக் குஞ்சுகூட இல்லை. பூமியில் வேர் விட்டும் அந்தரத்தில் தொங்கியும் மண்டிய விழுதுகளுக்கு மத்தியில் தானும் ஒரு விழுதுபோல் அவன் மட்டும் இருந்தான். வட்ட வடிவத் திண்டாக உயர்ந்த வேரடியில் உட்கார்ந்திருந்தான். மரத்தடியில் வந்து நின்றாள் தாயாரம்மாள்.

வெய்யிலில் நடந்து வந்த கிறக்கமும், ஒரே நாளில் அந்நியமாய் உணர நேர்ந்துவிட்ட ஊரும், மனதில் தோன்றித் தோன்றி மறையும் அருந்தவத்தின் முகமும், தொலைதூர ஊளையாய் சதா காதருகில் கேட்டவாறிருக்கும் அவளது தீனமான அழுகுரலும்... இந்த இடத்தில் இப்படியே உயிர்போய்விட்டால் எத்தனை பெரிய நிம்மதி என்று நினைத்துக்கொண்டாள். மறுகணம் மனம் தன்னைத்தானே சொடுக்கிக்கொண்டது.

எளவு. சாகுறதும் பெறக்குறதும் நம்ம கையிலயா இருக்கு. மலையாளத்துக்காரி எம்புட்டு அளகாச் சொன்னா.

அம்மா, எனக்கு ஒரு எருக்கலங் குச்சி போதும். கலைச்சுருவேன். ஆனா, நீங்க ரொம்பப் பிந்திட்டீங்க. நான் கைய வச்சா, சின்ன உசுரு மட்டுமில்லே. பெரிய உசுரும் நிச்சயம் இல்லே. பாத்துக்குங்க.

அவள் கையைப் பற்றிக்கொண்டு தாயாரம்மா சொன்னாள்.

ஆத்தா, ஆண்டவன் விட்ட வளியாகட்டும். நீ மட்டும் யாரு கிட்டயும் சொல்லிறாதே. ஒனக்குப் புண்ணியமாப் போகும். வெசயம்

கசிஞ்சுருச்சுன்னா நாங்க ஆத்தாளும் மகளும் நாண்டுக்கிறதெத் தவிர வேற வளியில்லே.

அவன் கையில் பீடி புகைந்துகொண்டிருந்தது. தாயாரம்மாள் வந்ததையோ, நீண்ட பெருமூச்சு விட்டதையோ கவனிக்காதவன் போல ஏகாந்தமாய் உட்கார்ந்திருந்தான். இந்த ஊருக்கு வந்த நாள் முதல் யாரிடமும் எந்த ஒரு வார்த்தையும் பேசினதில்லை அவன். முனியப்பன் கோயில் கிணற்றடி மேடையில் உட்கார்ந்திருப்பான், தனக்குள்ளே மூழ்கியவன் மாதிரி.

யாராவது ஏதாவது கொடுத்தால் சாப்பிடுவான். சாப்பிடாமல் இருக்கும் நாள்தான் அதிகம் இருக்கும். சாப்பிடும் வேளையில் வீட்டுவாசலைக் கடந்து போனானென்றால், அவனுக்கு நாலு கவளமாவது கொடுப்பாள் தாயாரம்மாள். வீட்டில் உணவு மீந்துவிடும்போது, அவனைத் தேடிச்சென்று கொடுப்பதும் உண்டு.

...எய்யா சாமீ. வெய்யில் இந்தக் காந்து காந்துதே...

அவன் முகத்தைத் திருப்பி தாயாரம்மாளைப் பார்த்தான். உணர்ச்சியே இல்லாத கண்கள். தன்னைத்தான் பார்க்கிறானா, தன்னுடம்பை ஊடுருவிப் பார்க்கிறானா என்று நிதானிக்க முடியாத தாயாரம்மாள், அனிச்சையாகத் தன் பின்புறம் திரும்பிப் பார்த்தாள். யாருமில்லை. தன்னைத்தான் பார்க்கிறான் என்று தெளிவுபட்டதும், அவன் அமர்ந்திருந்த திண்டை அடுத்திருந்த சமதரையில் கீழே உட்கார்ந்தாள்.

சாமீ. ஓங் கிட்ட ஒண்ணு சொல்லட்டுமா. யார் கிட்டயாச்சும் சொல்லி ஆத்திக்கிறணும் போல இருக்கு. சொல்லாட்டி எம் மண்டை வெடிச்சே போயிரும். ஊருக்குள்ள யாருகிட்டெச் சொல்லுறது? ஊசி எடம் குடுக்காம நூலு எப்படி நொளையும்னு எதிர்க் கேள்வி கேப்பாளுக. நீதான் உபத்திரவமில்லாத ஆளு. ஒங்கிட்டச் சொன்னா ஒரு மனுசங்கிட்டெச் சொன்னோம்னு ஆறுதலாவும் இருக்கும். வெவரமும் வெளியே போகாது. எய்யா, சாமீ, சொல்லுறேங் கேக்குறியா?

எம் மவ அருந்தவம் இருக்காளே. புளு பூச்சிக்குக்கூடத் தீங்கு நெனைக்காத பொண்ணு. அவ வவுத்தில வாங்கீட்டாய்யா. இத நா எங்க போயிச் சொல்லுவேன். தெரிஞ்சு தப்புப் பண்ணுற பொண்ணு இல்ல அவ. எந்தப் பாவிகிட்டயோ ஏமாந்துட்டா. பாவம். இப்ப மெல்லவும் முடியாம முளுங்கவும் முடியாமத் தவிக்கிறா. பாதகத்தி மக ஒண்ணும் விண்டு சொல்ல மாட்டேங்குறா. நாம் பெத்த மகளெ

நான் என்ன செய்வேன் சொல்லு.

எம் மேலயும்தானே தப்பு இருக்கு. வயசுக்கு வந்து பத்து வருசமான கொமரிப் பொண்ணைக் கரையேத்த வக்கில்லாத கம்மனாட்டிதானே நானு. அவ வயசுக்கு நானெல்லாம் மூணு பெத்துப் பறிகுடுத்து, இவளைப் பெத்தெடுத்துட்டேன். சுருக்குப் பையைப் பாத்தா ஒடம்பு தெறக்குது? அதது வேளை வந்தா கண்ணுமண்ணு தெரியாமெப் போகத்தானே செய்யும்?

இப்ப நான் என்ன செய்யுவேன் சாமி. சின்ன உசுரை மட்டும் போக்கிறலாம்னு போனா, மொதலுக்கே மோசம் வந்துரும்ங்குறா மருத்துவச்சி. ஆனா ஒண்ணு ராசா. இன்னும் ஒரு வாரத்துல எனக்கு ஏதாச்சும் ஒண்ணு தெரியணும். இல்லேன்னா, அரளி விதைதான். இல்லாட்டின்னா எலி மருந்துதான்.

அவன் பார்த்துக்கொண்டே இருந்தான். மெல்ல எழுந்தான். தாயாரம்மாளுக்கு நேர் எதிராய் நின்றான். அவளது கண்களின் ஆழத்துக்குள் எதையோ தேடுபவன் போல, அல்லது கண்களின் ஆழத்தில் எதையோ விதைப்பவன் போல, உறுத்துப் பார்த்துக்கொண்டே நின்றான். தாயாரம்மாள் தன் உடலில் மின் அதிர்வு போல ஒன்றை உணர்ந்தாள்.

அவன் கண்கள் பளிங்கு போல ஆகின்றன. அவற்றின் ரகசிய ஒளி அதிகரித்துக்கொண்டே போகிறது. திரிதிரியாய் அலையும் அவன் தலைமுடி காற்றில் விரிந்து வெகுதூரம் நீள்வதுபோலத் தோற்றம் கொள்கிறது.

எப்போதும் உணர்ச்சியற்று இறுகியிருக்கும் அவனது முகத்தசைகள் இளகுவதைக் கண்டாள் தாயாரம்மாள். அவள் பார்க்க முதல்முறையாக அவன் சிரித்தான். தான் ஒரு மனிதப்பிறவி என்பதை நிரூபிப்பவன்போலத் தொடர்ந்து சிரித்தான். ஓசையெழாமல், சுருங்கிய தன் வயிறு அதிர, எலும்புகள் புடைத்த மார்புக் கூடு ஏறித் தாழ, குலுங்கிக் குலுங்கி அவன் சிரிப்பதைப் பார்த்துக் கொண்டிருந்த தாயாரம்மாளை நோய்த் தொற்றுபோலப் பற்றியது அவன் சிரிப்பு.

காரணமேயில்லாமல் தானும் விழுந்து விழுந்து சிரித்தாள் தாயாரம்மாள்.

## அத்தியாயம். 27

ஆலாஸ்யம், நதி மூலம், ரிஷிமூலம் பார்க்கக் கூடாதென்பார்கள். ஆனால், பார்க்காமலிருக்க முடியாது. எல்லாவற்றுக்கும் ஒரு ஆரம்பம் இருந்துதான் ஆகவேண்டும். ஆரம்பம் தெரியா விட்டால் ஆயுளையும் தெரிந்துகொள்ள முடியாது.

நாற்பத்து மூன்றில் ஒருநாள். சோழவந்தானில் வைகையின் மணற்பரப்பில் உட்கார்ந்திருக்கிறேன். கோடைகாலச் சாயங்காலம். ஆகாயத்தில் சிவப்பு நிறத்தின் வெவ்வேறு சாயைகள் நீலத்தோடு கலந்து அபூர்வமான நிறப் பிரளயம் நிகழ்ந்துகொண்டிருக்கிறது.

தனியாக இருப்பது எனக்குப் புதிதல்ல. கூட்டத்தோடு இருக்கும் போதும் தனியாகத்தான் இருந்து வந்திருக்கிறேன். ஆனால், அன்று உணர்ந்த தனிமை, முழுக்க முழுக்கப் புதிதாக இருந்தது. அதற்கு முன்புவரை, என்னைச் சுற்றிலும் எல்லாரும், எல்லாமும் இருக்கும்போது, சூழ்நிலையிலிருந்து விலகி இருப்பேன். அன்று அப்படியில்லை. என்னோடு கூட நான் இல்லாத தனிமை.

முதலில் பீதியூட்டுவதாகத்தான் இருந்தது. நானாக விரும்பி உடுத்திக்கொண்ட தனிமை இல்லை என்பதால், விலக்கிவிடவும் கூடவில்லை. அனுபவத்தில் தொடர்ந்து வேர்பிடிக்கப் பிடிக்க புதுவிதமான லாகிரியாக நரம்புகளில் மிதந்தது என்னுள்.

இது இரண்டாம் முறை. ஏற்கெனவே வீட்டில் இருக்கும்போது இதே விதமான லாகிரி உண்டானது. அப்போது சாயங்காலம் ஐந்தரை மணி இருக்கும்.

இருள் இறங்க ஆரம்பித்தது. தனிமையே இருளின் செய்தி என்று தோன்றியது. தொலைவில் வைகைப் பாலத்தில் ரயில் வண்டி போகிறது. தனித்தனிக் கட்டங்களாக வெளிச்சப்புள்ளிகள் நகர்கின்றன. என்ஜினின் புகைபோக்கியிலிருந்து வெளியேறும் அடர்கறுப்பு ஸ்தம்பத்தில் நெருப்புப் புள்ளிகள் மின்மினிகள் போலத் தோன்றி அழிகின்றன. குழாயின் வாயருகே அடர்த்தியாக இருக்கும் ஸ்தம்பம்,

உயர உயரச் செல்லுகையில், வடிவமிழந்து கலைவதைப் பார்த்துக்கொண்டிருக்கிறேன்.

எனக்குள் ஏதோ ஒன்று கரைந்துகொண்டு போகிறது. வெளிக் கிளம்புமுன் வீட்டில் அனுபவம் கொண்ட லாகிரி, மறுபடியும் எனக்குள் பரவுகிறது. என் முதுகுத் தண்டின் உட்புறம் ஒரு எறும்பு ஊர்வதுபோன்ற குறுகுறுப்பு. கிச்சுக் கிச்சுக் காட்டப்பட்ட குழந்தைக்குப் பொங்குவதுபோலச் சிரிப்புப் பொங்குகிறது.

நெஞ்சு முழுக்க ஆனந்தம் நிறைந்துவிட்டது. எதைப் பார்த்தாலும், சந்தோஷமாக இருக்கிறது. ஆற்றுமணல், பத்துப் பதினைந்து அடி தள்ளி ரகசியம்போல ஓடும் தண்ணீர், வீடு திரும்பக் கிளம்பும் ஜனங்கள், மறுகரையின் தென்னந் தோப்புகள், அவற்றுக்குள் மர்மமாய் நுழையும் இருட்டு, எல்லாமே ஆனந்த மயம்.

ஆலாஸ்யம், ஞாபகத்தில் இரண்டு வகை இருக்கிறது. முதல் வகை ஞாபகத்தில், நான் சோழவந்தானில், வைகைக் கரையில், ஒரு சாயங்காலத்தில் இருக்கிறேன். இது ஒரு புற நிர்ப்பந்தம். மாற்ற முடியாதது. எந்நேரமும் ஏதாவது ஒரு பொழுதில்தான் இருந்தாக வேண்டும். சரீரத்தின், அதை ஆதாரமாகக் கொண்ட பிரக்ஞை நிலையின் அடிப்படை அமைப்பு அப்படி.

இன்னொரு ஞாபகம் இருக்கிறது. அதி சுதந்திரமானது. இருந்த இடத்தில் இருந்தவாறே எங்கும் இருக்கலாம். எப்போதிலும் இருக்கலாம். இங்கே, இப்போது என்ற சிறைக் கம்பிகள் உருகி ஓடிவிட்ட பிறகு மீந்திருக்கும் மைதானம் அது.

ஜோசியக் கிளி மாதிரி, ஞாபக அடுக்குகளை ஒவ்வொன்றாய்க் கலைத்து ஒதுக்கிப் போடுகிறது பிரக்ஞை. ஆகாய மார்க்கமாக நான் விலகி விலகிச் செல்கிறேன். தடைகள் அற்று இருந்ததனால், ஆகாய மார்க்கமென்கிறேன். தரை துளைத்துச் சென்றதாகவும் இருக்கலாம். கால, இட பேதமற்ற பிரயாணத்தில் எங்கும் செல்லாமலே எங்கோ சென்றுகொண்டிருக்கிறேன்.

வைகைப் படுகையில் உறைபனி பரவுகிறது. வெண்மையின் ஓசை ஓங்கி ஒலிக்கும் பனித் தரையில், தாவர வர்க்கமே அற்ற கட்டாந்தரையில் இருப்பதான உணர்வு தொற்றுகிறது. காலடியில் இருப்பது தரையல்ல. நீர். பனிமேடைக்கடியில் இருக்கும் கிடைதண்ணீர். காட்சியின் திரையில் உருவம் கொள்கிறது ஒரு பெங்குயின். அது என்று இப்போது உன்னிடம் சொல்கிறேனே,

நான்தான் அது ஆலாஸ்யம்.

சருமத்தின் தன்மை குளிருக்கு உகந்ததாய் மாறிவிட்டதென, உறைபனியில் சுவாதீனமாக அமர்ந்திருக்கிறேன். இல்லை, நின்றிருக்கிறேன். அதுவும் இல்லை. தேக அமைப்பைப் பொறுத்து, நிலை பற்றி ஏதும் சொல்ல முடியாது. இருக்கிறேன், அவ்வளவுதான்.

நாயொன்று குரைக்கும் சப்தம் கேட்டது. மல்லாந்து படுத்திருந்தவன் எழுந்து உட்கார்ந்தேன். சற்று முன் உணர்ந்த நிலப்பரப்புக்குச் சம்பந்தமேயின்றி வைகையாற்றின் மணற்பரப்பில் இருப்பது தெரிகிறது. பிசுபிசுப்பான திரவமாகப் பார்வையில் தட்டுப்படுகிறது இருள். வெக்கையைச் சருமத்திலும் இருளைப் பார்வையிலும் உணரும் விதமாக அமைந்த சரீரத்தின் தன்மையை எண்ணி வியந்தேன். போதும், சோழவந்தான் போதும். பனிப்பரப்புக்குத் திரும்பவேண்டும் என்று ஆவல் ஊறுகிறது.

காட்சி இடைவெட்டும்போது, நீருக்குள் துழாவிக்கொண்டிருக்கிறேன். சற்றுத் தொலைவில் விளையாடிக்கொண்டிருக்கிறது என் இணை. மெல்ல எனக்குள் அந்த உஷ்ணம் பரவுகிறது. ஒருவிதமான மௌனத் தொடர்பில், அவளுடைய உடலிலும் சிலபல சுனைகள் குமிழ் உடைந்து திறப்பது புலனாகிறது. கரை நோக்கி விரைகிறேன்.

அது ஒருவிதமான அழைப்பு. என்னுள் சதா சுரந்து கொண்டிருக்கும் தாதுக்களை இயல்பாக வெளியேற்றும் வண்ணமும், பூமிப் பரப்பில் பெங்குயின் இனம் பெருகுகிற விதமாகவும், படைப்பின் கணிதத்தில் அந்தந்த ஜீவராசிக்குள்ள விகிதாசாரம் குறையாமல் இருக்கவும் அந்தந்தப் பிறவியின் அந்தரங்கத்திலிருந்து எழும் குரல். வெறும் சரீர வேட்கை அல்ல.

உள்ளெலும்பின் பலத்தில் துடுப்புகளாய் உதவுகிற இறக்கைகளும், சுக்கானெனப் பணிபுரியும் கால்களும் விசையுடன் இயங்கும்போது, தடைகளற்ற காற்றென ஆகிறது உறைபனியின் குளிர் பொதிந்த சமுத்திர நீர். நீந்துதலின் உற்சாகத்தில், நீர்ப்பரப்பின்மேல் அரைவட்டமாக உயர்ந்து பாயும் இணையை உல்லாசமாக ரசித்தவாறு கரை சேர்கிறேன்.

கரையில் சில ஏற்பாடுகள் பாக்கியிருக்கிறது. இணைசேரவும், பெறுபலனான முட்டையை அடைகாக்கவும், கூடமைக்க வேண்டும். கூடமைப்பதற்காகக் கூழாங்கற்களைப் பொறுக்கும் இடைவேளையில் உடலுக்குள் எழுந்த மௌனக்குரல் உயர்ந்துகொண்டே போகிறது.

தேகம் முழுவதும் பரவசமாகப் பொங்கும் மின் துடிப்பைத் தானும் உணர்ந்தது போல, என் இணை அருகில் வந்து தன் அடிவயிற்றால் என் அடிவயிற்றில் உரசுகிறாள். பெங்குயின் தேசத்தில் புதிய பிரஜையின் வரவுக்கு முகமன் கூறுவது மாதிரி, சமுத்திர அலைகளின் துள்ளாட்டம் அதிகரித்துவிட்டது.

ஆலாஸ்யம், அன்று சோழவந்தானின் வைகைப் பரப்பில் விரிந்த காட்சி இதோ, உம்மிடம் விவரிக்கும் இந்தக் கணத்திலும் என் இமையின் உட்புறம் படர்கிறது. ஏதோ ஒரு இடத்தில் சேகரிக்கப்பட்ட காட்சி போலும் அது. வேண்டும்போது சென்று அல்லது வரவழைத்துப் பார்த்துக்கொள்ள முடியும். பெங்குயின் என்ற ஜென்மம் ஒரே காட்சிதான். அதையே தனித் தனித் துண்டுகளாக்கிப் பதிந்திருக்கிறது. வேண்டுமென்கிற துண்டத்தைப் பார்வைகொள்ள முடியும்.

நீங்கள் சொல்வது புரியவில்லையே.

இரும், விளக்கமாகச் சொல்கிறேன். எவ்வளவு சொல்லியும் முழுக் குழப்பமும் தீர்ந்துவிடாது. சொல்லுக்கு அப்பாற்பட்டதைச் சொல்ல முனைந்தால் என்ன ஆகும்? இப்படித்தான், விளங்கியும் விளங்காமலும் கேட்டுக்கொள்ள வேண்டியதுதான்.

முட்டையை இட்டுவிட்டு அவள் கடலுக்குள் சென்றுவிட்டாள். சக ஆண்களோடு தோளுரசி நின்று அடைகாக்கத் தொடங்கினேன். கூட்டிவைத்த மேற்பாதங்களின் மேல் முட்டையை வைத்து அடிவயிற்றின் வெம்மையில் பொதிந்துகொண்டேன்.

சாப்பாடு கிடையாது. தூக்கம் கிடையாது. யாருடனும் தொடர்பும் கிடையாது. இருட்டும் வெளிச்சமும் மாறிமாறி வருவதையும், சந்திரப் பிறைகள் அளவில் தேய்ந்து முழு இருள் படர்ந்து, மீண்டும் பிறை தோன்றி வளர்ந்து முழுமை பெற்று, பூரண வட்டமாய் நிலா தோன்றும் நாளில் கட்டை விரல் என்று எண்ணிக்கொண்டேன். அடுத்த முழு நிலா நாளில் அடுத்த விரல்.

முட்டையின் ஓடு விரிசல் காணுகிறது. கூர்மூக்கை நீட்டிக் காற்றைக் குடிக்கிறது என் குட்டி. கடலுக்குள் சென்ற அதன் தாயார் இன்னும் வரவில்லை. குழந்தைக்குப் பசிக்க ஆரம்பித்துவிடுமே.

என் பதைப்பு இயற்கையின் செவிகளுக்கு எட்டியிருக்க வேண்டும். என் அடிவயிற்றிலுள்ள காம்புகளிலிருந்து பால் போன்ற திரவம் சுரக்கிறது. ஆர்வமாய்க் குடிக்கிறது குட்டி. இரவு வந்து இரவு போய், இரவு வந்து

இரவு போனதும் வந்து சேர்கிறாள் என் இணை.

குழந்தையை அவள் பொறுப்பில் விடுத்து, கடலுக்குள் செல்கிறேன். கடலின் குளுமைதான் என்ன ஆனந்தமாய் இருக்கிறது. உடலும் உள்ளும் நனைய நனைய நீந்தித் திளைக்கிறேன்... இதோ, என்னைப் புரட்டிப்போட வரும் அலையின் மேலேறிச் சரிந்திறங்குகிறேன்.

> ஆலாஸ்யம். அறுபது நாட்கள். அன்ன ஆகாரமில்லாமல் வயிற்றுக்குக் கீழே முட்டையை இடுக்கிக்கொண்டு நின்றதை இப்போது நினைக்கையில் மனம் வெகுவாகக் கனிந்துவிடுகிறது.
>
> புரிகிறது. நானும் அதை உணர்ந்தேன்.
>
> அப்படியா சொல்கிறீர்!
>
> விவரிக்கும்போது பழைய முத்துச்சாமியின் பாவமும் த்வனியும் இருந்தது.
>
> மிகச் சரியாய்ச் சொன்னீர்! அது போகட்டும். நாம் முன்னமே சொன்னோமே நகரத்தார் வீடுகள் போல அறைகள் கொண்ட குகை. அதில் கொஞ்ச தூரம்தான் போயிருக்கிறோம். இன்னும் போகப் போக, வெளிச்சம் படரப் படரத்தான் தெரியும். எவ்வளவு தூரம் மொத்தம் என்றும், அதில், எத்தனை மைல்கற்கள் இருக்கின்றன என்றும்.
>
> அதற்கு முன்னும் பின்னுமாய் இருந்த பிறவிகளில் ஆணாய் இருந்து, கொண்ட அனுபவங்களுக்கும் மேலாண்மைக்கும் பரிகாரம் போல இந்தப் பிறவி அமைந்தது என்றே தோன்றுகிறது.

நனைந்து கிடக்கிறது மழை ஓய்ந்த முற்பகல்பொழுது. கொல்லையில், விடைத்து நிற்கும் வாழைமரத்தின் இலைகளில் பச்சை நிறம் ஒளிர்கிறது. காற்றின் விசைக்குத் தக்கவாறு அசைகின்ற இலைகளில் தேங்கின நீர்ச்சொட்டுக்கள் ஒவ்வொன்றாய் உதிர்கின்றன. உதிர்ந்தது போகவும் ஏகப்பட்ட துளிகள் இன்னும் மீந்திருக்கின்றன வாழையிலைப் பரப்பில்.

பரிசாரகர் வந்து மதிய உணவுக்கு அழைத்தார்.

# அத்தியாயம். 28

சிலந்தியின் அடிவயிற்றிலிருந்து ஒரு பசை சுரக்கிறதாம். அதைக் கொண்டு வலையைப் பின்னுகிறது சிலந்தி. ஒடிக்கப்பட்ட நேர்கோடுகளை வரிசையாக ஒட்டி, பாத்திகளாகப் பிரிக்கப்பட்ட வெளி ஓரம் கொண்ட முழு வட்டத்தைத் தேர்ந்த பொறியாளன் போலக் கட்டுகிறது. வலுத்த ஒரு காற்று அல்லது ஒட்டடைக் குச்சியின் ஒரு தீண்டுதலுக்குத் தாங்காத வலையை எத்தனை அக்கறையாய்க் கட்டுகிறது. சிலந்தியின் மொழியில் வலுத்த காற்றும் ஒட்டடைக் குச்சியும் இருக்காதல்லவா?

ஆனாலும் யோகக்கார ஜீவன். இருந்த இடத்துக்கு வந்து சிக்குகிறது இரை. ஆனால், அதற்குச் சிலந்தி கொடுக்கும் விலைதான் கொஞ்சம் ஜாஸ்தி. தான் கட்டிய வலையில் தானே சிறையிருக்க வேண்டி வருகிறது.

மிகப் பெரிய இடியோசை கேட்டு விழித்துக்கொண்டார். மழை கொட்டத் தொடங்கிவிட்டது. முன்வாசல் தகரச் சார்ப்பில் லயமற்ற ஓசையை எழுப்புகின்றன கொட்டும் தாரைகள். அருகில் படுத்திருந்த சிகப்பியை இழுத்து அணைத்துக் கொண்டார். சிறு சிணுங்கலுடன் அவள் இசைந்து இவர் கைகளுக்குள் ஒடுங்கினாள். மழை கிளர்த்திய குளிருக்கு சதை கொழகொழத்த சிகப்பியின் தேக உஷ்ணம் இதமாக இருந்தது.

கொஞ்ச நேரம்தான். கைகள் மரத்துவிட்டன. இயல்பாகச் சிகப்பியை விடுவித்தார். மறுபுறம் திரும்பிப் படுத்தாள் அவள்.

தூங்கப் போகுமுன் படித்துக்கொண்டிருந்த பத்தியில் குவிந்தது சிந்தனை. ஹாலாஸ்யமய்யர் தன் தகப்பனாரைப் பற்றி எழுதியிருக்கிறார். வில்லி பாரதப்பாடலில் தொடங்கி, சில பக்கங்களுக்கு நீள்கிறது அந்தப் பகுதி. பகுக்கப்படாத ஒரே பத்தியாய் எழுதப்பட்டிருக்கும் அதைப் படிக்கும்போது மூச்சு முட்டுகிறமாதிரி உணர்ந்தது ஞாபகம் வந்தது.

ஒவ்வொருத்தர் வாழ்க்கையிலேயும் தகப்பன் ஒரு மிக முக்கிய மான ஆளுமைதான் போலிருக்கிறது. அம்மாவிடமிருந்து அன்பையும் அப்பாவிடமிருந்து அறிவையும் வாங்கிக் கொள்கிறாய் என்கிற மாதிரி ஒரு சினிமாப் பாட்டில் வரும். அந்தப் பத்தியைப் படித்தபோது, காகித வரிகளுக்கூடே தன் தகப்பனார் ராமநாதன் செட்டியாரின் முகம் தோன்றித் தோன்றி மறைந்தவாறு இருந்தது நினைவில் பட்டது.

அப்பச்சியைப் பற்றியும் இப்படி ஒரு பத்தி எழுத முடியும். அதிர்ந்து பேசாதவர். பொன்னமராவதியில் சேவுகஞ் செட்டியாரின் மாளிகையை - நிஜமாகவே பெரிய மாளிகை அது. பழனியப்பனின் திருமணம் அந்த வீட்டின் நடுமுற்றத்தில்தான் நடந்தது - வெங்கடேஸ்வரய்யர் கிரயத்துக்கு வாங்கியதும், அப்பச்சியைக் கூப்பிட்டுச் சொன்னார்.

> ராமநாதா, வீடு உன் பொறுப்பு. வாசல் தாழ்வாரத்தையும், அதுக்கு ரெண்டு பக்கமும் இருக்கிற அறைகளையும் குடியிருக்க வச்சிக்கோ. சாவிக்கொத்து உன்கிட்டேயே இருக்கட்டும். ரெண்டு அறை போதுமா?

பொன்னமராவதியின் மத்தியில் குடக்கூலி இல்லாமல் வசிக்க வீடு கிடைக்கிறது. தானம் கொடுத்த மாட்டைப் பல்லைப் பிடித்துப் பார்க்கலாமா?

ஆனால், அய்யர் தவறிப் போனதும் சடகோபய்யங்கார் வந்து காலி பண்ணச் சொல்லிவிட்டார். அய்யர் அறக்கட்டளையின் தர்ம காரியங்களுக்குத் தேவைப்படுகிறதாம் வீடு. அதைச் சடகோபய்யங்கார் இப்போது எது எதற்கோ உடயோகப்படுத்து வதாகக் கேள்வி. கட்டளை அய்யருடையது. அறம் அய்யங்காருடையது.

அந்தச் சமயத்தில்தான் பூலாங்குறிச்சியில் வந்து குடியமர்ந்தது. சிகப்பியின் அப்பாவுக்கு இங்கு இருந்த நிலத்தில், பழனியப்பனின் அம்மாவுடைய நகைகளைச் செங்கல்லாகவும் சிமெண்ட்டாகவும் ஆக்கி இந்த வீட்டைக் கட்டினது.

பின்வாசல் கதவைச் சிகப்பி சரியாகப் பூட்டினாளா? படுக்கையை விட்டு எழுந்தார். சரியாகத்தான் பூட்டியிருக்கிறது. மரக்கதவைத் திறந்து முன்வாசலுக்கு வந்து கம்பிக் கதவைப் பிடித்துக்கொண்டு நின்றார். மழையின் உக்கிரம் கூடிவிட்டது.

இந்த நிலத்தைப் பதிவு செய்வதற்குள் பெரும் போராட்டமாகி விட்டது. சிகப்பி புது மனுஷியாகத் தென்பட்ட நாட்கள் அவை. உண்மையில் அவளிடம் பேசுவதற்குக்கூட பயமும் தயக்கமும் பெருகிய நாட்கள்.

எந்நேரமும் சந்நதம் வந்தவள் மாதிரிக் கூச்சலிட்டுக்கொண்டிருந்தாள்.

> எங்க ஆத்தாளோட சக்களத்திக்கி இம்புட்டு உரிமை இருக்கூன்னா, வயிரவஞ் செட்டியாரோட மூத்த மக. எனக்கு உரிமை கிடையாதா? அவதான் பெரிய சீமைச்சமத்தி. மத்தவுஹள்லாம் கூதரைகளாக்கும்? என்னாங்க, இடி விளுந்த மாதிரி இருக்கீஹ. அவுஹ இம்புட்டு அடாவடியா இருக்கவும் வேணாம். நீங்க இப்படி ஏப்பைசாப்பையா இருக்கவும் வேணாம். ஒடனொத்தவன் சொத்து வருதுன்னா என்னா குதி குதிப்பான். நீங்க என்னடான்னா செவனேன்னு அட்டணக்கால் போட்டு உக்காந்திருக்கீஹளே.

கடைசியில் நிலம் வந்து சேர்ந்தது. இப்போது ஒருத்தர் விடாமல் எல்லாரும் சொல்கிறார்கள், சிகப்பியின் சின்னம்மாதான் செய்வினை வைத்துவிட்டாளாம். ஊர் ஊராய், கோயில் கோயிலாய்ப் போய் மன்றாடியும் ஒன்றும் பிரயோசனப்பட வில்லை.

மேல் வீட்டு உண்ணாமலை ஆச்சி பேச்சுவாக்கில் ஒருதடவை சொன்னாள்:

> ஏப்பா, பளனி. இந்த லோல் படுறீகளே ரெண்டு பேரும். மக்க மனுச வீட்டுல எதுனாச்சும் பிள்ளையைப் பாத்து பிள்ளை கூட்டிக்கிறக் கூடாது?

ஆச்சிக்கு அன்று நேரம் சரியில்லை. சிகப்பி பாய்ந்துவிட்டாள் பாய்ந்து.

> ஆச்சி, அவுகவுக வேலையைப் பாத்துக்கிட்டுப் போகலாம். என் வகுயித்திலே பிள்ளை தாங்கி, அஞ்சு மருந்து குடிச்சு நான் பிள்ளை பெறுவேன். காப்புக்கட்டுப் புதுமைக்கி ஊரையே அழைப்பேன். அப்ப வந்து விருந்தாடிப் போங்க. யோசனையொண்ணும் சொல்ல வேணாம்.

ஆச்சி பேச்சை நிறுத்திவிட்டாள். அன்றுமுதல் பேசுவதையே நிறுத்திக்கொண்டுவிட்டாள். இந்தத் தெருவில் பாதி வீடுகளுடன் சிகப்பிக்கு ஆகாது. இதே மாதிரிப் போனால், கிறுக்குப் பிடித்துத்தான் அலையப்போகிறாள்.

பாவம், வெக்கை தாங்காத மனசு. கரட்டுப்பட்டி போய் வந்ததுக்கப்புறம் கொஞ்சம் சாந்தமாகியிருக்கிறாள். பூதம் மறுபடி கிளம்பாமல் இருந்தால் நன்றாயிருக்கும்.

கவனத்தைக் கலைப்பதுபோல ஆகாயத்தைக் குறுக்குவசத்தில் கீறிப் பாய்கிறது மின்னலொன்று. கணநேரத்துக்கு வெளிர் வெண்ணிறம்

பூசிக்கொண்டு மீண்டும் இருள்கிறது தெரு. எங்கே ஆரம்பித்து எங்கே போய்க்கொண்டிருக்கிறது யோசனைத்தொடர். இடைவெளி விட்டுப் பின்தொடரும் இடியில், தொடங்கிய இடம் மீண்டும் நினைவில் வந்துவிட்டது.

ஆ! ஹாலாஸ்யமய்யர் தன் தகப்பனைப் பற்றி எழுதின பத்தி.... அசோசியேடட் மெமரி... என்று முனகிக்கொண்டார். செய்யது இருந்தால் வைவான்.

> ஏற்கனவே தெரிஞ்ச பெயருக்குள்ளே இப்போதைய அனுபவத்தை ஏண்டா முடக்குறே? செருப்புக்காகக் காலை வெட்டிக்கிற மாதிரி? அசோசியேடட் மெமரியை ரொம்பக் கண்டயோ?...

அவன் சொல்வதிலுள்ள நியாயம் புரிகிறது. ஆனால் தெரிந்தவற்றின் பிடியிலிருந்து எப்படி விடுபடுவது என்றுதான் தெரியவில்லை.

செய்யது ஒருத்தன்தான் இன்று சிகப்பியின் நம்பிக்கைக்கு உரியவன். சொல்லி அழுவதற்கு அவன் மட்டும்தான் இருக்கிறான் அவளுக்கு. ஜன்னத்தை 'அண்ணமுண்டி' என்றுதான் கூப்பிடுவாள் சிகப்பி. ஜன்னத்தும் இவளைச் சொந்த நாத்திபோலத்தான் நடத்துகிறாள்.

**...ப**ல வருஷங்களுக்கு முன்னால், செய்யது வந்த சாயங்காலம் ஞாபகம் வருகிறது. தயங்கித் தயங்கிச் சொன்னான் அவன்:

> பளனி, ஒங்கிட்டெ ஒரு சமாசாரம் சொல்லணும்டா. கொஞ்சம் வெளியெ வர்றியா.

சிகப்பி கூவினாள்:

> அண்ணே. என்னாண்ணே. வந்தவொடனே போறீஹ.
>
> இந்தா வந்துர்றோம் தங்கச்சி.

ஒரு பாறையின் மேல் உட்கார்ந்துகொண்டான் செய்யது.

> பளனி, பதட்டப்படாமெக் கேட்டுக்கோ. வாப்பா ஆஜ்மீர் தர்ஹாவுக்குப் போயிட்டு வந்தாஹல்லெ...

அவன் சொன்னதாலேயே படபடப்பு உண்டானது.

> சொல்லு.
>
> மெற்றாஸிலே ஏதோ ஒரு ரயில்வே ஸ்டேஷன்லே உங்கப்பச்சி யைப் பாத்தாஹளாம்.

டேய். செய்யது. என்ன சொல்றே?

பதட்டப்படாதடா. அரக்கோணத்திலேர்ந்து ஸென்ட்ரல் ஸ்டேஷன் வர்ற வழியிலே ஏதோ ஒரு ஸ்டேஷன்லே வண்டியைக் கொஞ்ச நேரம் போட்டானாம். வண்டி கிளம்புற நேரத்துக்கு ஜன்னல் வழியா அவரைப் பார்த்தேங்கிறாஹ.

எந்த ஸ்டேஷனாம்?

சொல்லத் தெரியலேங்குறாஹ. இவுஹ பாத்ததை உங்க அப்பச்சியும் பாத்துருக்காரு. விருட்டுன்னு ஸ்டேஷனை விட்டு வெளியே நகந்துட்டாராம்.

எந்த ஸ்டேஷன்னு ஞாபகப்படுத்திக்க முடியலையா?

பழைய முத்தலீப்பு வாத்தியாரு இல்லேடா அவரு. ஞாபக மறதி ஜாஸ்தியாயிருச்சு. தொளுகை முடிச்சுக் கொஞ்ச நேரத்திலே, ‘அடடா, டயம் தப்பிருச்சே, தொளுகை பண்ணாமெ விட்டுட்டேனே’ன்னு பொலம்புறாருன்னாப் பாரேன். ஆனா திருநின்றவூருக்கு இந்தப் பக்கம்தான்னு அடிச்சுச் சொல்றாரு. அந்தப் பயலேதான். ராமநாதனேதான். ஓடுற ரயில்லேருந்து இறங்குற வயசான்னு பொலம்பிக்கிட்டேயிருக்காஹ.

அடுத்த வாரமே மெற்றாஸுக்குப் போயாயிற்று. ஒரு ஸ்டேஷனில் இறங்கி விசாரித்து ஏமாந்து, மறுபடி ரயிலேறி அடுத்த ஸ்டேஷன் போய் விசாரித்து… அடுத்த ஸ்டேஷன்… அதற்கடுத்த ஸ்டேஷன்…பைத்தியக்காரன் மாதிரி அலைந்து திரிந்து ஆளை ஒருவழியாய்ப் பிடித்தால், ஊருக்கு வரமாட்டேன் என்றுவிட்டார்.

ஏன் எனக்கு மட்டும் இப்படியெல்லாம் நடக்கிறது? படிப்பு பாதியில் நின்றுபோகிறது. தகப்பன் கைவிட்டுப் போகிறான். சொத்தெழுதி வைக்கிறேன் என்றவன் முந்தின நாள் ராத்திரி செத்துப் போகிறான். அவன் சொத்து அத்தனையும் ஒரு களவாணிப் பயலிடம் சென்று மாட்டுகிறது. அற்புதமான மாமனாருக்கு அடாவடியான இரண்டாம்தாரம் வாய்க்கிறாள். செய்வினை வைக்கிறாள். பெண்டாட்டி பாதிராத்திரியில் படுக்கையில் உட்கார்ந்து மணிக்கணக்காக அழுகிறாள்…

நூலாம்படை மாதிரிச் சுற்றி மூளும் ஞாபகங்களில், சிக்கிக் கொண்டுவிட்டேனே…

மழை கொஞ்சம் வெறித்திருக்கிறது. போகலாம். போய்ப் படுக்கலாம்.

காலையில் எட்டு கிலோ மீட்டர் சைக்கிள் மிதித்து நூலகத்துக்குப் போகவேண்டும். மத்தியானம் பெரியகருப்பன் செட்டியார் கடைக்குப் போகவேண்டும். கரட்டுப்பட்டிக்காரர் சொல்படி போட்டுவிட்ட யந்திரங்கள் தாயத்துக்கள் போக, ஒரு சொர்ண வேல் விடுபட்டுக் கிடக்கிறது. அதை விற்றுக் காசாக்க வேண்டும்.

மறுநாள் செய்யவேண்டிய வேலைகள் ஞாபகம் வந்ததும், இழந்துவிட்ட பலம் திரும்ப உள்ளேறுவதாக உணர்ந்தார் பழனியப்பன். வீட்டுக்குள் திரும்பினார்.

அட! மணி நாலாகிவிட்டதா. இனித் தூங்கினால் ரெண்டுங் கெட்டானாகிவிடும். பேசாமல் செய்யதுக்கு ஒரு கடுதாசி எழுதலாம்...

## அத்தியாயம். 29

இந்த தேசத்தில், மிருகங்களை வணங்குகிறார்கள். நெருப்பை வணங்குகிறார்கள். நதியை வணங்குகிறார்கள். சூரியனை, சந்திரனை, பிற கோள்களை வணங்குகிறார்கள். பிறந்த நேரத்தில் நிலவும் கோள்களின் வரைவியல் அமைப்பு, வாழ்வின் கதியைத் தீர்மானிப்பதாய் எண்ணுகிறார்கள். அகண்டாகாரமான வான்வெளி பற்றிய சாஸ்திர அறிவு, தனிமனித வாழ்க்கை என்ற குறுகிய பரப்பின் போக்கை விவரிக்கவும், அனுமானிக்கவும் உதவுகிறது இவர்களுக்கு. தொலைநோக்கிகளோ, வேறு உபகரணங்களோ இன்றி, ஒரு வருஷத்தில் நிகழவிருக்கும் யாவற்றையும், கிரகணங்கள் உட்பட, கணிக்க முடிகிறது இவர்களால்.

புராதனமான இந்நகரின் பிரதான ரத்தக்குழாய் போல ஓடுகிறது நதி. இரையெடுத்த மலைப்பாம்பு போலக் களைத்து நகரும் நதியில் பூக்களைச் சொரிந்து வழிபடுகிறார்கள். அசுத்தமான நதி. இந்த நகரிலுள்ள மனிதர்களின் சகல தேவைகளுக்குமான ஒரே நீர்மூலம். பாதி எரிந்த பிணங்களும், கிரியைகள் நிகழ்த்தப்பட்ட முழுப் பிரேதங்களும் அவ்வப்போது மிதந்து போகும் நதியிலிருந்து அன்றாட உணவுத் தேவைகளுக்கான நீரை மொண்டு செல்கிறார்கள் பெண்கள்.

மறுகரை சேர்வதற்குப் படகு தேவைப்படுமளவு அகலம் கொண்ட இந்நதி, இந்து மதத்தினுடைய முழுமுதற் கடவுளின் உச்சந்தலையிலிருந்து இறங்கி வருகிறதாக ஒரு ஐதீகம் இருக்கிறது. பெண்ணாக உருவகிக்கிறார்கள் இந்நதியை. ‘தாயே’ என்று அழைக்கிறார்கள். மூதாதையருக்கான நீர்ச்சடங்குகள் இடையறாது நடந்துகொண்டிருக்கின்றன நதியின் கரையில்.

சரித்திரத்தின் அழுக்குப் படிந்த நகரம். நதி ஓடும் நகரில், பிறந்ததிலிருந்தே ஒருமுறைகூடக் குளிக்காதவர்கள் போலத் திரியும் ஜனங்கள். எண்ணெய் வழியும், சந்தோஷமற்ற முகங்கள். அரச கிரீடம் போலப் பல சுற்றுகளாலான முண்டாசு கட்டிய ஆண்கள், மூக்கிலும் காது மடல்களிலும் துளைகளிட்டு வெள்ளி ஆபரணங்கள் பூண்ட,

முக்காடிட்டுத் தலையை முகத்தின் பாதியை மறைத்த பெண்கள். நெரிசலான தெருக்களில் மாடுகளும் மனிதர்களும் ஒருவரையொருவர் உரசிக்கொண்டு நடக்கிறார்கள். பெரும்பாலும், கொம்புகளற்ற மோழை மாடுகள்.

ஊரின் அகவாழ்க்கையை நிர்ணயிக்கும் புரோகிதர்களுக்குப் பண்டாக்கள் என்று பெயர். பண்டாக்களும், நெசவாளர்களும், மண்டையோட்டைக் கையிலேந்தித் திரியும் யாசகர்களும் பல மொழிகள் பேசுபவர்களாக இருக்கிறார்கள். பட்டு நெசவுக்குப் பெயர் போன ஊர் இது. சித்திர விற்பன்னர்களாய் இருக்கும் நெசவாளர்களில் சிலரைச் சந்தித்தேன். இந்திய மொழிகள் பலவற்றையும் சரளமாகப் பேசும் இவர்கள் யாவருமே, ஆங்கிலத்தில் சுமாரான தேர்ச்சியுடையவர்களாய் இருக்கிறார்கள்.

பொதுவாக இந்த தேசத்தின் நிலப்பகுதியில், எந்த இடத்திலும் நிலவும் மர்மம் இந்த நகரத்தில் மிகவும் அடர்த்தியாக இருக்கிறது. இந்த ஊரின் சிறப்புக்கள் என்பதாக ஒரு பட்டியலை ஒப்பித்தான் ஒரு கிழப் பண்டா.

> இந்த ஊரில் காகம் கரையாது. கழுகு பறக்காது. பிரேதம் நாறாது. பூக்கள் மணக்காது. பல்லி சொல்லாது.
>
> பல்லி சொல்வதென்றால் என்ன?
>
> பல்லியின் ஒவ்வொரு சொல்லும் செயலும் ஒரு நிமித்தம்தான். திங்கட்கிழமையில் தென் கிழக்கிலிருந்து அது வாக்குதிர்த்தால் கலகம் வரவிருக்கிறது என்று அர்த்தம். பல்லி உன் தலையில் விழுந்தால் மரணம் சம்பவிக்கப் போகிறது என்று அர்த்தம்...

இவ்வாறான நகரம் இது. நகரம் என்பதைவிட, நம்பிக்கைகளின் தொகுப்பு என்று சொல்லலாம். தேசத்தின் தென்கோடியில் உள்ளவர்களும் வாழ்நாளில் ஒருமுறையாவது இந்த நகரத்திற்கு விஜயம் செய்துவிடுவதைத் தங்கள் ஆயுள் கடமையாகக் கருதுகிறார்கள்.

நதியில் நீராட வாகாகப் படித்துறைகள் அமைந்த இடங்களைக் கட்டங்கள் என்று அழைக்கிறார்கள். குறுக்கும் நெடுக்குமாகப் பல மைல்கள், பல கட்டங்கள் கடந்த பின்னும் ஒரே இடத்தில் இருப்பதுபோல உணர்ந்தேன். ஒருநாள் இருந்ததிலேயே ஒரு நூற்றாண்டு வசித்துவிட்டதான அலுப்பு சேர்ந்துவிட்டது. உடலிலும் மனத்திலும்.

நெரிசலான தெருவொன்றின் மறுமுனையில் வெளியேற இருந்தபோது, சத்திரத் திண்ணையில் அவன் இருந்ததைக் கண்டேன்.

யாத்ரீகர்களுக்கான தங்கும் விடுதி அது. காறை பெயர்ந்த திண்ணையில் வலது காலை மடித்து, இடது காலைத் தொங்கவிட்டு ஆட்டியபடி உட்கார்ந்திருந்தான். உடலில் சாம்பல் நிறமான பொடியைப் பூசியிருந்தான். அல்லது அது சாம்பலாகவே கூட இருக்கலாம். நீண்ட முடியை முண்டாசுபோலச் சுற்றியிருந்தான் தலையில். மஞ்சள் பூத்த பற்களை வெளிக்காட்டி இளித்துக்கொண்டிருந்தான்.

என்னைப் பார்த்துச் சிரித்தான். ஈறுகளை முழுக்க வெளிக்காட்டி, மூக்கை விடைத்துச் சிரித்தபோது அவனுடைய முகம் மனிதக் குரங்கினுடையதைப் போலானது. அருகில் வந்து அமரும்படி சைகை செய்தான்.

அங்ரேஸி!

என்றான்.

இந்த வார்த்தை எனக்கு மிகவும் பரிச்சயமாகிவிட்டது. ஆங்கிலம் என்பதை இந்த தேசத்தில் இப்படித்தான் உச்சரிக்கிறார்கள். ஆனால், இவன் சொன்ன விதத்தில், என்னுடைய பூர்வீகத்தை எனக்கே அறிவிக்கிற தொனி இருந்தது.

ஆம்.

ஒரு ஊரைப் பார்த்ததற்கே இப்படிச் சோர்ந்துவிட்டாயே. இந்த தேசத்தின் ஒவ்வொரு ஊரும் காசிதான். ஒவ்வொரு நதியும் கங்கைதான். ஒவ்வொரு மண் துகளும் புனிதம்தான்.

நான் யூகித்ததை விடவும் சரளமாக ஆங்கிலம் பேசினான். மவுல்வியினதை விடவும் தோரணையான ஆங்கிலம். அவனை வம்பிழுக்கத் தோன்றியது.

எல்லா நாட்டுப் பிரஜைகளும் தங்கள் நாட்டைப்பற்றி இப்படித்தான் சொல்லுவார்கள்.

நீ மிலேச்சன். அப்படித்தான் நினைப்பாய். இது விசேஷ மண். அற்புதங்கள் நிகழ்வதற்கான பதம் கொண்டது. அதற்காகவே சிருஷ்டிக்கப்பட்டது.

நான் சிரித்தேன்.

நீ சிரிக்கவில்லை. உன் தலையெழுத்து சிரிக்கிறது. மனிதர்கள் சிரிக்கும் வரை பிரச்னையில்லை. சூரியச் சந்திரரும் மேருவும் சமுத்திரமும் மரமும் புல்லும் நட்சத்திர மண்டலமும் சிரித்தால் தாங்க

முடியாது உன்னால். விரல் சொடுக்கும் நேரத்தில் உன் இடம் பற்றி, காலம் பற்றி மாபெரும் கிலேசத்துக்கு ஆளாவாய்.

அந்நியனைத் துச்சமாக மதிக்கும் மனோபாவத்தில் இந்தப் பிரதேச ஜனங்களுக்குள்தான் என்ன ஒற்றுமை.

வெற்று மிரட்டல் இது. விஞ்ஞானபூர்வமாகச் சிந்திக்கின்றவன் நான். புலன்களின் தர்க்கத்துக்கு வெளியில் எதுவுமே இல்லை என்று நம்புகிறவன். நீ சொல்கிற கிலேசத்தை என் சருமத்தில், நரம்புகளில், எலும்புகளில் அனுபவம் கொள்ளாதவரை, உன்னுடைய மிரட்டலை வெறும் உளறல் என்றுதான் கொள்வேன்.

'அட, சிறுவனே' என்பதுபோலப் பார்த்தான். சற்று நேரம் கண்ணை மூடிக்கொண்டிருந்தான். பிறகு நிதானமாகக் கேட்டான்.

சரி. அனுபவிக்கவேண்டும் என்று ஆசைப்படுகிறாய். அவ்வளவு தானே. நான் காட்டுகிறேன் உனக்கு. நீ தயாரா?

என்னுள் அந்த சாகச வேட்கை எப்படிக் கிளர்ந்தது என்று தெரியவில்லை. உடனடியாகச் சம்மதித்தேன். தன்னுடைய அழுக்குக் கைப்பையிலிருந்து கோலிக்குண்டு போலிருந்த, பளிங்கு உருண்டை ஒன்றைத் தேடி எடுத்தான். அடர்ந்த ஆலிவ் நிறமாயிருந்தது அது. ஒளி ஊடுருவக்கூடியதாய்த் தென்பட்ட அதற்குப் பிரத்தியேகமாக ஒரு வண்ணம் இருந்தது ஆச்சரியமூட்டியது.

அதை ஏந்திய உள்ளங்கையில் அதீதமான குளிர்ச்சியை உணர்ந்தேன். பனிக்கட்டியை விடவும் குளிர்ந்திருந்தது அது.

வாயில் அதுக்கிக்கொள்.

அருவருப்பாய் இருந்தது. அவனுடைய பை, மற்றும் உடலெங்கும் படிந்திருந்த அழுக்கும் தூசும் ஒவ்வாதவையாக இருந்தன.

யோசிக்காதே. ஜீவாமிர்தம் அது. என்ன, பயந்துவிட்டாயா.

மின்னல் வேகத்தில் வாயில் போட்டுக்கொண்டேன். அவ்வளவுதான். என்னைச் சுற்றியிருந்த உலகம் முன்னூற்றறுபது பாகைகளிலும் சுழன்றது. பௌதிக வெளியின் விளிம்போரத்தை அடைந்து அதல பாதாளத்தில் சரிந்து வீழ ஆரம்பித்தேன்... முடிவற்று வீழ்ந்துகொண்டேயிருக்கிறேன். நீர்த்துளிபோல...

**...**ஓடு பிளந்து, கூட்டுக்குள் இருக்கிறேன் என்பதை அறிந்தபோது முதலில் இருந்த உணர்ச்சி குளிர்தான். மழைக்காலம் அது. என் தாய் தன்

அடிவயிற்றில் பொதிந்துகொண்டாள் என்னையும், என் உடன்பிறந்தவர்களையும். வெளிச்சம் பரவும் சமயத்தில் கூட்டைவிட்டு வெளியேறுவாள். எங்கள் பார்வையிலிருந்து மறைந்துவிடுவாள்.

இருள் இறங்கும்போது அம்மா வருவாள். தன் பருத்த கூர் அலகுகளில் எங்களுக்கு உணவு கொண்டுவருவாள். வாய் நிறைய சாப்பாட்டுடன் வெகுதூரம் பறப்பது கடினம் என்பதால், தான் குறைவாகச் சாப்பிடுவாள் அம்மா.

சிசுக்களான நாங்கள், விரைவில் உடல் தேறவேண்டும் என்பதற்காக மான் கறி, யானை மாமிசம், சிறு சிறு முழுக் கோழிக் குஞ்சுகள், சில சமயம் முட்டைகள் கொண்டு வருவாள். ஒரு முறை மிகுந்த உற்சாகத்துடன் வந்தாள் அம்மா.

> குழந்தைகளே, இன்று அம்மா சிங்கக்கறி கொண்டு வந்திருக்கிறேன், உங்களுக்காக. அந்தக் கிழச் சிங்கத்தைக் கழுதை புலிகள் போட்டுத் தள்ளிவிட்டன. உங்களுக்கு இன்று விருந்துதான் போங்கள். என் வயசுக்கு நானே இதுவரை சிங்கக் கறி ருசித்தது கிடையாது.

அம்மா எங்களுக்குச் சொல்லியிருந்தாள். கூட்டுக்குள் இருக்கும் போது சப்தம் எழுப்பக் கூடாது. கூட்டின் விளிம்பை விட்டு வெளிவரக் கூடாது. நாங்கள் அம்மாவின் சொல்லை மீற மாட்டோம். அப்படியும், என் உடன்பிறந்தான் ஒருவன் சக்திக்கு மீறி எட்டிப் பார்த்தான்.

மரத்தின் வேரடியில் விழுந்து கிடந்த அவனைப் பார்த்துக் கூச்சலிட்டோம் நாங்கள். வேறு என்ன செய்ய முடியும் எங்களால்? எங்கள் அம்மா இருக்கும்போது கூடு இருக்கும் மரத்தின் பக்கமே வராது, அந்தக் காக்கை. இப்போது என் சகோதரனைத் துள்ளத் துடிக்கத் தூக்கிப்போனது.

அம்மா வந்தவுடன் சொல்லி அழுதோம். அம்மா நிதானமாகச் சொன்னாள்.

> நம் இனத்தில் இவ்வாறு நடப்பது சகஜம். மரணத்தைச் சொல்லிப் பிரலாபிக்கக் கூடாது. நாம் மனிதர்களல்ல. அவர்களுக்குப் பொழுது விடிவதே நிகழ்ந்துவிட்ட துக்கங்களை நினைவுபடுத்தத்தான். நாம் வீரர்களின் இனம். மனம் சோர்ந்தால் இறக்கைகளில் வலுவிருக்காது.

இரவில் அம்மா தன் இறக்கைகளால் எங்களை உடலுடன் அணைத்துக்கொள்வாள். வெண்ணிறக் குறுமயிருடன்

வெதுவெதுவென்று இருக்கும் எங்கள் அம்மாவின் அடிவயிறு.

உறக்கத்தின் பரப்பில் முளைக்கும் கனவுகளில் முட்டைக்குள் இருந்த நாட்கள் விரியும். திரவமாய் இருந்து திடப் பொருளாய் நான் மாறி வந்த அனுபவத்தின் மிச்சங்கள் என் உடலில் ஊறும். விழிப்புத் தட்டியவுடன் அம்மா சொன்னதை நினைத்துக் கொள்வேன்.

...நாம் மனிதர்களல்ல.

அன்று உடலில் வேறுவிதமான அனுபவம் ஏற்பட்டது. ஒருவிதமான பரபரப்பு உடலெங்கும் ஏறிவிட்டது. விலாக்களிலும், பாதங்கள், நகங்களிலும், அலகின் வளைவிலும் தினவெடுத்தது. என் சகோதரியும் அவ்விதமே உணர்வதாகச் சொன்னாள். அம்மாவின் அனுமதிக்காகக் காத்திருக்க வேண்டியதில்லை என்று முடிவு செய்து கூட்டைவிட்டு வெளியேறினோம்.

ஆகாயம் திறந்து கிடந்தது. முதலில் சற்றுச் சிரமமாய் இருந்தபோதும், மரங்களின் உச்சந்தலையைப் பார்த்தவாறு, பறக்கும் ஆனந்தத்தில் மூழ்கியபடி, தொடர்ந்து பறந்தேன். கூடு வெறும் பாதுகாப்பு மட்டுமே, அது அல்ல வாழ்க்கை என்று தோன்றியது.

நான் என் அம்மாவின் குழந்தை அல்ல. ஆகாயத்தின் குழந்தை என்றறிந்தேன். தொலைவில், வெகுதொலைவில் ஆகாயம் பூமியை நோக்கிச் சரிகிறது. அந்த முனையைத் தொட்டுத் திரும்பி வரலாம் என்று தொடர்ந்து பறந்தேன்.

அந்தப் புள்ளி விலகி விலகிச் செல்கிறது. தலைவிரித்து அடர்ந்திருந்த ஆலமரத்தில் ஒரு பொந்து இருந்தது. அதில் சென்று தங்கினேன்.

இருள் கவியும்போது அம்மா என்னைத் தேடிக் கவலைப்பட்டிருப்பாளோ என்று தோன்றியது. பிறகு, நாம் மனிதர்கள் இல்லை. அம்மாவும் வீரர் பரம்பரையில் வந்தவள்தான். நானும் சுத்தவீரனாக இருக்கவேண்டும் என்று எண்ணிக்கொண்டேன். இந்த எண்ணத்தைத் தொடர்ந்து என் குடும்பம் பற்றிய ஞாபகம் சருகுகளாய் மாறி உதிர ஆரம்பித்தது. அளவற்ற சுதந்திரத்தின் ஊற்றுக்கண்ணில் நிற்பதாக உணர்ந்தேன்.

சருகுகளாலும், சுள்ளிகளாலும் ஆனது அல்ல என் கூடு. மேகங்களாலும், நட்சத்திரங்களாலும் ஆனது. எல்லாப்புறமும் திறந்திருப்பது. எனக்கான இரையால் நிரம்பியிருக்கிறது பூமி. இரைக்கு மாத்திரம் தரை இறங்கினால் போதும். மற்றபடி, என் கூட்டின் விதானத்தில்

மிதந்துகொண்டிருக்க வேண்டும். குடும்பம் அற்ற தனியன் நான். முழு ஆகாயமும் என்னுடையது. பூமியின் ஜீவராசிகள் அனைத்துமே எனக்கு உணவாகவென்றே சிருஷ்டிக்கப்பட்டவை.

நான் எதுவுமே செய்யவேண்டியதில்லை. ஒரு கழுகாக இருப்பது மட்டுமே போதும். என் உருவத்தைப் பார்த்த மாத்திரத்திலேயே விலகி ஒளியும் சிறுபிராணிகளும் பறவைகளும் என் உடலின் தினவை அதிகப்படுத்தின. முடிவற்ற வேட்டையைத் தொடங்கினேன்.

பசிக்காக வேட்டையாடுவது கையாலாகாத பிராணிகளின் பழக்கம். சாகசத்திற்காக வேட்டையாடினேன். பார்வையில் பட்ட எதுவும் என்னுடைய தாக்குதலுக்குத் தப்பாது. வதைபடும் ஜீவன்களை விடவும் பதுங்கும் ஜீவன்கள் என் வேட்கையைக் கூட்டின.

ஆகாயத்திலிருந்து ஒரு பார்வை. பூமியை நோக்கி ஒரு பாய்ச்சல். பிராணன் நீங்கும் முன் அவஸ்தையின் உச்சத்தில் இரையின் அலறல். அது சிறுகத் தேய்ந்து ஓயும் தருணத்தில் என் உடம்பு முழுவதும் ஓடும் கிளர்ச்சியை ஈடற்றதாக உணர்ந்தேன். அதைவிடவும் அதிகக் கிளர்ச்சி தருவது. ஒரேயடியாய்க் கொன்றுவிடாமல், இரையின் ஒவ்வொரு அங்கமாய்ப் பிய்த்து எறிவது.

பிறருடைய துன்பம்தான் எத்தனை ஆனந்தம் தருவதாக இருக்கிறது.

தரை வனத்துக்கு மிருகராஜாவாகச் சிங்கம் இருப்பது மாதிரி, ஆகாய வனத்தின் சக்கரவர்த்தியாக மானசீக முடிசூட்டிக்கொண்டேன். என் ராஜாங்கத்தின் பிரஜைகள் சித்ரவதைப்படுவதற்காக மட்டுமே பிறக்கிறார்கள். மற்றும் என் கையால் சாவதற்கு.

சாகும் தறுவாயில் சாபமிட்ட தைரியசாலிகளான தீனர்களும் இருக்கவே செய்தனர்.

என்னிடம் அடிபட்டு வீழ்ந்த ஒரு மணிப்புறா எனக்கொரு சாபம் இட்டது. ‘முன்னறியாத ஒரு தாக்குதலில் நீ இறந்து போவாய். அப்போது உன் மனம் விழித்துக்கொள்ளும். செய்த தவறுகளை நினைத்து மறுகும். ஆனால், பிரயோசனம் ஒன்றும் இருக்காது அதனால். சொட்டுச் சொட்டாக வெளியேறும் குருதியின் ஓடையில் மிதந்து அகன்றுவிடும் உன் உயிர்.’

சாபம் வெகு சீக்கிரத்திலேயே பலித்துவிட்டது.

வேட்டை முடிந்து ஆசுவாசமாக அமர்ந்திருந்தேன், அந்த மரத்தின் கிளையில். அம்மாவும் உடன்பிறந்தவர்களும் வெகுதொலைவில் ஒரு

கனவுப் படலம் போலத் தென்பட்டார்கள். மனதில் விநோதமான அறிதல் ஒன்று புலர்ந்தது. ஆண் பிராணிகளை விடவும் பெண் பிராணிகளைத் துரத்திக் கொல்வதில் தனி உற்சாகம் எனக்கு இருந்ததைக் கண்டுகொண்டேன். நான் கொன்றவற்றில் பெண்களின் எண்ணிக்கைதான் அதிகமாக இருக்கும் என்று பெருமையாக நினைத்துக்கொண்டிருந்த போது, அந்த வலி என் வலது தொடைக்குள் நுழைந்தது.

பெரும் ஓசையைச் செவிகள் நுகரும் முன்பே என் வலது தொடைக்குள் நுழைந்து வெளியேறியிருந்தது ஒரு நெருப்புத் துண்டம். மணிப்புறாவின் நினைவு வந்தது. இதுதான் அந்தத் தருணமோ?

மெல்ல மெல்ல என் வலு வெளியேறுகிறது. அது சிவப்பு நிறமாக இருக்கிறது. மிக வேகமாகப் படிந்த குற்ற உணர்ச்சி சகிக்க முடியாததாக இருந்தது. என் தாயின் நினைவு வந்தது. நான் வீரன். கலங்கக்கூடாது. மரணம் என்றாவது ஒருநாள் வரத்தான் செய்யும். அந்த நாள் இன்றுதான். என் பிறவிக்கு நியாயமானதைத்தான் நான் செய்திருக்கிறேன்.

மங்கும் பார்வைக்கு, மரத்தடியில் நின்றுகொண்டிருந்த மனிதன் புலப்பட்டான். இரண்டு குழாய்களை ஒட்டியது போன்ற நீண்ட சாதனம் ஒன்றைக் கையில் வைத்திருந்தான். அதன் நுனியிலிருந்து வெளியேறிய புகையை வாயால் ஊதிக்கொண்டிருந்தான். என்னுடைய உயிர் செந்நிறம் என்பதுபோல, இந்த சாதனத்தின் உயிர் புகைவடிவமானது போலும் என்பதுதான் எனக்குள் ஓடிய இறுதி எண்ணம்...

பிரக்ஞை மீண்டும் தூண்டுதலுற்றபோது, மங்கல் சிங் ஷெகாவத் என்ற ராஜபுத்திர இளைஞனாக இருந்தேன். என் இடது தொடையில் ஈரம் உலராத காயம் ஒன்று இருந்தது. வண்டு துளைத்த துவாரம் போல இருந்தது. என்னையே உறுத்துப் பார்த்தவண்ணம் உட்கார்ந்திருந்தான் அந்த பைராகி.

ம்.. புறப்படு. போர் தொடங்கிவிட்டது.

என்றான்.

உடற்கவசத்தை, தலைக் கவசத்தை, தோற்காலணிகளை அணிந்துகொண்டு, போர்க்களம் நோக்கி விரைந்தேன்.

அரை நாழிகை நேரத்தில், அந்த வெற்றுவெளியின் தன்மை முழுக்க மாறிவிட்டது. மரணக் கூச்சல்களும் கொலைவெறிப் பாய்ச்சல்களும், மழைச் சாரல்போலத் தெறிக்கும் குருதித் துமிகளும், அவற்றின் பச்சைக்

கவிச்சியும், நிணவாடையும், கிழிந்த சதை ஒட்டியிருக்கக் காலில் இடறும் எலும்புத் துண்டுகளும், சதையும் ரத்தமும் குழைந்த சேறாக மாறிய தரையின் சொதசொதப்பும்...

என் வாள் சுழன்றது. சாதாரண மனிதன் இரண்டு கைகளையும் கூட்டி மட்டுமே தூக்க முடியும் நீண்ட வாள் அது. வலதுகையால் விளையாட்டாய்ச் சக்கராகாரமாகச் சுழற்றி முன்னேறினேன். விரையும் நதிபோல நான் சென்றுகொண்டிருக்க, இருபுறக் கரைகளிலும், காயம்பட்டும், அங்கம் இழந்தும், உயிர் பிரியும் அவசத்திலும் ஓலமிட்டுச் சரிகிறார்கள் எதிரணி வீரர்கள். என் உடம்பிலும் அங்கங்கே காயம் பட்டிருக்கவேண்டும். தீக்காந்தலாய் எரிச்சல் ஊறுகிறது. எனக்கு வாட்பயிற்சி கொடுத்த ஆசான் சொல்லுவார்:

> கொல்லப்படவிருக்கும் மனிதனை, மனிதன் என்று ஒரு க்ஷணம் பார்த்துவிட்டாலும் போதும், பிறகு உன் உயிர் உனதல்ல. மனிதப் பிரக்ஞைக்குள் ரகசியமாய்ப் பொதிந்திருக்கும் கொலை இச்சையின் பாஷை மட்டுமே பேசவேண்டும் போர் முனையில்.

ஆசானின் நினைவு வந்த ஒரு கணத்தில், கவனம் சிதறுகிறது. எதிரில் ஓங்கிய வாளுடன் வரும் வீரன் ஹோவென்று அலறியவாறு பாய்கிறான். என் மைத்துனனின் சாயல் இருக்கிறது அவனுக்கு. வாளேந்திய கையின் உரம் குன்றுகிறது. தொய்யும் கரத்தில் வாழையிலைபோலத் தொங்குகிறது என் உடைவாள்.

அவனுடைய நீண்ட கத்தி என் இடதுதோளில் இறங்கிப் பிளக்கிறது. குருதியின் ஊற்றுப் பீய்ச்சுகிறது. கடைசிக்கணத்தில் பிரமிளாவின், இன்னும் பெயர் சூட்டாத குழந்தையின், முகங்கள் விரைகதியில் என் கண்முன் தோன்றி மறைகின்றன. வேர் பிடுங்கின மரம் போல நான் தரையில் வீழும் சப்தம் போர்க்களத்தின் சந்தடியில் கரைகிறது. புலன்கள் ஒடுங்குகின்றன...

தங்கும் விடுதித் திண்ணையில் கிடந்தேன். புளிப்புச் சுவையுடன் சுரந்த உமிழ்நீர் பரவிய தரையில் என் கன்னம் அழுந்தியிருந்தது. உடலின் எலும்பு இணைப்புகள் ஒவ்வொன்றிலும் வலி நிறைந்திருந்தது. பைராகி காணாமல் போயிருந்தான். அந்தி கவிந்து கொண்டிருந்தது. காசியென்றும் பனாரெஸ் என்றும் அழைக்கப்படுகிற புராதன நகரத்தின் மனிதர்களும் கட்டடங்களும் நிழல்களாய் மாறும் அற்புதம் நிகழ்ந்துகொண்டிருந்தது.

பகுத்தறிவுக்கும் பட்டறிவுக்குமான இடைவெளியில், புழுப்போல

நெளிவதாக உணர்ந்தேன்.

## அத்தியாயம். 30

நான் புறப்படட்டுமா?

அப்படியா. நல்லது. அடிக்கடி வந்து போங்கள்.

என்ற நீலகண்டன், வீட்டின் உட்புறம் நோக்கிக் குரல் கொடுத்தார். அவருடைய மனைவி வெளியில் வந்தாள். அவளிடம் ஸௌராஷ்ட்ர மொழியில் ஏதோ சொன்னார். வல்லினங்கள் நிறைந்த மொழி என்று நினைத்துக்கொண்டார் ஹாலாஸ்யம்.

பப்பாளிப் பழம்போல இருந்தாள் அந்த அம்மாள். ரோஜா நிறமான பெண்மணி. பணச் செழிப்பு அவள் தேகம் முழுவதும் பூரித்திருந்தது. நீலகண்டனைவிட வயதில் மிகவும் இளையவளாகத் தோன்றினாள். யார் கண்டது. இரண்டாம் தாரமாகவும் இருக்கலாம்.

தலையை உதறி, எண்ண ஓட்டத்தைக் கலைத்துக்கொண்டார் ஹாலாஸ்யம்.

அந்த அம்மாள் மறுபடி வந்தபோது, கையில் ஒரு புத்தகம் இருந்தது. அதை நீலகண்டனிடம் கொடுத்தபோது அவள் முகத்தில் தென்பட்டது நிஜமான பவ்யமா, இல்லை அடக்கின கேலியா என்று சொல்ல முடியாதபடி இருந்தது.

நீலகண்டன் புத்தகத்தை ஹாலாஸ்யத்திடம் கொடுத்தார். எண்கணித வாய்ப்பாட்டுப் புத்தகங்கள் பத்துப் பன்னிரண்டை ஒன்றாகத் தைத்த மாதிரி இருந்தது அந்தப் புத்தகம். வாமன ஸ்வாமிகள் என்ற குள்ளச் சித்தன் சரித்திரம்.

படிச்சுப் பாருங்க.

என்று சொல்லியவாறு மேல்சட்டையைப் போட்டுக்கொண்டார் நீலகண்டன்.

போலாமா.

அந்த அம்மாள் அங்கேயே நின்றுகொண்டிருந்தாள். அதைத்த கன்னங்களின் அழுத்தமான பவுடர் பூச்சுக்குப் பின்னால் புதைந்திருந்த கண்கள் கோலிக்குண்டுகள்போலப் பளபளத்தன. கைகூப்பி விடை தந்தாள்.

இவ்வளவு தூரம் வந்திட்டு அம்பாளைப் பார்க்காமல் போகலாமா?

பாத்துரலாமே.

ஏழரை எட்டு மணிக்கு வண்டியேறினால் பதினொரு மணிக்கெல்லாம் ஊர்போய்ச் சேர்ந்துவிடலாம். வத்தலக்குண்டில் வண்டியைக் கொஞ்ச நேரம் போடுவான். ராச் சாப்பாட்டை முடித்துக்கொள்ளலாம்.

தெற்காவணி மூலவீதியில் நடந்துபோனார்கள். கோயில் நகரங்களின் சாயங்காலப் பொழுதுகளுக்கேயுரிய பரபரப்பு தெருவெங்கும் இறைந்திருந்தது. எதிர்வருபவர்களில் அநேகம் பேர் நீலகண்டனுக்கு வணக்கம் தெரிவித்துப் போனார்கள். மந்தஹாஸமான புன்னகையுடன் நீலகண்டன் அவற்றை ஏற்றுக்கொண்டு நடந்தார். நடையில் பெருமிதமும் துள்ளலும் இருந்தது. தெற்குச் சித்திரை வீதியைப் பார்த்துத் திரும்பிய ஹாலாஸ்யத்திடம்,

பிரதட்சணமாப் போயிரலாமே...

என்று சொல்லி, மேலச் சித்திரை வீதியில் நுழைந்தார் நீலகண்டன். இதுவரை வந்த வழியில் இருந்த வியாபாரக் கூச்சல் போல இல்லை இந்தப் பகுதியில். நேர்த்தியாக உடையணிந்த பெண்களும் குழந்தைகளும், புஷ்ப வாசனையும், கோயிலின் உட்பிராகாரத்திலிருந்து வெளியேறி வந்த நாதசுர ஒலியும் என்று இந்தப் பிராந்தியத்தில் உற்சவத் தன்மை பொங்கியது.

கோபுர வாசலில் குட்டியானை ஒன்று நின்றிருந்தது. போவோர் வருவோரைத் தும்பிக்கையால் தொட்டழைத்து யாசகம் கேட்டது. பாகன், நீலகண்டனைப் பார்த்ததும் தலைப்பாகை யாய்க் கட்டியிருந்த துண்டை மடக்கிய கையில் போட்டபடி வணக்கம் சொன்னான்.

மொட்டைக் கோபுர வாசலில் ஒரு கிளப் இருந்தது. உள்ளே சென்று உட்கார்ந்தார்கள்.

வாங்கண்ணா.

என்றபடியே வந்த சர்வரிடம்,

நாராயணா, ரெண்டு காப்பி ஸ்ட்ராங்காக் கொண்டுவா.

என்றார் நீலகண்டன்.

தரிசனம் முடிந்து பொற்றாமரைக் குளப் படியில் வந்து சேர்ந்தார்கள். கோயிலின் பிராகாரத்தில் இருந்த கிளிக்கூண்டின் கம்பிகளைப் பிடித்தபடி நின்ற சிறுவன்,

மீனாட்சியைக் கள்ளன் கொண்டு போயிட்டான்...

என்று கத்தினான். கிளிகள் இடம் மாறி அமர்ந்து கூச்சலிட்டன.

...இந்தக் கிளிகளெல்லாம் அம்பாளோட தோழிகள்ன்னு ஒரு சொல் உண்டு. குழந்தைகளுக்கு விளையாட்டாச்சு. பெரியவங்களுக்கு ஒரு ஐதீகம் ஆச்சு...

பொற்றாமரைக் குளத்தில் ஆட்கள் இறங்கிக் கால்களை நனைத்துக்கொண்டு மேலேறினார்கள். நீரின் மேற்பரப்பில் குதூகலமான சலனம் விளையாடியது. பிரகாரத்தின் கூரைவிளக்குகள் அகல் வரிசை போல நீரில் மிதந்தன. குளத்தின் மையத்துக்கு அருகில் கிடந்தது ராஜகோபுரத்தின் உச்சிவிளக்கு. சடாரென்று சலனங்கள் யாவும் உறைந்துவிட்ட நிசப்தத்தை உணர்ந்தார் ஹாலாஸ்யம். ஒருகணம்தான். பிறகு சுற்றுப்புறத்தின் அலையாட்டங்கள் உயிர் பெற்றுவிட்டன.

நீலகண்டன் தொடர்ந்து பேசிக்கொண்டு போனார்...

...யோகீஸ்வரர் பத்தி ஊருக்குள் தப்பாப் பேசறவங்களும் இருக்கத்தான் செய்றாங்க. பணக்காரங்க சாமி, ஏழைகளைக் கண்டுக்க மாட்டாரு; மேல் சாதிக்காரங்களை, அதிலேயும் குறிப்பா, ஸௌராஷ்ட்ர சாதிக்காரங்களை மாத்திரம்தான் அனுக்கிரகிப்பாருங்கிற மாதிரியெல்லாம் பேசுறாங்க. இதுக்குப் பாதிக் காரணம் நான் கொஞ்சம் வசதியுள்ளவனா இருக்கிறதுதான். சும்மா ராவோட ராவாப் பணக்காரன் ஆனாச் சந்தேகப்படலாம்; குதிரை ரேஸுக்குப் போனானோ, கொள்ளையடிச்சானோ, கள்ள நோட்டு அடிச்சானோன்னு. எங்க அப்பா ராப்பகலா ஒழைச்சாரு. நான் ராப்பகலாப் படிக்கிறேன். வாய்ஜாலமா வாதாடுகிறேன். நாலு பெரிய மனுஷாளோட சகவாசம் வச்சிக்கிறேன். எல்லாத்துக்கும் பின்னாடி ஒழைப்பு இருக்கு. சாமான்ய ஜனங்களுக்குப் புரியுறதில்லே. வாய் புளிச்சதோ மாங்கா புளிச்சதோன்னு பேசிடறாங்க.

வாமன ஸ்வாமிகள் மடம் இருக்கே. இங்கே வெளியூர்லேருந்து வந்து போற ஜனங்கள் விதவிதமானபேர் உண்டு. கும்பகோணத்திலேருந்து

ஒரு அம்மா வருவாங்க. தாயாரம்மான்னு பேரு. வருஷா வருஷம் மாசி மகத்தன்னிக்கி ஒரு பெரிய ரோஜா மாலையோட வந்து தரிசனம் பண்ணிட்டுப் போவாங்க. கோயில் வாசல்லே பூக்கட்டி விக்கிற பண்டார சாதி அந்தம்மா. அதே மாதிரி காஞ்சிபுரம் படப்பைக் கிட்டேயிருந்து சென்ன கேசவ முதலியாருன்னு ஒருத்தர். மாசி மகத்தன்னிக்கு மடத்திலே நடக்கிற அன்னதானச் செலவு அவரு கட்டளைதான்.

இந்தத் தாயாரம்மாவும் முதலியாரும் மொத மொதல்லே மடத்துக்கு வந்ததும் ஒரு மாசிமகத்துக்கு மறுநாள்தான். யோகீஸ்வரர் மடத்துக்கு வந்த சமயத்திலே மதுரை முழுக்கத் திருவிழா மாதிரிக் கூட்டமா இருந்துச்சுன்னு சொன்னேனில்லையா. அப்பொத்தான் அவுங்க இங்கே வந்தாங்க. அந்த அம்மா சுவாமிகளைப் பார்த்ததும் மூர்ச்சை போட்ருச்சு. மடத்துக்குள்ளே கொண்டுபோயி மொகத்திலே தண்ணி தெளிச்சு, நெனைவுக்குக் கொண்டாந்து வாசலுக்குக் கூட்டிட்டு வந்தா, சுவாமிகளைப் பாக்குது, மறுபடியும் மூர்ச்சை.

ஒருநாள் முழுக்கப் பிரமை பிடிச்ச மாதிரி அவர் முகத்தையே பாத்துக்கிட்டு ஒக்காந்திருந்துச்சு. பேயறைஞ்சமாதிரி ஒக்காந்திருக்கே, ஆறுதல் சொல்லலாம்னு கிட்டே போனேன். அது என்ன சொல்லிச்சுங்கறீங்க. மடக் களுதைன்னுச்சு. எனக்குத் தூக்கிவாரிப் போட்டுது. என் முகம் மாறினதைப் பாத்து அந்தம்மா சிரிச்சிருச்சு.

அட, நான் ஒங்களைச் சொல்லலே சாமி, என்னைத்தான் சொல்லிக்கிட்டேன்.

ஒங்களை எதுக்கம்மா வெஞ்சுக்கணும்?

பின்னே என்னங்க, அவன்தான் சித்தனாச்சுங்களே, எங்கவேணா, எப்பிடி வேணா இருக்கத்தானே செய்வான்?

யாரைப் பத்தியம்மா சொல்றீங்க?

அந்தம்மா என் முகத்தையே குறுகுறுன்னு பாக்குது. கொட்டகையோட மறுகோடியிலே நிஷ்டையிலே இருக்கிற யோகீஸ்வரரைப் பாக்குது. பிறகு சொல்லுது.

அய்யா, எங் கையாலே மண்ணள்ளிப் போட்டேங்க. ஊரே போட்டதுங்க.

ஒண்ணுமே புரியலே. சரி, இந்தம்மாவுக்கு சித்தம் பெரண்டுருச்சுன்னு தள்ளிப் போயிட்டேன்.

மொதலியார் கிட்டே கேட்டேன். அவருதான் சொன்னாரு. அந்தம்மா அவருக்கு ஒறவுக்காரங்க கிடையாதாம். பழனியிலே பாத்திருக்காங்க. மதுரைக்கி ரயில்லே அவரோட ஒண்ணா வந்திருக்காங்க. அவ்வளவுதான்.

மொதலியார் ரொம்ப நிதானமான மனுஷன். திருவண்ணாமலையிலே குள்ளச் சித்தர் மடம்னு ஒண்ணு இருக்கு. அந்த விஷயத்தை எனக்குச் சொன்னதே மொதலியார்தான். அவருடைய தாயாதி ஒருத்தரு, பலவேசம்னு பேரு, அங்க காரியஸ்தரா இருக்காரு. நானும் நாலஞ்சு தடவை அந்த மடத்துக்குப் போயிருக்கேன்.

இதிலே மொதலியார் சொன்ன ஒரு விஷயம்தான் ரொம்ப சுவாரசியமானது. மொதலியார்கிட்டே இந்தத் தாயாரம்மா பத்திக் கேக்கப் போனனா, அவரு பதிலுக்கு எங்கிட்டே கேள்வியாக் கேட்டுத் தள்ளீட்டாரு. என்னாங்கன்னா, திருவண்ணாமலை மடம் இருக்கே, அங்கேயிருந்த சித்தரும் நம்ம யோகீஸ்வரரும் அச்சு அசல் ஒரே ஜாடையாம். மொதலியார் கேக்குறாரு. சித்தர் இப்பொத்தான் ஆறு மாசத்துக்கு முன்னாலே சமாதியானாரு. இங்கே எப்பிடி வந்திருக்க முடியும்.

நான் பதில் ஒண்ணும் சொல்லலே. அந்த ஒருவாரமும் மதுரை ஜில்லாவுக்கே பைத்தியம் பிடிச்சிருந்தது. அப்புறம் இவுங்களை மட்டும் சொல்லியென்ன.

ஆனா, மொதலியார் சொன்னாரு. ‘சரி விடுங்க ஸார். நம்மளை மாதிரி சாமான்யர்களுக்கெல்லாம் இந்த சங்கதிகள் புரியாது. எந்தப் புத்திலே எந்தப் பாம்போ.’

இதையெல்லாம் கவனிச்சுக்கிட்டிருக்கோம். மானாமதுரை பக்கத்திலேயிருந்து வந்த ஒரு பையன் சுவாமிகளைப் பார்த்ததும் கிட்டத்தட்ட ஊமையாயிட்டான். பேசவே முடியாது அவனாலே. பேசினா ஒரே வார்த்தைதான் பேசுவான். அவரேதான். ஒருவாரம் போல இங்கேயிருந்தான். அந்த ஒரு வாரத்திலே முன்னூறு தடவைக்குக் குறையாமே இதையே சொல்லியிருப்பான். அப்புறம் உள்ளூர்லே ஒரு சாயபுகிட்டே மந்திரிச்சு கொணப்படுத்தி அனுப்பினோம்.

எதுக்குச் சொல்ல வர்றேன். எந்தவிதமான வசதியுள்ளவங்களுக்கும், எல்லா சாதிக்காரங்களுக்கும் சுவாமிகள் பொதுவானவர். இந்த மானாமதுரைப் பையன் இருக்கானே, அவன் ஏகாலி சாதி.

ஹாலாஸ்யம் கேட்டார்:

அந்த அம்மா சொன்னீங்களே, அவுங்களுக்கு எந்த ஊரு?

கும்பகோணம் பக்கம். ரெட்டைப்புலின்னு ஒரு கிராமம் இருக்கு. அங்கே கோயில் வாசல்லே பூ விக்கிறதாச் சொல்வாங்க.

அந்தப் பையன்?

அவன் ஊரு மானாமதுரைப் பக்கம் ஏனாதி செங்கோட்டை. பெருமாள்னு பேரு. அங்கே ஒரு கோயில் பூசாரியா இருக்கான். ஆமா, நீங்க எவ்வளவு ஆர்வமா எல்லாத்தையும் கேட்டுக்கிறீங்க. எனக்கு ரொம்ப சந்தோஷமா இருக்குங்க. ரொம்பப் பேருக்குக் காதே கிடையாது.

தான் புத்தகம் எழுதவிருக்கும் விஷயத்தை நீலகண்டனிடம் சொல்லவேண்டும் என்று ஹாலாஸ்யத்துக்கு ஏனோ தோன்ற வில்லை. மெல்லச் சிரித்தார். இருவரும் மௌனமாக அமர்ந்திருந் தார்கள். நீலகண்டன் பெருமூச்சு விட்டார். பிறகு சொன்னார்:

லௌகீகமாக எவ்வளவோ வேலைகள் அன்றாடம் இருந்து கொண்டிருக்கு. அதுக்கிடையிலேதான் மடத்தையும் நடத்திக்கிற வேண்டியிருக்கு. வாதியாகவோ பிரதிவாதியாகவோ நம்மள்ட்டே அடைக்கலம் என்று அநேகர் வந்து சேர்கிறார்கள். சட்டத்துக்கு என்ன தெரியும், வெறும் அச்சடிச்ச தாள்தானே அது. நாம்தான் அதுக்கு அர்த்தத்தை ஏத்தணும். வளைக்கவேண்டிய இடத்தில் வளைச்சு, ஒடிக்கவேண்டிய இடத்தில் ஒடிச்சு, மனிதர்களுக்கு வாகாக அதை மாத்தியமைக்கணும். சிலசமயம் நிரபராதி தண்டனை வாங்கிடறான். குற்றவாளி தப்பிச்சிர்றான். அது அவனவன் பிராரப்த கர்மம். மத்தபடி சட்டப்புஸ்தகத்தை ரத்தமும் மாம்சமும் உள்ள ஜீவனாக உருவாக்குகிற பொறுப்பு வக்கீல்கிட்டேதான் இருக்கு.

மதுரைக்கி வந்த ஜட்ஜுகள் எல்லாருக்குமே நம்மிடத்தில் ரொம்பப் பிரியமுண்டு. வெள்ளிக்கிழமை மடத்தில் பூஜைக் கைங்கரியம் ஆன பிற்பாடு, எல்லா ஜட்ஜுகள் வீட்டுக்கும் பிரசாதம் போய்ச் சேர்ந்துரும். இதுக்குன்னே தனியா ஒரு ஆள் போட்டிருக்கு.

ஜட்ஜும் மனுஷர்தானே, பகவத் கிருபை இல்லேன்னா துலாக் கோல் சாய்ஞ்சிடாதா. அதுனாலே வர்ற பழி ஜென்ம ஜென்மத் துக்கும் விடுமா? இதை உணர்ந்தவர்கள்தான் நல்ல ஜட்ஜுகளா கிறாங்க. நம்ம கொண்டுபோன கேஸூ எதுவுமே இதுவரை தோத்ததில்லை. கீழ்க் கோர்ட்லே தூக்கு வாங்கியிருப்பான். நம்ம வாதத்திலே அதை ஆயுளாக் குறைச்சிட்டோம்னாலே ஜெயிச்ச மாதிரித்தானே.

நம்ம வாக்குலே என்ன இருக்கு. எல்லாம் வாமனர் அருள். அவருடைய அருளாலே நமக்கும் சில சித்திகள் கிடைக்க ஆரம்பிச்சிருக்கு. ஒவ்வொரு பிரதோஷத்தன்னைக்கும் தியானத்திலே உக்காரும்போது, உடம்பு ரெண்டு அங்குலம் மேலே உயருது. நமக்குப் பறக்குற அனுபவம் கிடைக்குது. பாக்குறவங்க உடம்பு உயர்றதைச் சொல்றாங்க. அடுத்த பிரதோஷத்தன்னைக்கி வேணும்னா நீங்களும் வாங்களேன்...

நீலகண்டனின் பேச்சில் உண்மையும் பொய்யும் கலந்திருக்கும் விகிதாசாரம் என்ன என்பதை அவ்வளவு சுலபமாய் யாரும் கண்டுபிடித்துவிட முடியாது என்று நினைத்துக்கொண்டார் ஹாலாஸ்யம். என்ன இருந்தாலும் வக்கீல் இல்லையா!

...அவருடைய பூதவுடம்பைப் புதைச்ச இடத்திலே ஒரு மணி மண்டபமும் அதைச் சுத்தி நந்தவனமும் அமைக்கத் தீர்மானமாகியிருக்கு. திருவண்ணாமலையிலே குள்ளச் சித்தர் மடம்னு இருக்குன்னேனே. அந்த மடத்தோட பாணியிலே இதையும் அமைக்கத் திட்டம். இதுக்காக ஒரு குழு அமைச்சிருக்கோம். நான்தான் அதுக்குக் காரியதரிசி. தெலுங்கு வைசியப் பிராமணாள் ஒருத்தரைத் தலைவராப் போட்டிருக்கு. என்னைத்தான் தலைவரா இருக்கச் சொன்னாங்க. நான் மாட்டேன்னுட்டேன். தலைவருக்கு என்னங்க பவர் இருக்கு. காரியதரிசிப் பொறுப்புதானே செயலூக்கம் உள்ள பதவி.

இப்போ பாருங்க, மணலூர் பக்கத்திலேதான் யோகீஸ்வரரை அடக்கம் பண்ணினது. அந்த இடத்தைச் சுத்திப் பதினஞ்சு ஏக்கரா நிலம் வாங்கிப் போட்டிருக்கு. ஏப்பை சாப்பையான ஆளைப் போட்டிருந்தா நடந்திருக்குமா சொல்லுங்க. இந்தா, நாளைக்கி ராத்திரி மெட்றாஸுக்குப் போறேன். அங்க பத்து அம்பது பேரைப் பாத்து நிதிவசூல் பண்ணத் திட்டம் இருக்கு.

அடடா, ஒங்ககிட்டே ரசீதுப் புஸ்தகம் குடுத்தனுப்ப நினைச்சேன். மறந்து போச்சே. ஒங்க விலாசத்துக்குத் தபால்லே அனுப்புறேன். நீங்களும் ஒங்க பக்கத்துலே முடிஞ்ச அளவு வசூல் பண்ணி அனுப்புங்க. நம்மள மாதிரி ஆளுக இல்லாமப் போனா பகவானுக்கும் வேற நாதியில்லாமப் போயிரும். சரிதானே. இவ்வளவு பண்ணியுமே ஒடம்புலெ கட்டி புரையோடுற மாதிரி நாஸ்திகம் அதுபாட்டுக்கு வளந்துட்டுத்தான் போகுது...

நீலகண்டன் தெற்காவணி மூலவீதியைப் பார்த்துப் போனார். ஹாலாஸ்யம் திண்டுக்கல் ரோட்டில் நுழைந்து பஸ் ஸ்டாண்ட் வந்து

சேர்ந்தார். ஜனங்களுக்கு நிற்க நேரமில்லை. ஈக்கள் போல ரீங்கரித்துச் சுற்றிச் சுற்றி வருகிறார்கள்.

இன்னும் எந்தெந்த ஊர் பஸ் ஸ்டாண்டுகளில் எந்தெந்த நேரங்களில் நிற்கப் போகிறோமோ என்று எண்ணிக் கொண்டார். ஸ்ரீ முத்துச்சாமியின் முகம் நினைவில் வந்தது. அந்தச் சிரிப்பு, அந்தப் பரிவு, அந்தக் குரல்... எல்லாமே ஏதோ தொலைதூரக் கனவாகவல்லவா இருக்கின்றன. சட்டென்று கண்ணில் துளிர்த்த நீரை அங்கவஸ்திர நுனியால் ஒற்றிக் கொண்டார்.

ஸ்ரீ முத்துச்சாமிக்குச் செய்யவேண்டிய முதன்மையான கைங்கர்யம் அவரை வைத்து ஒரு ஸ்தாபனம் நிறுவக்கூடாது என்பதுதான். தானாய்ப் பூக்கும் புஷ்பம் போன்ற மகானை அரும்பின மாத்திரத்தில் பறித்துப் பூச்சாடியில் செருகிவைக்கிறார்கள் நீலகண்டன் மாதிரியானவர்கள்.

பஸ் ஸ்டாண்டுக்கு வெளியே நடைபாதை ஓரமாக ஒரு சிறு கூட்டம் நின்றிருந்தது. கூட்டத்துடன் நின்று சற்றுநேரம் வேடிக்கை பார்த்தார் ஹாலாஸ்யம். மையத்தில் பாம்பாட்டி ஒருத்தன் வித்தை காட்டிக்கொண்டிருந்தான். வித்தைகளை விடவும் பேச்சு தீவிரமாகவும் ஜாஸ்தியாகவும் இருந்தது. கூடைக்குள்ளிருந்தவாறே படம் உயர்த்தின பாம்பையும், நாலைந்தடி தள்ளித் தரையில் அடித்த முளையில் கட்டியிருந்த கீரிப் பிள்ளையையும் சண்டையிட வைக்கப் போவதாகக் கூறிக் கொண்டிருந்தான் அவ்வப்போது.

கூட்டத்தை விட்டு விலகினார் ஹாலாஸ்யம். ‘சோழவந்தான் பள்ளபட்டி நிலக்கோட்டை வத்தலக்குண்டு பெரியகுளம்’ என்று கூவி அடுக்கிக்கொண்டிருந்தவனைத் தாண்டி பஸ்ஸுக்குள் ஏறி உட்கார்ந்தார். ஸ்டாண்டை விட்டு பஸ் வெளியேறும்போது, பாம்பாட்டியைச் சற்றி நின்ற கூட்டம் இன்னும் அதிகரித்திருந்தது தெரிந்தது.

கடைசிவரை கீரீயையும் பாம்பையும் மோதவிட மாட்டான் அவன். முதலை அழித்துவிட்டால் தொழிலை எப்படி நடத்துவது. இடைவெட்டாக நீலகண்டன் முகம் தோன்றி மறைந்தது மனத்திரையில். தனக்குத்தானே புன்னகைத்துக் கொண்டார் ஹாலாஸ்யம்.

## அத்தியாயம். 31

பூலாங்குறிச்சி
10.11.1976
காலை 4 மணி

அன்புள்ள செய்யது,

நலமா? இங்கு நானும் சிகப்பியும் நல்ல சுகம். அங்கு ஜன்னத்து, வாப்பா, குழந்தைகள் எல்லோரையும் விசாரித்ததாகச் சொல்லவும்.

சென்ற முறை நீ வந்துவிட்டுப் போனது நீ வந்துவிட்டுப் போன மாதிரியேயில்லை. ரயில்வே ஸ்டேஷனில் நீ ஒருத்தரையும் நான் இன்னொருத்தரையும் வழியனுப்ப வந்த இடத்தில் தற்செயலாகப் பார்த்துப் பிரித்த மாதிரி இருக்கிறது. இதுமாதிரியான சந்தர்ப்பங்களில்தான், நமக்கு வயது கூடிவிட்டதும், அவரவருக்கு அவரவர் வேலைகள் உருவாகிவிட்டதும் உணரக் கிடைக்கிறது.

செட்டிநாட்டின் ஊருணிக் கரைகளிலும், வைகையாற்றின் மணல் பரப்பிலும், பொற்றாமரைக் குளக் கரையிலும், விரகனூர் மதகிலும் உட்கார்ந்து மணிக்கணக்காகப் பேசிக்கொண்டிருந்த நாட்கள் ஞாபகம் வருகிறது. அதெல்லாம் கனவு போல இருக்கிறது. கனவில் நடக்கிற எல்லாமே நிஜம்தான். ஆனால் எதையும் கையாள முடியாது. கை நீட்டித் தொட்டுவிடலாம், கையைத்தான் நீட்ட முடியாது என்கிற மாதிரி.

இங்கு விநோதமாக நடக்கின்றன காரியங்கள். அதையெல்லாம் கொட்டிவிடவேண்டும் என்பதற்காகத்தான் இதை எழுதுகிறேன்.

என்னுடைய தகப்பனார் காணாமல் போன சமயம், சின்ன மாமா மலேயாவில் இறந்த தகவல் வந்தது அல்லவா? அன்றைக்கு விடிகாலையில் என்னுடைய அம்மா தூக்கத்திலிருந்து அலறி விழித்தார்கள். என்னம்மா, என்று விசாரித்தபோது, நாகப்பன் போய்ட்டாண்டா என்று சொல்லி அழுதார்கள். என்னம்மா உளறுறே என்று கேட்டேன். இல்லடா பளனி, அவம் போன படகு கவுந்துருச்சு.

சொப்பனம் பொய் சொல்லாது எனக்கு என்று குமுறினார்கள். இத நடந்தது காலையிலே நாலரை மணிக்கு. பத்தே முக்காலுக்குத் தந்தி வருகிறது, படகு விபத்தில் மாமா இறந்துவிட்டார் என்று.

அப்போது இதைத் தற்செயல் என்றுதான் நினைத்தேன். கடைக்குட்டித் தம்பியின் மேல் என் அம்மாவுக்குக் கொள்ளைப் பிரியம்.

ஆனால், தற்செயல்கள் மீண்டும் மீண்டும் நிகழ்ந்துகொண்டே போகின்றன. தாங்க முடியாத வேகத்தில் அவை நடப்பதை என்னவென்று சொல்லுவது?

கரட்டுப்பட்டி போய்விட்டு வந்ததைப் பற்றி அன்று சொன்னேனே. விரிவாகப் பேச அவகாசமில்லாமல் போய்விட்டது. அன்று நாங்கள் சந்தித்தது பார்வையில்லாத ஒருத்தரை என்று சொன்னேனில்லையா? அவருக்குப் பிறவியிலேயே பார்வை கிடையாதாம். அவர் சொன்னதையெல்லாம்தான் உன்னிடம் நானும் சிகப்பியும் சொன்னோமே.

எனக்கு வேறு ஒரு கேள்வி இருக்கிறது செய்யது. கண்முன்னால் உட்கார்ந்திருக்கிற எங்களை அவரால் பார்க்க முடியாது. ஆனால், பூலாங்குறிச்சியில் இருக்கிற எங்கள் வீட்டைத் துல்லியமாகப் பார்க்கிறார். வீட்டிலுள்ள பூஜை அலமாரி தெரிகிறது அவருக்கு. கரட்டுப்பட்டியிலிருந்து நம்மூருக்கு வரவேண்டுமென்றால், குறைந்தது நாலைந்து மணிநேரம் ஆகிவிடுகிறது நமக்கு. அவருக்கு அப்போதே அங்கேயே, சொல்லப்போனால் அவர் உட்கார்ந்திருக்கும் இடத்திலேயே இருக்கிறது பூலாங்குறிச்சி.

அதாவது, பூலாங்குறிச்சி, கரட்டுப்பட்டி என்று இரண்டு இடங்கள் கிடையாது அவருக்கு. நாலு மணிநேரம் என்ற இடைவெளியும் கிடையாது. அமெரிக்காவையும் இதே மாதிரிப் பார்த்துவிட முடியும் அவரால் என்றுதான் தோன்றுகிறது.

அப்படியானால் அவர் சஞ்சரிக்கும் பிரதேசம் எது, அந்தப் பிராந்தியத்தின் வெளிவிளிம்பு எது?

அவர் சொன்னபடி வைத்தீஸ்வரன் கோயில் போனோம். வழக்கம் போலவே கோயிலில் மனம் பொருந்தவில்லை எனக்கு. சிகப்பி மனப்பூர்வமாகவும் நான் அவளுடைய காவலன் போலவும் கோவிலைச் சுற்றி வந்தோம். வாசலில் வந்து காலணிகளை அணிந்துகொள்ளும்போது சிகப்பி திடீரென்று சொன்னாள். நாடி ஜோசியம் பார்க்கவேண்டுமென்று.

எனக்கு இது பழகிவிட்டது. விதவிதமான ஜோசியங்கள், மருத்துவ முறைகள், பிரார்த்தனை நிறைவேற்றங்கள், ஆரூடக்காரர்களும், மந்திரிப்பவர்களும், குறி சொல்லுபவர்களும் வந்து செல்லும் இடமாகிவிட்டது வீடு. யாரிடமாவது செமத்தியாக ஏமாறும் வரை இவளைத் திருத்த முடியாது. இந்த நினைப்போடுதான் போனேன்.

ஜோசியம் பார்க்கச் சென்ற இடத்தில் எவ்வளவு பெரிய அதிர்ச்சி என்கிறாய்?

அந்த ஆள் எங்களிடம் எதுவுமே கேட்கவில்லை. வலதுகைக் கட்டைவிரல் ரேகையை எடுத்துக்கொண்டு போனார். பிறகு அவர் எங்களுக்குச் சொன்ன தகவல்களின் துல்லியம், வருஷக்கணக்காக எங்கள் குடும்பத்துடன் பழகி வருகிறாயே, உனக்குக் கூட சாத்தியமில்லை.

என்னுடைய பேர் சொல்கிறார். தகப்பனார் தாயார் பெயர், உத்தியோகம், உடன்பிறந்தவர்கள், சிகப்பியின் தகப்பனுக்கு இரண்டாம் தாரம் இருப்பது, என்று தகவல்களும் குறிப்புகளும் ஓடுகின்றன. இதில் பிரமிக்க வைத்த இன்னொரு விஷயம், என்னுடைய நாற்பத்து மூன்றாவது வயதில் நான் அங்கு வருவேன் நாடி பார்க்க என்று அதில் இருக்கிறது. (நாடியில் வந்த பாட்டுக்கள் சிலதைத் தனியாக ஒரு தாளில் எழுதி இணைத்திருக்கிறேன்.)

நான் செய்வதும், செய்யாமல் இருப்பதும், செய்யவிருப்பதும் யாருடையவோ நாட்குறிப்பில் பதிவாகிக்கொண்டிருக்கிறது என்றுதானே அர்த்தம். அதாவது, நான் உனக்கு எழுதும் இந்தக் கடிதம்கூட. வேறு ஒரு இடத்தில் பதிவாகிக்கொண்டிருக்கிறது இப்போதே. இல்லையா, நான் மிரண்டுவிட்டேன் செய்யது.

யாரோ நம்மைக் கவனிக்கிறார்கள் என்று தெரிந்த மாத்திரத்தில் இயல்பு நிலை பிறழ்ந்துவிடுகிறதா இல்லையா? ரெண்டு மூன்று நாள் ஓய்ந்து கிடந்தது மனம்.

சமீபத்தில் ஒரு புஸ்தகம் வாசிக்கக் கிடைத்தது. Lobsang Rampa ஒரு திபெத்தியன் எழுதியிருக்கிறான். அது கதை கிடையாது. ஒரு விதமான dictionary. ஆன்மிகத்திலேயும், மெட்டாஃபிஸிக்ஸிலேயும் புழங்கும் வார்த்தைகளையும், அவற்றுக்குண்டான அர்த்தங்களையும் தொகுத்திருக்கிறான். (அதைப் படிக்கும்போது வேறு ஒன்றும் தோன்றியது. நமக்கு உடனடியாகப் பொருள் விளங்கிவிடும் ஒரு சொல்லை எழுத்தில் விளக்குவதென்றால் எத்தனை

பிரயாசையாகிவிடுகிறது? உதாரணமாக, சிகரெட்டைப் பார்த்திராத ஒருத்தனுக்கு சிகரெட் என்றால் என்னவென்று வார்த்தைகளால் விளக்குவது எத்தனை கடினம்!)

அந்தப் புஸ்தகத்தில் ரம்ப்பா சொல்கிறான். astral space என்று ஒன்று இருக்கிறதாம். பிரபஞ்சம் வெடித்துத் தோன்றிய நாளிலிருந்து இன்றுவரை நடந்த, இன்னும் உலகம் அழியும் நாள் வரை நடக்கப் போகிற, அத்தனை சம்பவங்களும் சினிமா போல அந்த spaceல் பதிவாகிக்கொண்டிருக்கிறதாம். சும்மா புளுகுகிறான் என்று நினைத்தேன் அதைப் படித்தபோது.

வைத்தீஸ்வரன் கோயிலில் நடந்ததைப் பார்த்தால் அப்படி ஒரு space நிஜமாகவே இருக்கிறதோ என்று நம்பத் தோன்றுகிறது.

ஆனால், இவ்வளவு தூரம் ஆனபிறகு, கடவுள் என்று ஒருத்தர் இருக்கிறார், இதையெல்லாம் நடத்திவைக்கிறார் என்ற நம்பிக்கை உண்டாகவேண்டுமா, இல்லையா. மாறாக, திகில்தான் கூடிக்கொண்டே போகிறது. திகில் முற்றும்போது, அதிலிருந்து தப்பிக்கவேண்டி, தன்னிச்சையான காரணங்களையும் சமாதானங்களையும் மனம் உற்பத்தி செய்து கொள்கிறது.

இந்த நூற்றாண்டின் இந்தப் பகுதியில் நாம் அனுபவம் கொள்ளும் காலமும் இடமும் முற்று முடிவானவையல்ல - வேறு கால அமைப்புகளும், வேறு மாதிரியான தர்க்கங்களும் இருப்பதாகத்தான் நம்பவேண்டியிருக்கிறது.

இப்போதுள்ள கால - இட அமைப்பைச் சிறுபிள்ளைகள் சொப்பு வைத்து ஆடும் விளையாட்டாய்த் தென்பட வைக்கும் வேறொரு தர்க்க அமைப்பு இருக்கிறதாக உணர்கிறேன். கல்லையும் மணலையும் வைத்துச் சமைக்கும் சோறு குழந்தைகளின் பாவனையில் எந்த அளவு நிஜமோ, அந்த அளவு மட்டும்தான் நிஜம் - அரிசியையும் பருப்பையும் வேக வைத்து நாம் சமைக்கும் உணவும்.

நேற்று இரவு, இனிப்புப் பலகாரம் கொண்டுவந்து வைத்தாள் சிகப்பி. குள்ளச் சித்தன் சரித்திரம் என்று ஒரு புஸ்தகம் நூலகத்திற்கு வந்திருக்கிறது. அதைப் படிக்க ஆரம்பித்திருந்தேன். என் சொந்த வாழ்க்கையிலும் இந்தத் தபாலிலும் நான் புலம்புகிற அத்தனை அவஸ்தைகளினுடையவும் கூட்டுத்தொகுப்பு என்று சொல்லலாம் அந்தப் புத்தகத்தை.

மும்முரமாகப் படித்துக்கொண்டிருந்தேனா, பலகாரத்தை

மறந்துவிட்டேன். சிகப்பி வந்து திட்டிக்கொண்டே ஞாபகப்படுத்தும்போதுதான் திரும்பிப் பார்த்தேன். பலகாரம் முழுக்க எறும்புகள். சிகப்பி அதை வாசலில் வைத்துத் தட்டிக் கொண்டுவரப் போனாள்.

செய்யது, எனக்குள்ளே ஏதோ ஒரு குமிழி உடைந்துவிட்ட மாதிரி இருந்தது. எறும்புகளின் பிரபஞ்சத்தில் சிகப்பி என்ற மனுஷியோ அவளுடைய கையோ கிடையாதில்லையா. உழைப்பு, சாப்பாடு, உழைப்பதற்காகச் சாப்பாடு, சாப்பாட்டிற்காக உழைப்பு, இனப் பெருக்கம் இதைத் தவிர, வேறு யோசனை ஏதாவது இருக்குமா அந்த எறும்புகளுக்கு?

இத்தனைக்கும் அவற்றின் உள்ளுணர்வில் துல்லியமான கால அமைப்பு இருக்கத்தான் செய்கிறது. மழைக்காலத்துக்காக உணவைச் சேமித்து வைக்கவும், கூட்டமாய் வாழவும் தெரிகிறது அவற்றுக்கு.

நம்முடைய அனுபவத்திற்குக் கரட்டுப்பட்டிக்காரர் மாதிரியான ஆசாமிகளின் வாக்குகள், எறும்புக்குச் சிகப்பியின் கைபோலத்தான் என்று தோன்றியது. ராத்திரி முழுக்கப் படுத்தியது இந்த உதாரணம். காலையில் உனக்கு எழுத வேண்டும் என்று நேற்றிரவே நினைத்துக்கொண்டேன். இதோ எழுதுகிறேன்.

சமீபகாலமாக இன்னொரு குழப்பமும் மிகுந்து கொண்டிருக்கிறது. என்னுடைய எண்ணங்களுக்கு எந்த அளவு நான் பொறுப்பு என்று. வைத்தீஸ்வரன் கோயில் குளத்தில் குளிக்கும்போது, சற்றுத் தள்ளிக் குளித்த பெண்ணின் மார்புகளில் என் கவனம் போகிறது. விதவிதமான பெண்களை விதவிதமான நிலைகளில் வைத்துப் புணர்வதற்கான வேட்கை இருந்துகொண்டே இருக்கிறது. அது சித்திரங்களாக என்னுள் விரிந்தபடி இருக்கிறது.

முன்பெல்லாம், வெகு எளிதாகச் சமாதானம் கொண்டு விடுவேன் - எல்லா ஆண்களுக்கும் இருக்கக்கூடியதுதான் இந்த உணர்வு என்றும், குழந்தை பிறக்கவில்லை என்ற கூடுதல் தகுதி எனக்கு இருப்பதாலும் இதெல்லாம் சகஜமான மன ஓட்டங்கள்தாம் என்று நினைத்துக்கொள்வேன். இப்போது, வேறுவிதமான பயம் பிறக்கிறது.

நியாயம், தர்மம், சீலம் என்றெல்லாம் பேசுகிறோமா இல்லையா. இதுமாதிரி, பாவ புண்ணியங்கள் பற்றியும் ஒரு அபிப்பிராயம் இருக்கிறது எல்லோருக்கும். சின்னச் சின்ன வித்தியாசங்கள் இருக்கலாம். செய்யும் காரியங்களை, காரியங்களுக்குப் பின்னாலுள்ள

உத்தேசங்களை அடிப்படையாக வைத்து இதையெல்லாம் பேசுகிறோம்; தன்னிச்சையாக மனத்தில் தோன்றும் எண்ணங்களுக்கு யார் பொறுப்பு? நான் திட்டமிட்டு யோசிப்பதாக இல்லாமல், தானாய் ஊறும் வேட்கை உருவாக்கும் சித்திரங்களுக்கான பாவ புண்ணிய மதிப்பீடு என்னுடைய கணக்கில் சேருமா?

இந்தக் குள்ளச் சித்தன் சரித்திரம் இருக்கிறதே, இது மறுபிறவியைப் பற்றிப் பேசுகிற புத்தகம். நேற்றுத் தூங்கப் போவதற்கு முன்னால், கருங்கல் மாதிரி ஒரு கேள்வி உள்ளே வந்து உட்கார்ந்துவிட்டது.

என்னுடைய இப்போதைய சிந்தனைகள் எல்லாம் இப்போது உள்ளவைதானா, முந்தின பிறவி ஒன்றின் தொடர்ச்சியா? இரண்டில் எந்தப் பதிலைக் கொண்டாலும், அது தர்க்கத்துக்கு உட்பட்டதாகத்தான் இருக்கும் என்று படுகிறது செய்யது.

சரி விடு, நேரில் வரும்போது இன்னும் நிறையப் பேசுவோம். வீட்டில் அனைவருக்கும் எங்கள் அன்பைத் தெரிவி. மனம் போன போக்கில் எழுதியிருக்கிறேன். பூலாங்குறிச்சியில் இருள் விலகுகிற நேரத்தில் உனக்கு எழுதிக்கொண்டிருக்கிறேன். ஆனால், இது உனக்குத் தெரியாது. இதே நேரம் உறக்கத்தில் ஆழ்ந்திருப்பாய்.

விழித்து நடமாடிக்கொண்டிருக்கும் நேரத்திலும் நம் எல்லாருக்கும் பொதுவான உறக்கத்தில் இருக்கிறோமோ செய்யது?

உன் அன்பு,<br>
பழனியப்பன்.

பி.கு: நீ கேட்ட அந்தப் புத்தகம் இன்னும் கிடைக்கவில்லை. மணிகண்டனை விட்டு இன்னொரு முறை தேடச் சொல்கிறேன்.

நாடியில் எனக்கு வந்த பாட்டுக்கள்...

மாறிநலம் வாழ்வதுவே நாற்பான் மூன்றில்

மகனிவனே நூலாய்வு சென்மகரியோன்

கூறிடவே பல சூட்சி கண்டகட்டம்

குழவிசுகம் தனக்குமே உதிக்காவாட்டம்

...

பவம்தன்னால் குழவிதோடம் தனக்குண்டு

பலனறிய ஆகமத்தால் பகுதிசேயும்

சௌக்கியமாய் தோன்றுமே நாமம் ஒலிக்க

சொல்லிட்டமுறை வாழ்வும் இணைகேட்டு

....

அழைக்கபின் ஆலவாய் அன்னையில்லாள் * சிகப்பியின் ஜாதகப் பெயர் மீனாட்சி என்று தெரியுமில்லையா உனக்கு.*

அணிதினமும் ஒன்றுகூடி வாழ்ந்திடவே

தாழ்வில்லா முன்னேற்றம் ஆகுமதால்

தன்னிவனே இடைபிரிவும் சூட்சமங்கள்

....

சிகப்பிக்கு வந்தது...

ஏது தொடர் மகள்வயது முப்பானெண்சார்

இயம்பவும் ஏழரையின் கரியன் நடப்பும்

சாத்திகமாய் மன்றல்தோடம் சேயும் கிட்டா

சிறப்பில்லை உடற்பீடை சிதைவுமேலும்

....

அட்டமுடன் கனிபுட்பம் தாம்பூலங்கள்

அறியவும் நெய்தீபம் கலசம்உதிரிகூட்டி

இட்டமுடன் செபித்தாகும் ரட்சைதன்னை

இன்னவளும் மேனியதில் அணியநன்று

....

நன்றான கண்டகட்டம் புத்திரதோடமோடி

நினைத்தவார் வாழ்வுண்டு எண்ணம்சித்தி

வினவிட நாற்பானீர் சூலம் இரண்டுள்

வளமான காந்தன்சுகம் அன்பும் குன்றா

....

## [அத்தியாயம். 32]

அந்தக் கொழந்தையைப் பார்த்ததும் பயந்துபோனேன். தொப்புள் கொடி அறுபட்ட ரத்தக்காயம் ஈரம் உலராமெ இருக்கு. கைகாலெல்லாம் பாம்புச்சட்டை மாதிரி மேல்தோல் உரிஞ்சு கெடக்கு. அப்பொத்தான் மொதல் தடவையா உலகத்தைப் பார்க்கக் கண்ணைத் திறக்குது. கருநீலக் கோலிக்குண்டு மாதிரி இருந்த கண்களைப் பார்த்தும் எனக்குக் கண்ணு சுரந்திருச்சு.

அமிர்தமானாப் பைத்தியக்காரி மாதிரி என்னாண்டை வந்து நிக்கிறா. என்னா இதுன்னு கேட்டேன். ‘கடவுள் குடுத்துட்டார்ங்க. நம்ம ஆசை நிறைவேறிருச்சு’ங்குறா. யாரு பெத்த புள்ளெயோ, எப்பிடி இங்கே வந்துச்சோ. போலிஸ்லே சொல்லீருவோம் அமிர்தம்ன்னு சொன்னேன். மடியிலே கொழந்தையோட உக்காந்து அழ ஆரம்பிச்சுட்டா இவ. நான் வீட்டை விட்டு எறங்கி வெளியிலே போயிட்டேன்.

வீட்டை விட்டு ஒரு அம்பது கஜ தூரம் போயிருப்பேன். எங்க பண்ணையாள் அழகிரி எதுத்தாப்புலே ஓடியாரான்.

> என்னாடா, என்ன விசயம், ஏன் இப்படிக் குலைதெறிக்க ஓடியாரே?
>
> எஜமான், நம்ம வூட்டுலே சாப்பட்டுட்டுப் போனாரில்லே, அந்த ஆள் நம்ம வயலுக்குள்ளே நொளைஞ்சாரு. கொஞ்ச தூரம் வரப்புல நடந்து போனாரு. நாங்க பாத்துக்கிட்டிருக்கும்போதே டகால்ன்னு உடுத்தியிருந்த துணி ஒண்ணொண்ணாக் களத்தி எறிஞ்சாரு. கோமணம் வரைக்கும் களத்திப் போட்டுட்டு நெறை அம்மணமாப் போறாரு. இருபது இருபத்தஞ்சு நாய்க சத்தியத்துக்குக் கட்டுப்பட்ட மாதிரி அவர் பின்னாடி வாலாட்டிக்கிட்டுப் போகுதுக.

அவன் வாய் குளறுது. பேயைக் கண்டவன் மாதிரி உளறுரான். நான் வீட்டுக்குத் திரும்பிட்டேன். அமிர்தத்துக்கிட்டே சொன்னேன்.

> அமிர்தம், இது ஒங் குழந்தைதான். நம்ம வூட்டுக்கு வந்துட்டுப் போனவரு சாமான்ய ஆளில்லேன்னு தோணுது. யாரோ மஹானாய்

இருக்கணும்.

கொழந்தைக்கி அமிர்தகடேசன்னு பேர் வச்சோம். வூட்டுலே தம்பித்தொரேன்னு கூப்புடுறது. மாசிமகத்தன்னிக்கு கெடைச்சதாலே அதைத்தான் அவன் பொறந்த நாள்ன்னு கொண்டாடுறது. அம்மா, அமிர்தம், ஐயர்வாளுக்குக் காபி குடுக்கச் சொல்லு.

அந்த அம்மாள் கேட்டாள்.

ஏஞ்சாமி, இதையெல்லாம் ஒங்க புஸ்தகத்திலே எளுதுவீங்கல்ல?

ஆமா.

அப்பன்னா எனக்கு ரெண்டு வாக்குக் குடுக்கணும்.

சொல்லுங்கம்மா.

என் மாமியா இவுகளுக்கு ரெண்டாந் தாரம் பொண்ணு தேடினதை எளுதிப்புடாதீங்க. பாவம், செத்துப் போனவுங்களைப் பத்தி நாம குத்தம் சொன்னதா ஆயிற வாணாம்.

ஹாலாஸ்யம் உதடு பிரியாமல் சிரித்தார்.

சரி, ரெண்டாவது?

எம் பேரை எளுதும்போது ராமாமிர்தத்தம்மான்னு முழுசா எளுதுங்க. அதேமாதிரிதான், மொதலியார் பேரைத் திருத்தமா 'சென்ன'ன்னு எளுதுங்க. கடுதாசி வைக்கிறவங்க தப்பா 'சின்ன'ன்னு போட்டுர்றாங்க.

ஆகட்டும்மா.

புஸ்தகம் வந்ததும் எங்களுக்கும் ஒண்ணு அனுப்பி வையுங்க. எனக்குத்தான் படிக்கத் தெரியாது. மொதலியாரு படிச்சவருதான். அவரை வாசிக்கச் சொல்லிக் கேட்டுக்கிருவேன்.

தவறாமெ அனுப்பறேன்ம்மா.

சென்ன கேசவ முதலியார் வழியனுப்ப வந்தார். வயது தெரியாத விறைப்பான நடை. அநாவசியச் சதை எங்கும் இல்லாத உடம்பு. ஒரு பார்வைக்கு, நடந்து வரும் மூங்கில் கழிபோல இருந்தார். பஸ் நிறுத்தத்தில் நீள்வசமாகக் கிடந்த சமதளக் கல்லில் உட்கார்ந்தார்கள். முதலியார் கேட்டார்:

ஒங்களுக்குப் பூர்வீகம் எது?

மதுரை ஜில்லாவிலே, சோழவந்தான் பக்கம். தென்கரையிலேயிருந்து அஞ்சு மைல் தொலைவுலே ஒரு கிராமம்.

இந்த மாதிரிப் புஸ்தகம் எளுதணும்னு எப்படித் தோணுச்சு?

என் சிநேகிதர் ஒருத்தர் ஞாபகார்த்தமா...

ஹாலாஸ்யத்தின் பதில் தன் காதில் விழாதவர் போலக் குறுக்கே கேட்டார் முதலியார்.

பலவேச மொதலியார் அனுப்புனார்ன்னு சொல்லிட்டு, இன்னொரு அம்மா பேர் சொன்னீங்களே? அது என்னா?

தாயாரம்மா. தஞ்சாவூர் ஜில்லா ரெட்டைப்புலி கிராமம்.

அடேயப்பா. அந்தம்மா சொல்லிச்சா? இன்னமும் ஞாபகம் வச்சிருக்கா. வருசக் கணக்கா ஆச்சு, அந்தம்மாவைப் பார்த்து. அப்பப்போ கடுதாசி போடும். நானும் பதில் போடுவேன். இப்பொ ஒரு ஏளெட்டு வருசமாக் கடுதாசிப் போக்குவரத்தும் கெடையாது. சரி, ஏதும் அசம்பாவிதம் நடந்து போச்சோன்னு நினைச்சுக்கிட்டேன். இருக்குதா அந்த அம்மா...?

நல்ல ஆரோக்கியமா இருக்காங்க. சமீபத்துலதான் பார்த்தேன். உங்க விலாசத்தைக் குடுத்ததே அவுங்கதான். பலவேச முதவியார் உங்க பேரும் ஊரும் சொன்னாரேயொழிய, விலாசம் குடுக்கலே.

அந்த அம்மாவுக்கு எம் மகன் மேலே கொள்ளைப் பிரியம். ஒரு கடுதாசி வந்துச்சுன்னால அதுலே முக்காத் திட்டம் தம்பித்தொரையே விசாரிச்சுத்தான் இருக்கும். தன்னோட பேரன் னுதான் எளுதும் அந்தம்மா.

ஹாலாஸ்யத்துக்குத் தாயாரம்மாள் வழியனுப்ப வந்தபோது, எதையோ சொல்ல வந்து தயங்கியது நினைவு வந்தது. அந்த அம்மாள் உதிர்க்கத் தொடங்கிப் பாதியில் நிறுத்தி விழுங்கிவிட்ட வார்த்தைகள் சென்ன கேசவ முதலியாரிடமிருந்து வெளிவரக் கூடும் என்று தோன்றியது. இதில் ஏதோ இருக்கிறது என்று ஒரு பொறி சொல்கிறது. முதலியார் தொடர்ந்தார்:

பெரியவர் எங்க வீட்டுக்கு வந்துட்டுப் போனாரே. அதுக்கு அடுத்த வாரம் பலவேசமுதலி இங்கே வந்திருந்தாரு. அவரு எங்களுக்குத் தூரத்துச் சொந்தம்தான். எங்க அம்மா வளியிலே மூணு தலைமுறைக்கி முந்தி உறவு. அப்பப்போ வருவாரு இங்கே. அவருதான் சொன்னாரு. பெரியவர் போன வழி முழுக்க

விளையாடிக்கிட்டே போயிருக்காரு. புயல் போன வழியிலே மரம் செடியெல்லாம் வேரோட பிய்ஞ்சு கெடக்குமே, அதுமாதிரி அடுத்த ஒரு மாசத்துக்கு ரெண்டு மூணு ஜில்லாலே அவரு பேச்சுத்தான் எங்கே பார்த்தாலும் அடிபட்டுக் கிட்டிருந்துச்சு.

இங்கேருந்து திருவண்ணாமலை வரைக்கும் ஒவ்வொரு கிராமத்திலே ஒவ்வொரு லீலை பண்ணிட்டுப் போயிருக்காரு. அந்தச் சமயத்திலேதான் பலவேச முதலியாரும் இன்னும் கொஞ்சப் பேரும் சேர்ந்து மடத்தை ஸ்தாபிதம் பண்ணுனாங்க. இதெல்லாம் நடந்தது தொள்ளாயிரத்திப் பத்தொம்போதுல. அந்த வருசம் முழுக்க...

ஹாலாஸ்யத்துக்கு பயம் தட்டியது. கிழவர் சொன்னதையே திரும்பச் சொல்ல ஆரம்பித்துவிடுவாரோ. தாயாரம்மாளைப் பற்றிய பேச்சு பாதியில் ஓய்ந்துவிட்டதே. ஹாலாஸ்யம் சற்று அடங்கிய குரலில் எடுத்துக் கொடுத்தார்:

அந்த அம்மாளைப் பாத்தது பத்திச் சொல்லிக்கிட்டிருந்தீங்க...

ஆமா. ஆமா. என்னா மறதி பாருங்க. அந்த அம்மா பேரு தாயாரம்மா. தஞ்சாவூர் ஜில்லாவுலே ரெட்டைப்புலி கிராமம் தான் அந்தம்மாவுக்கு. அந்த ஊர்க் கோயில் வாசல்லே பூ யாவாரம் பாத்துக்கிட்டிருந்தவங்க. உங்க ஊர்ப் பக்கம் பூக்கட்டுற சாதிக்காரவுகளை என்னான்னு சொல்வீங்க?

பண்டாரம்னு சொல்லுவாங்க.

அதான், அந்தம்மா அந்த சாதிக்காரங்கதானாம். அவுங்களைப் பளனியிலே வச்சுச் சந்திச்சோம். அது பெரிய கதையாச்சே, அதுக்குள்ளே பஸ்ஸு வந்திருச்சுன்னா என்னா செய்றது?

பரவாயில்லே. பஸ்ஸு போனாப் போகட்டும். அடுத்த பஸ் வராமெயா போயிடும்.

ஆமா. நீங்க புஸ்தகம் எளுதுறவுகல்லே. ஒவ்வொரு தகவலும் முக்கியமாச்சுதே. என்னா நான் சொல்றது... சரிதானே?

ஆமா. நீங்க சொல்லுங்க.

முதலியார் சொல்லத் தொடங்கினார்.

## அத்தியாயம். 33

ஸ்ரீ முத்துச்சாமியைப் பற்றி நான் எழுதிவரும் இந்த நூலின் காரியமாக நான் சந்தித்த நபர்களிலேயே பேருதவி புரிந்தவர் என்றால், ஸ்ரீ நீலகண்டனைத்தான் சொல்லவேண்டும். அவர் வழங்கிய தகவல்களும், உற்சாகமும் இல்லாது போனால், மாதுஸ்ரீ தாயாரம்மாள், ஸ்ரீ சென்னகேசவ முதலியார், ஸ்ரீ பெருமாள் இன்னோரன்ன பிறரை நான் கேள்விப்பட்டிருக்கவே மாட்டேன்.

தமிழ் மாகாணத்தின் பல்வேறு பகுதிகளுக்கும் அலைந்து திரிவதற்கான பொருளுதவியும் ஸ்ரீ நீலகண்டன் தாராளமாகவே செய்தார்.

ஆனால், வாமன சுவாமிகள் என்ற மகாபுருஷருடன் சில வருஷங்கள் இருந்தும், ஸ்ரீ நீலகண்டன் எதுவுமே அறியவில்லையோ என்ற சந்தேகம் எழுவதைத் தவிர்க்க முடியவில்லை. ஸ்ரீ முத்துச்சாமி ஒருமுறை சொன்னார்:

> ஆலாஸ்யம், உமக்கும், இந்த மடத்துக்கு வந்து போகிற, நம்முடனேயே தங்கியிருக்கிற மற்றவர்களுக்கும் உள்ள வித்தியாசம் என்ன தெரியுமா? தேனீ தேன் எடுப்பதற்கும், மலைக் குறவன் தேன் எடுப்பதற்கும் உள்ள வித்தியாசம்தான்.

ஸ்ரீ.முத்துச்சாமி குலுங்கிக் குலுங்கிச் சிரித்தது கண்முன்னே நிற்கிறது. முகாலோபனமாக எதையும் சொல்லக்கூடியவரல்ல அவர்.

வாமன சுவாமிகள் என்று அழைக்கப்பட்டவர் ஸ்ரீ முத்துச்சாமியின் முந்தைய அவதாரமோ என்று ஐயம் கொள்வதற்கான சான்றுகள் பல இருந்தும், ஸ்ரீ நீலகண்டன் இந்த விஷயத்தில் அக்கறை காட்டவில்லை என்றுதான் சொல்லவேண்டும். மேற்படிப் பேச்சு வரும்போதெல்லாம், லாகவமாகத் தவிர்த்துவந்தார்.

வாமன சுவாமிகளை ஒரு ஸ்தாபனமாக நிர்மாணித்துத் தான் செய்தமாதிரி, ஸ்ரீ முத்துச்சாமியின் கீர்த்தியை வைத்து பெரியகுளம் மடத்தைப் பணம் கொழிக்கும் மரமாக நான் மாற்றிவிடுவேனோ என்று

அவர் அஞ்சியிருக்கலாம். அடியேனுக்கு அவ்வாறான உத்தேசம் எதுவுமில்லை.

தற்சமயம் ஸ்ரீ நீலகண்டன் ஜீவியவந்தராக இல்லை. 1955 ஆகஸ்டில் காலமாகிவிட்டார். இல்லாவிடில், இந்தக் குறிப்பை எழுதாமல் தவிர்த்திருப்பேன். மடங்கள், ஆதீனங்களின் இரண்டாங் கட்ட நிர்வாகிகளில் வியாபார நோக்கம் கொண்டவர்கள் இருப்பதைத் தெரியப்படுத்தவே இதை எழுத நேர்ந்தது.

வாமன சுவாமிகள் பற்றி ஸ்ரீ நீலகண்டன் எழுதியுள்ள புஸ்தகத்தை வாசித்தேன். மலைக்குறவன் எடுத்த தேன்தான் அது.

யாத்ரீகர்கள் தங்குவதற்கு வசதியான விடுதிகள் எங்கெங்கே இருக்கிறது, தென்னிந்திய உணவு எங்கே கிடைக்கும், எந்தெந்த ஊருக்கு எந்தெந்தப் பருவத்தில் செல்வது உகந்தது, ஒரு ஸ்தலத்துக்கும் இன்னொரு ஸ்தலத்துக்கும் உள்ள தூரம் எவ்வளவு, பிரயாணத்துக்கான வாகன வசதிகள் உண்டா என்று பக்கத்துக்குப் பக்கம் ஏகப்பட்ட தகவல்கள். வடக்கே யாத்திரை போக நினைப்பவர்களுக்கு உதவக்கூடிய நல்லதொரு சுற்றுலாக் கையேடு.

ஒரு மகானுடன் இருந்திருக்கிறீர்கள். அவருடன் அனுதினமும் அறுபது நாழிகையும் உடன் இருக்கும் பாக்கியம் கிடைக்கிறது. உண்மையில் ஒரு சம்பவம் என்பது என்ன? கிடைதண்ணீரில் உருவாகும் நீர்க்கொப்புளம் மாதிரித்தானே.

நீர்ப்பரப்பையே மூடிவிடக்கூடிய பிரம்மாண்டமான நீர்க் குமிழிகளை சிருஷ்டிக்கக்கூடிய வித்தகனுடன் ஊர்ஊராய்ப் போகிறாய். குமிழிகளின் தோற்றத்தை, காட்சியின் மர்மத்தை, அனுபவத்தின் அவசத்தை எழுதுவாயா, எங்கெங்கே இட்லியும் தோசையும் கிடைக்கும் என்று எழுதிப் போகிறாயே. பந்தடி நாலாவது தெருவில் இட்லிக்கா பஞ்சம். தேன் எடுத்த மலைக்குறவன்.

இத்தனை விரிவாகவும் மூர்க்கமாகவும் நான் குறிப்பிடுவது பற்றி, வாசக அன்பர்களில் சிலருக்கு ஆட்சேபம் உண்டாகக் கூடும். நான் சொல்வதைவிட, அந்த புஸ்தகத்திலிருந்து சில பத்திகள் வாசிக்கக் கொடுத்தால், தானாகவே தெரியவரும் என்றெண்ணி, ஸ்வாமிகள் தம் குழுவுடன் வடஇந்திய யாத்திரை செய்த பகுதியை இங்கே தந்திருக்கிறேன். பானைச் சோற்றுக்குப் பதச்சோறு போல.

1921-ஆம் வருஷம் ஐப்பசி மாத அமாவாசைக்குப் பத்து நாள் முன்னதாக, வடக்கே சூலம் அற்ற தினத்தில் புறப்பட்டு, காசி போய்ச்

சேர்ந்தோம். தீபாவளியன்று காசி விசுவநாதருக்கும் அன்னபூரணிக்கும் பட்சணத்தினாலேயே அலங்கரித்திருந்ததை தரிசித்தோம் ...

...துவாரகைக்குப் போயிருந்தோம். ஏழு முழம் அகலத்தில், பன்னிரண்டு முழம் நீளத்தில், எங்கள் சொந்தத் தறியில் நெய்த கபில நிற வேஷ்டியை ஸ்ரீகிருஷ்ண பகவானுக்குப் போர்த்தச் செய்தது...

...ஸோமநாத் கடற்கரையில், உதயகாலத்தில், சுமார் இருநூறடி தூரத்தில், ஒரு நாகம் சிரம் தூக்கி மேற்கு முகமாகப் படமெடுத்து நின்றது. சூரிய பகவான் வெளிவரும் பிரகாசத்தில் படம் வெகு அழகாகவும் படத்தின் மத்தியில் பகவானின் திருநாமம், சங்கு சக்கரம் துலக்கமாகவும் தெரிந்தது. ஆதிசேஷனே வந்திருக்கிறார் என நிச்சயித்து, ஸ்ரீ லெக்ஷ்மணப் பெருமாளையும், ஸ்ரீ பலராமரையும் மனதில் துதித்து நமஸ்காரம் செய்தோம்...

...அபு மலையை மௌண்ட் அபு என்று வழங்குகிறார்கள். அங்கு வசிஷ்டர் ஆசிரமம் தரிசிக்கச் சென்றோம். ஸீஸன் டயம் தவிர மற்ற காலங்களில் அங்கு சென்று தரிசிப்பது சிரமம் என்று அங்கிருந்த காரியஸ்தர் தெரிவித்தார். ஆனாலும், சென்று தரிசிப்பதில் சுவாமி மிகவும் உறுதியாக இருந்தமையால், அவ்விதமே முடிவெடுக்கப்பட்டது. காரியஸ்தர் எங்கள் அனைவரின் விலாசங்களையும் எழுதி வாங்கிக்கொண்டார், அசம்பாவிதம் ஏதும் நிகழ்ந்துவிடும் பட்சத்தில் உற்றாருக்குத் தந்தி கொடுப்பதற்காக.

மிருகாதிகள் வாசம் செய்யும் இடமாதலால், வழித்துணைக்குத் தெரிந்தவர் ஒருவரை அனுப்புமாறு வேண்டிக்கொண்டோம்.

இவர் எதற்கு உடன் வருகிறார்?

என்று சுவாமி கேட்டபோது, ஒத்தாசைக்கும் பாதுகாவலுக்குமாக அவரைக் கூலிக்கு அழைத்து வருகிறோம் என்பதையோ, ஒரு ரூபாய் கூலி பேசப்பட்டது என்பதையோ சுவாமியிடம் நாங்கள் தெரிவிக்கவில்லை.

சுவாமிகளுக்குச் சரீரம் ஒரு பொருட்டில்லை. எங்களை மாதிரி சாமான்யர்களுக்கு அப்படியில்லையே. வெந்நீர் கிடைக்காத இடத்தில் ஸ்நானம் செய்ய முடியாமல் போகிறதே.

நாங்கள் பயந்தது சரிதான் என்பது கூடிய சீக்கிரமே தெரிந்துவிட்டது.

எழுநூற்றைம்பது படிகள் ஏறும்வரை ஏதொரு விசேஷமுமில்லை. மேற்கொண்டு மேலேறுகையில் அநேகப் பூச்சிகள், தேள்கள்,

நட்டுவாக்காலிகள் எறும்புவரிசை போல ஊர்ந்து சென்றன. சிறுகல்லும் விட்டெறியாது நின்று வேடிக்கை பார்த்தோம். பின்னர் இரண்டிரண்டு படியாகத் தாவி மேலே சென்றோம்...

...போகிற வழியில் ஓரிடத்தில் கண்டாமணிச் சப்தமும், சாம்பிராணி வாசனையும் வந்தன. சுவாமிகள் எங்களைத் தம்முடன் அழைத்தார். முழங்கால் வலி என்று காரணம் சொல்லி மறுத்துவிட்டோம். சுவாமிகள் மாத்திரம் சென்று தரிசித்து வந்தார். ஆன்றோர் வசிக்கும் இடம் அது என்று தெரிவித்தார். எங்களை அழைத்து வந்தவர்...

...அபு மலையில் ஜைனமத புத்தர் கோயில் இருக்கிறது. கொத்தனாருக்கு இரண்டணா எட்டுப் பைசாவும் சித்தாளுக்கு ஒரு அணா நாலு பைசாவும் கொடுத்து, தொளாயிரத்து ஐம்பது வருஷத்துக்கு முன்பு, பதினெட்டுக் கோடி ரூபாய் செலவு செய்து முழுவதும் சலவைக் கற்களால் கட்டியிருக்கிறார்கள். வேற்று மதஸ்தர்கள் உள்ளே சென்று பார்க்க, தலைக்கு மூன்றணா வீதம் டிக்கெட் வைத்து அனுமதிக்கிறார்கள்...

...சுவாமிகளுக்குப் பட்சமான பதார்த்தங்கள் என்றால், ஜிலேபியும், இடியாப்பமும். இதை அவர் சொல்லவில்லை. நாங்களாகக் கண்டறிந்தது. ஆனால், வடக்கே செல்லச் செல்ல, ஜிலேபிக்குப் பஞ்சமில்லை. நாம் ஊர் போல முழுத் தித்திப்பாய் இராது. சற்றே புளிப்புக் கலந்த தித்திப்பு என்றாலும், எங்கு சென்றாலும் கிடைக்கக்கூடியதாய் இருந்தது. இடியாப்பத்துக்குத்தான் வழியே இல்லாமல் போனது...

...சித்தபூர் மாதுர்கயா என்றவிடத்தில் ஒரு வாரம் தங்கியிருந்தோம். பிறகு ஆஜ்மீர் புஷ்கரம் போனோம். கஜேந்திரமோட்சம் நடந்த இடம். தெப்பத்தில் இருக்கும் முதலைகளுக்கு மூட்டைக்கணக்கில் பொரி வாங்கிப் போடுகிறார்கள். நாங்கள் இரண்டு மூட்டைகள் வாங்கிப் போட்டோம்...

...மத்ரா பிருந்தாவனத்தில் ஒரு வாரம் வரை இருந்து முக்கிய ஸ்தலங்கள் தரிசிக்கப்பட்டது. ஸ்ரீ குருக்ஷேத்திரம், ஆக்ரா, டெல்லி, ஹரித்துவார், நைமிசாரண்யம் ஆகிய இடங்கள் போனோம். நைமிசாரண்யத்திலிருந்து பன்னிரண்டு மைலுக்குள் இருக்கும் ததீசர் ஆசிரமம் சென்று வந்தோம்...

...கேதாரிநாத்தில் கடுமையான குளிர். ராத்திரி சுமார் எட்டு மணிக்கு ஒரு அறையிலிருந்துகொண்டு துவாரமொன்றில் தலை நீட்டிப் பார்த்தோம். வெள்ளிமலை போல இருந்தது. அதிகப் பனி தாங்க மாட்டாமல், சரீரத்தின் பேரில் பாடி, உல்லன் ஸ்வெட்டர், உல்லன் சட்டை,

வெய்ஸ்ட் கோட், டுவீட் கோட், உல்லன் போர்வை, தலைக்கு உல்லன் குரங்குக் குல்லாய் இவற்றுடன் ஒரு ரக், ரஜாய் ஆகிய பத்து உருப்படிகள் போட்டும், போர்த்திக்கொண்டும், குளிர் தாங்கவில்லை. ரூல்தடி பருமனும் நீளமுமுள்ள விறகு எட்டு கொண்ட முடிச்சு ஒன்று இரண்டரையணா வீதம் இரண்டு வாங்கி அக்னியில் போட்டு ராத்திரி பூராவும் அனலில் இருந்தோம்....

...ரிஷிகேசத்தில் ஒரு தர்மசாலையில் தங்கல். ஹோட்டலில் சாப்பாடு, பாசுமதி அரிசிச் சாதமும் ரொட்டியும் சேர்த்து, ஒரு வேளைச் சாப்பாட்டுக்கு ஒரு அணாதான். அளவில்லாத சாப்பாடு.

நான் கையில் நெய்யும் தயிரும் கொண்டுபோய்விடுவேன். ஹோட்டலில் நெய்யும் தயிரும் போடமாட்டார்கள்...

தேன் என்று கூடச் சொல்வதற்கில்லை. உஷ்ணக்கையால் உப்புப் போட்டுக் கரைக்கப்பட்ட தோசை மாவு. நொதித்து நுரைத்துக் கிடப்பது.

## அத்தியாயம். 34

பாதையோரம் நின்றிருந்தது அந்த மரம். தன்னில் தான் நிறைந்து, தன்னையன்றி வேறு எதுவும் யாரும் இல்லாத பாவனையில் அழுத்தமாக வீற்றிருக்கிறது. தீவிரமான யோசனை போலும். இலைகளிலும் கிளைகளிலும் சிறு அசைவும் இல்லை. காலங்காலமாகத் தனக்குள் சிந்தனையில் ஆழ்ந்திருக்கிறது. பட்டைகளைப் பற்றியேறி உச்சி வரை பாயும் அணில்கள் தன் அங்கங்களே என்பது போன்ற சாவகாசத்துடன் தாண்டிச் செல்லும் இரவுகளும், பகல்களும் தன் உடல் மீது ஆதிக்கம் செலுத்தலாமே தவிர, அவற்றால் தனக்கு ஒன்றுமில்லை என்று அறிவிக்கும் தன்னந் தனிமையுடன்.

மெல்லிய காற்று ஊதுகிறது. காற்று இருப்பதை அங்கீகரிப்பது போல லேசாகத் தலையசைக்கிறது மரம்.

திருவாரூரில் பிறந்தாப் புண்ணியம். சிதம்பரத்தில் சாமி கும்புட்டாப் புண்ணியம். காசியிலே செத்தாப் புண்ணியம். திருவண்ணாமலையை நினைச்சாலே புண்ணியங்க...

என்று சொல்லி அழைத்து வந்திருக்கிறாள் சிகப்பி. இதுமாதிரி வசனங்களும் பழமொழிகளும் எங்கிருந்துதான் அவளுக்குக் கிடைக்கின்றனவோ.

கிரிவலப் பாதையில் பருக்கைக் கற்களும், அங்கங்கே சரளைக் கற்களும் இறைந்து கிடக்கின்றன. கவனமாகப் பாதத்தையூன்றி நடக்கவேண்டியிருக்கிறது. அந்த ராட்சஸிக்கானால் எதுவுமே ஒன்றும் செய்வதில்லை. திமிசு போட்ட பாதையில் நடப்பது போல உற்சாகமாக நடக்கிறாள். இது என்றில்லை. யார் எது சொன்னாலும் அந்த வதைக்கு உடனடியாகத் தயாராகிவிடுகிறாள்.

> சமுத்திரத்தில் குளித்து ஈர உடையுடன் செந்திலாண்டவனை தரிசனம் பண்ணுங்க.

உடனே கிளம்பிவிடுகிறாள். எனக்கானால் ஈரநைப்பின் காரணமாக

உடம்பு மரத்துவிடுகிறது. பிறகு ஒரு வாரத்துக்கு ஜலதோஷம், காய்ச்சல் என்று அவதி.

> திருக்கருகாவூர்க் கோவிலை நாற்பத்தெட்டுப் பிரதட்சணம் செய்யுங்க.

அதிகபட்சம் பதினைந்து சுற்றுக்கள். அதற்கப்புறம் கால் கெஞ்ச ஆரம்பித்துவிடுகிறது. அவளானால், பிறந்ததிலிருந்து தினமும் நாற்பத்தெட்டுத் தடவை சுற்றுபவள்போல இயல்பாக நடக்கிறாள்.

> ஈர உடுப்போடு அங்கப்பிரதட்சணம் செய்யுங்க. அஞ்சு தடவை.

தலைக்கு மேலே கூப்பிய கைகளுடன் இலவ மெத்தையில் போல ஆனந்தமாய், ஊர் பார்க்க உருள்வாள்.

> ஸோமவாரத்தில் உபவாசம் இருந்தால் உடனடிப் பலன் தெரியும்.

எச்சில் கூட முழுங்காமல் பட்டினி கிடப்பாள். உடல் திராணியை விடவும், நம்பிக்கையின் பலம்தான் அடிப்படைக் காரணம் போல. அவள் அடிக்கடி சொல்வாள்:

> புத்திரபாக்கியம் இல்லேன்னா, அடுத்த சென்மத்திலே புத்ங்கிற நரகத்திலே தலைகீளாத் தொங்கணுமாம். பாத்துக்கோங்க.

இந்த ஜென்மத்தையே நரகமாகத்தான் கழிக்கிறாள்.

ஒரு கட்டத்தில், விரதம் இருக்காத நாளே கிடையாது என்றாகி விட்டது. ஞாயிற்றுக்கிழமை சூரியநாராயணர் விரதம். திங்கட்கிழமை சோமவார விரதம். வெள்ளிக்கிழமை சுக்கிரவார விரதம். சனிக்கிழமை சனீஸ்வர பகவானுக்கு விரதம். இதுபோக, பிரதோஷம், சதுர்த்தி, சஷ்டி, கார்த்திகை என்று வாரத்தில் புனிதமில்லாத நாளே கிடையாது என்கிறமாதிரி ஆனது.

எங்கிருந்துதான் இவ்வளவு சக்தி ஊறுகிறதோ. அவளுடைய உடல்வலுவை நினைத்தால் பயமாக இருக்கிறது. அதிகாலையில் எழுந்தது முதல் இரவு அடையும்வரை அவள் செய்துகொண்டேயிருக்கும் வேலையில் பாதிப்பங்கு கூட என்னால் செய்ய முடியாது. வீட்டிலிருந்து பொன்னமராவதியில் நூலகம்வரை சைக்கிள் அழுத்தினாலே மூச்சு வாங்குகிறது. சிகப்பியானால், கல்யாணமாகி வந்த நாள் முதல் இப்படித்தான். வேலை செய்துகொண்டே இருக்கிறாள். விடுமுறையே இல்லாத வேலை. பெண் என்பது சக்தி என்கிறார்களே, சரிதான் போலிருக்கிறது. ராட்சஸி... ராட்சஸி....

பாதையோரப் பாறையில் உட்கார்ந்தபோது முழங்கால் விண்விண்ணென்று தெறித்தது. வாஞ்சையுடன் கேட்டாள்.

என்ன, வண்டி தவங்கிருச்சு. முடியலையா ராசாவுக்கு. இன்னம் கொஞ்சம் தூரம்தானே. போயிக் கோயில்லே உக்காரலாம். எந்திரிங்க சாமீ. எங்க அய்யால்லே.

அவளுக்கு பதில் எதுவும் சொல்வதற்கு முன், அந்த ஆசாமி அருகில் வந்தார். சற்று முன்தான் கடந்து போனார் அவர்.

நகரத்தாரா நீங்க?

இதுபோன்ற இடங்களில் உண்டாகும் புதிய அறிமுகங்கள் சம்பந்தமாக எப்போதுமே தோன்றும் அவநம்பிக்கை இப்போதும் உண்டானது பழனியப்பனிடம். சிகப்பி உற்சாகமாகப் பதில் சொன்னாள்.

ஆமாங்கய்யா.

இளையாத்தங்குடிக் கோயிலாரா?

ஆமாங்க. இவுகளுக்கு இலுப்பைக்குடிக் கோயில்.

ஒம் பேரு மீனாட்சிதானேம்மா.

பழனியப்பனுக்கு மெல்ல ஆச்சரியம் எழுந்தது. ரொம்பப் பேருக்குத்தெரியாது - சிகப்பியின் அசல் பெயர் மீனாட்சி என்று. வந்தவரின் முகத்தில் பரிச்சயமான சாயல் எதுவும் இருக்கிறதா என்று ஆராய்ந்தார்.

தம்பி பேரு பழனியப்பனா?

ஆமாங்க.

ஊரு பூலாங்குறிச்சி.

சிகப்பியின் முகத்திலோ, குரலிலோ, வார்த்தைகளிலோ வியப்பின் சுவடுகூட இல்லை. வந்தவர் இன்னும் என்னவெல்லாம் தெரிந்து வைத்திருக்கிறார் என்று அறிவதற்கு ஆவலுற்றார் பழனியப்பன்.

அவர் கண்களை மூடிக்கொண்டார். மௌனமாக வலது கை விரலின் கணுக்களைக் கட்டைவிரலால் தொட்டு ஏதோ எண்ணிக்கை ஓட்டினார்.

அறிகுறிகள் நல்லா இருக்கம்மா. சரியாயிரும் எல்லாம்.

உட்கார்ந்திருந்த பழனியப்பன் எழுந்து நின்றார். இனி போகும் பாதை பழக்கமானதுதான். ஆறு மாதத்தில் குழந்தை பிறக்கும். பதினைந்து

கோயில்களில் விளக்குப் போடவேண்டும். அறுபத்தேழு நாட்கள் விரதம் இருக்கவேண்டும். ஐநூறு பேருக்கு அன்னதானம் செய்யவேண்டும். இந்தப் பைத்தியக்காரி எல்லாவற்றையும் செய்து முடிப்பாள். இந்த ஆள் ஐம்பத்தோரு ரூபாய் வாங்கிக்கொண்டு போய்ச் சேருவான். சலிப்பாக இருந்தது.

...அடேயப்பா. பெரிய கண்டத்துலேயிருந்துல்லே தப்பிச்சிருக்கீங்க.

என்னாங்கய்யா.

இன்னைக்கி நேரெப் பத்துநாளைக்குள்ளே ஸர்ப்பம் தட்டுப் பட்டிருக்கணுமே.

பழனியப்பனுக்குத் தூக்கிவாரிப் போட்டது. நல்லவேளை, அந்தச் சமயம் பால்கார கோவாலு வந்திருந்தான். என்னமாய்ச் சீறியது அது. ஒரு பாகம் நீளமிருக்கும்.

உன் வீட்டுக்காரருக்கு வச்ச குறிதான் அது. குன்னக்குடியான் காப்பாத்திட்டான். மாங்கல்யபலம் ஜாஸ்தியம்மா உனக்கு.

சிகப்பி தன் கழுத்துருவை எடுத்துக் கண்களில் ஒத்திக்கொண்டாள். அவர் மறுபடி கண்களை மூடிக்கொண்டார்.

ஒங்க அப்பாவுக்கு ரெண்டுதாரம். இல்லியா.

ஆமாங்க. எங்க ஆத்தா நான் பொறந்ததுமே தவறிப்போச்சாம்.

ஒங்க சின்னம்மாதான் வெனை வச்சுருக்காங்க. வெனையை ஏவினது ஒரு கெழவி. ஆனா, எல்லாம் விலகுற காலம் வந்தாச்சு.

முருகா...

சிகப்பியிடமிருந்து தீனமான அழைப்பு எழுந்தது. பொங்கிய கண்களைச் சேலை முந்தானையால் துடைத்துக்கொண்டாள்.

தெய்வ அனுகூலம் இருக்கம்மா. தைரியமாப் பொறப்புட்டுப் போங்க. ரெண்டு கொழந்தை உண்டு ஒங்களுக்கு. ரெண்டும் பொட்டைப் புள்ளை. தலைச்சனுக்குப் பார்வையிலே கோளாறு இருக்கும். சஸ்திரம் பண்ணிச் சரியாக்குவீங்க.

சிகப்பி அவருடைய காலில் விழுந்து நமஸ்கரித்தாள்.

அய்யா, நல்ல வார்த்தை சொல்லி என் வவுத்திலே பால் வாத்தீக. இவுகதான் ரொம்பச் சடைச்சிக்கிறாகய்யா. இப்படிக் கோயில் கோயிலா அலைய வுடுறியேன்னு.

இப்பொ அப்பிடித்தான். பிற்பாடு, உன்னை மாதிரி ரெண்டு பங்கு அலைவார் பாரு.

அய்யாவுக யாருன்னு சொல்லலியே.

அவர் சிரித்தார். பிரியமான சிரிப்பு.

என்னைப் பிச்சாண்டின்னு கூப்புடுவாங்கம்மா.

ஊருங்க?

கோயம்புத்தூர்ப் பக்கம். சவுண்டிப் பிராமணன்ம்மா நானு. உங்களைத் தாண்டிப் போனேன். உங்களுக்குச் சொல்ல உத்தரவு வந்துச்சு. அதான் திரும்பினேன்.

உங்க விலாசம் குடுங்கய்யா.

அதெல்லாம் எதுக்கம்மா.

ஒரு கஸ்டநஸ்டம்னா வந்து விசாரிச்சுட்டுப் போறதுக்குத்தான்.

நீ என்னை வந்து பார்க்க முடியாதம்மா. உனக்கு எப்பொத் தேவையோ அப்ப எனக்கே உத்தரவு கிடைக்கும். நான் இல்லாட்டா, என்னை மாதிரி இன்னொருத்தர் வந்துட்டுப் போறாரு.

அவர் மறுபடியும் சிரித்தார். வயது ஒரு அறுபது இருக்கலாம். முகத்தில் அங்கங்கே அம்மைத் தழும்புகள் இருந்தன. பள்ளத்துக்குள் இருந்த கண்கள் சற்று மாறுகண்ணாக இருந்தன.

இங்கே குள்ளச்சித்தர் மடம்னு இருக்கு. தினசரி அன்னதானம் உண்டு. சாப்பிட்டுட்டுப் போங்க. நான் வரட்டுமா.

அய்யாவுக்குத் தச்சணெ?

அட நீ வேறே. இதெல்லாம் ஒரு கைங்கரியம் அம்மா. காசு வாங்கப் படாது. சரி, வரேன்.

அவர் விலகி நடந்தார். அவர் பணம் எதுவும் கேட்காமல் போனதில் தனக்கு ஏன் இவ்வளவு ஏமாற்றம் என்று எண்ணிக் கொண்டார் பழனியப்பன்.

## அத்தியாயம். 35

கும்பகோணத்திலிருந்து மாயவரம் செல்லும் சாலையில் சீர்காழி தாண்டியதும் கொஞ்ச தூரத்தில் வலதுபுறம் திரும்பிச் செல்லும் வண்டிப் பாதையில் கால் மணிநேரம் நடந்தால் வந்துவிடுகிறது இரட்டைப்புலி கிராமம். ஊரின் எல்லையைத் தொடுவதற்கு வெகு முன்னமே கைலாச நாதர் கோயிலின் வானுயர்ந்த கோபுரம் தென்பட்டுவிடுகிறது.

ஹாலாஸ்யம் அந்த ஊருக்குள் நுழையும்போது, பொழுது நன்றாகப் புலர்ந்திருந்தது. கோயில் மதிலின் காவி வெள்ளைப் பட்டைகள் கடவுளைச் சிறையில் அடைத்திருக்கிறார்கள் என்ற சித்திரத்தை உருவாக்கின. உட்பிராகாரத்திலிருந்து உள்ளூர் நாதசுரத்தின் இசையொலி மதிற்சுவரைத் தாண்டிப் பொங்கி வழிந்தது. சக்கனி ராஜ மார்க்கமு...

செம்மண் பாதையில் ஹாலாஸ்யம் நிதானமாக நடந்தார். தெளிவான முகவரி கையில் இருக்கிறது. நீலகண்டன் முகவரியும் கொடுத்து,

கைச் செலவுக்கு வெச்சுக்கோங்க...

என்று கொஞ்சம் பணமும் கொடுத்திருந்தார். குள்ளச் சித்தனின் ஆன்மா உடனிருந்து வழி நடத்துகிறது என்று எண்ணிக்கொண்டார் ஹாலாஸ்யம்.... இளந் தூறலில் நடப்பது கால்களுக்கும் மனதுக்கும் இதமாக இருந்தது.

தாயாரம்மாங்குறது...

நாந்தான். வாங்க உக்காருங்க. எஞ்சருந்து வர்றீங்க?

மதுரையிலேயிருந்து.

சொல்லுங்க.

சித்தர் பத்தி ஒங்ககிட்ட கொஞ்சம் கேக்கலாம்னு...

மதுரையில் வக்கீலய்யா இருக்காரே, வண்டியூர்த் தெப்பத்துக்குப்

பக்கத்திலே மடத்துலே. அவர்கிட்டே கேட்டா ஏகப்பட்டது சொல்வாரே.

சொன்னார். உங்களையும் பாக்கச் சொன்னார்.

என்ன சாப்பிடறீக?

செத்தெ நேரம் போகட்டும்.

இருங்க. வர்றேன்...

அந்த அம்மாள் எழுந்து உள்ளே போனார்.

வயது எழுபத்திச் சொச்சம் இருக்கும். பஞ்சாக நரைத்த தலை. நெற்றியில் இடைவெளி தெரியாத அளவு அடர்ந்த விபூதி. தாட்டியமான உருவம். ரவிக்கை அணியாத தோள்களில் பேரீச்சம்பழம் போலச் சருமம் சுருங்கியிருந்தது. கும்மட்டி அடுப்பின் மணம் எழுந்தது வீட்டிற்குள்ளிருந்து. கால் மணி நேரம் கழித்து, கையில் காப்பித் தம்ளருடன் திரும்பினார்.

பிறகு மடை திறந்தது.

**...அ**ய்யா, சித்தனாரைப் பற்றிக் கேட்கவேண்டும் என்றுதானே வந்திருக்கிறீர்கள்? சொல்கிறேன். அவ்வளவையும் சொல்கிறேன். எனக்கும் யாரிடமாவது சொல்லவேண்டும் என்று பொங்கத்தான் செய்கிறது. யாருக்காக நான் அத்தனை துயரம் அடைந்தேனோ, யாருக்காக சித்தனார் தன் வலிமையைப் பிரயோகம் பண்ணினாரோ, அவளைப் புதைத்த இடத்தில் புல் முளைத்துவிட்டது. வாரிசு இல்லாமல் மாண்டுபோனாள் அவள். தெரிந்தோ தெரியாமலோ அவள் ஈடுபட்டதற்குச் சித்தனார் கொடுத்த தண்டனையோ என்னவோ என்று தோன்றுகிறது இப்போது. பின்னோடேயே அவள் புருஷனும் போய்ச் சேர்ந்துவிட்டான். பிறகு சொல்வதற்கென்ன...

சந்நதம் வந்ததுபோலக் குரல் திமிறித் திமிறி உயர்ந்துகொண்டே போனது. முப்பத்தைந்து வருஷத்துக்கு முந்தின சம்பவங்களைச் சொல்பவர் போலின்றி, நடக்கும்போதே அறிவிப்பவர் போலப் பேசினார்.

ஒரு பகல் முழுக்கத் தேவைப்பட்டது அவருக்கு. அன்று முழுவதும் உன்மத்தம் பிடித்தவர் போல இருந்தார். குழந்தை போலக் கடகடகடவெனச் சிரிப்பார். குமுறிக் குமுறி அழுவார். திடீரென்று மௌனத்தில் ஆழ்ந்துவிடுவார். அப்போது அவர் முகத்தில் மிகத்

தீவிரமான சாந்தம் குடிகொண்டுவிடும். விழிகள் நிலைகுத்தி ஒரே இடத்தைப் பார்த்தவாறிருக்கும். சடாரெனப் பேசத் தொடங்குவார். பேச்சினூடே அவரது பழுத்த உடல் சிலிர்க்கும். ஆண் கைபோல முன்னங்கையில் அடர்ந்த ரோமங்கள் குத்திட்டு விடும்.

ஆலமரத்தடியில் அவரைப் பார்த்துவிட்டு வந்தேனோ, வெயிலில் நடந்து வந்த கிறக்கத்தில் படுத்து உறங்கிவிட்டேன். எழுந்தபோது நன்றாக இருட்டிவிட்டிருந்தது. இந்தப் பெண் எங்கே போனாள், விளக்கைக்கூட ஏற்றாமல் என்று ஆச்சரியப்பட்டபடி வீட்டின் பின்புறம் போனேன். கைலாசநாதர் கோயிலிலிருந்து சாயரட்சை பூஜை மணி ஓங்காரமாய்க் கிளம்பியது.

அருந்தவம் கிணற்றடியில் இருந்தாள். இரண்டு உள்ளங்கைகளிலும் மோவாய்க் கட்டையை ஏந்தி, கைலாசநாதர் கோயில் கோபுரத்தை வெறித்துக்கொண்டு துவைகல்லில் உட்கார்ந்திருந்தாள். பெற்ற வயிறு பற்றியெரிந்தது எனக்கு.

மறுநாள் பொழுது விடிந்தபோது, எனக்காக ஒரு அற்புதம் நிகழ ஆரம்பித்திருந்தது.

வாசல் தெளித்துக் கொண்டிருக்கிறேன். குளத்துக்கு நீர் சேந்தப் போகும் பெண்கள் பேசிக்கொண்டு போகிறார்கள்.

கொஞ்சம் பொறுங்கள், நானும் வந்துவிடுகிறேன்.

என்கிறேன். அவர்கள் கவனிக்காதது போலப் போகிறார்கள். மனம் கூசுகிறது எனக்கு. அவர்களுக்கு எப்படியோ என் ரகசியம் தெரிந்துவிட்டது என்று பதறுகிறது.

குளித்துவிட்டு, சுவாமியைப் பார்த்துவிட்டு வரலாம் என்று போகிறேன். கோடிசங்கரக் குருக்கள் எதிரில் வருகிறார். அவர்மேல் பட்டுவிடலாகாதே என்று விலகுகிறேன். எனக்குப் பின்னால் நேர் கோட்டில் வந்துகொண்டிருக்கும் நாயைக் கண்டு அவர் ஒதுங்குகிறார். நான் இருப்பது தெரியாதவர் போல நேராக என்னை நோக்கி வருகிறார். நான்,

சாமீ... சாமீ.

என்று உரக்கச் சப்தமிட்டவாறு இன்னும் ஒதுங்குகிறேன்.

குருக்கள் என் மேல் மோதுவது தெரியாமல் தொடர்கிறார். எனக்குள் புகுந்து என் முதுகுப் புறமாக வெளியேறுகிறார். மூச்சடைத்துவிட்டது

எனக்கு. நான் வெறும் புகையாகிவிட்டதாக உணர்ந்தேன்.

கோயிலுக்குப் போகாமல் வீட்டை நோக்கித் திரும்பி ஓடினேன். அருந்தவம், தன் தரப்புக்கு ஒரு கதை வைத்திருந்தாள் - எனக்குச் சொல்ல. இரட்டைப்புலி கிராமத்தின் எல்லா அம்சங்களும் எனக்கும் என் மகளுக்கும் நிஜமாக இருக்கின்றன. நாங்கள் மட்டும் கிராமத்திலிருந்தவாறே, கிராமத்தில் இல்லாமல் போய்விட்டோம்.

என்ன அய்யா, பிரமிப்பாக இருக்கிறதா? இன்னும் ஆரம்பிக்கவே இல்லை. அதற்குள் கண் சொருகுகிறதே உங்களுக்கு? மோர் கொண்டுவரட்டுமா?

தாயாரம்மாள் எழுந்து உள்ளே போனார். இந்த அம்மாளைத் தேடிவந்தது சரிதானா, இவள் சித்த சுவாதீனம் உள்ளவள்தானா. வக்கீல் நீலகண்டன் என்னை நையாண்டி செய்வதற்காக இங்கு அனுப்பியிருக்கிறாரா என்பது போன்ற எண்ணங்கள் எனக்குள் ஓடின. அந்தி மெல்லக் கனத்து வருகிறது. இன்று இரவு இங்குதான் தங்கியாக வேண்டும். அந்த அம்மாள் கையில் மோர்த் தம்ளருடன் வந்து எதிர்த் திண்ணையில் அமர்ந்தாள்.

அய்யா, உங்களால் நம்ப முடியவில்லை என்பது தெரிகிறது. தனக்கு நடந்ததாக வேறு யாராவது சொல்லியிருந்தால் நானுமே நம்பியிருக்க மாட்டேன். அதனால்தான் இதுவரையில் யாரிடமுமே சொன்னதில்லை. வக்கீலய்யாவிடம் கூட ஓரளவுதான் சொல்லியிருக்கிறேன். சென்னகேசவ முதலியார்கிட்டே கிட்டத்தட்டச் சொல்ல ஆரம்பித்துவிட்டேன். பிறகு சுதாரித்துக்கொண்டேன். முதலியார் எவ்வளவோ வற்புறுத்திக் கேட்டார். சொல்லவில்லை.

உங்களிடம் சொல்வதற்குக் காரணம் இருக்கிறது. நீங்கள் சித்தனார் பற்றிப் புஸ்தகம் எழுதப் போகிறேன் என்கிறீர்கள். இதையெல்லாம் நம்புகிறீர்களோ இல்லையோ, எழுதிவிடுவீர்கள், இல்லையா.

சித்தனார் புகழ் சர்க்கார் தஸ்தாவேஜு போலப் பதிவாகி இருக்கவேண்டும் என்பதற்காகத்தான் நடந்தது எதையுமே மறைக்காமலும், குறைக்காமலும் சொல்லுகிறேன். நாமெல்லாம் மனுஷ்யர்கள். நம்மால் எதைச் செய்ய முடியுமோ, அதைத்தான் மற்றவர்களாலும் செய்ய முடியும் என்று நம்பக் கூடியவர்கள். சித்தனார் சாமான்ய மனுஷ்யர் அல்ல. மஹா மனுஷ்யன்...

உங்கள் வார்த்தையில் நம்பிக்கையில்லாமல் இல்லை அம்மா. நீங்கள் சொல்லுங்கள். ஆமாம், யாரோ முதலியார் ஒருவர் பெயர்

சொன்னீர்கள்....

பிறகு சொல்கிறேன், அவரைப் பற்றி. சித்தனாரைப் பற்றிப் பேசும்போது கோர்வை விட்டுவிட வேண்டாம் என்று பார்க்கிறேன்.

மேலே சொல்லுங்கள்.

**...அ**ருந்தவம் என்னைவிட இரண்டு பங்கு பதட்டமாக இருந்தாள்.

அம்மா, அரிசிப் பானையை வந்து பாரேன்.

கோயில் வாசலில் பூக்கட்டி விற்பவள் வீட்டில் அரிசி போடக் குதிரா இருக்கும். ஒரு சிறு மண்பானையில் அன்றன்றைக்காக அரிசி வாங்கி வைப்பது வழக்கம். அன்று உலை வைப்பதற்காக அருந்தவம் எடுத்தது போக ஒரு ஆழாக்கு அரிசிதான் மீதமிருந்திருக்கவேண்டும். அரிசிப்பானையானால் நிரம்பி வழிகிறது.

அவசர அவசரமாக அஞ்சறைப் பெட்டி, குழம்புப் பொடி வைத்த தகர டப்பா, ஊறுகாய் இருக்கும் பீங்கான் மங்கு, புளி வைத்த கல்ச்சட்டி என்று ஒவ்வொன்றாகத் திறந்து பார்க்கிறேன். எல்லாமே நிரம்பி இருக்கிறது.

சித்தனார் என் வீட்டை அட்சயபாத்திரமாக மாற்றிவிட்டார் என்பது புரிந்தது. ஆலமரத்தடி, ஊர்மந்தை, சத்திரத்திண்ணை என்று ஊர் முழுக்கப் பிச்சி போல ஓடினேன். எங்குமே இல்லை அவர். துக்கம் பொங்கியது எனக்கு. அருந்தவத்தை இறுகக் கட்டிக்கொண்டு அழுதேன்.

என் கண்ணே. இத்தனை வருஷம் கைலாசநாதனுக்குப் புஸ்பம் கட்டின புண்ணியம் வீணாய்ப் போகவில்லை.

மாசிமகம் அன்றைக்கு. எந்த வருஷம் தெரியுமா? வடக்கே ஏதோ ஒரு ஊரிலே ஜனங்களை வெள்ளைக்காரன் கூட்டங் கூட்டமாகக் கொன்று கிணற்றிலே போட்டானாமே, அந்த வருஷம். என்ன அப்படிப் பார்க்கிறீர்கள். நான் தற்குறி, படிக்காதவள். முதலியார்தான் அந்தப் படுகொலையைப் பற்றி ஆவேசமாகப் பேசினார். அது நடந்து ஒரு வருஷம் ஆனபிறகு, பழனியில் அவரைப் பார்த்தேனே, பழனியிலிருந்து மதுரைக்குப் போனபோது சொல்லிக்கொண்டு வந்தார்.

ஆச்சு, அன்னைக்கி மாசி மகமா? மத்தியானம் மூணு மூணரை மணி இருக்கும். அருந்தவம் இடுப்பைப் பிடித்துக்கொண்டு புரள ஆரம்பித்தாள். நோவு கண்டுவிட்டது. இரண்டே நாழிகைகள்தான். சுகப் பிரசவம். சொர்ண விக்கிரகம் மாதிரிக் குழந்தை பிறந்துவிட்டது. வலது

தொடையில் ஓட்டைக் காலணா அளவு கருமச்சம். நல்ல அகலமான கண்களைத் திறந்து மலங்க மலங்கப் பார்க்கிறது. ஏதோ அதிசயத்தைப் பார்க்கிற மாதிரி. தானே ஒரு அதிசயம் என்று அதற்குத் தெரியுமா என்ன?

அருந்தவம் கண்களை மூடிப் படுத்திருந்தாள். பிரசவ அறையின் நெடியும், அழுந்தக் கடித்ததனால் சிவந்த அருந்தவத்தின் உதடுகளும், குழந்தையின் பஞ்சுச் சதையும்… அப்பப்பா, இப்போது போல இருக்கிறது.

அய்யா, முப்பத்தைந்து வருஷம் ஓடிவிட்டது. அந்த நாளின் ஒவ்வொரு க்ஷணமும், இதோ, இப்போது நடந்து கொண்டிருக்கிறது. அந்த நாளில் நான் இருந்தேன் என்பதால் என் பார்வைக்குத் தெரிகிறது. உங்களுக்குத் தெரிய நியாயமில்லை. நாம் இல்லாத இடத்தைப் பற்றி, என்னதான் விளக்கமாய் எடுத்துச் சொன்னாலும், நிஜம் போல வருமா அய்யா.

குழந்தையைக் குளிப்பாட்டத் தயார் செய்து வைத்திருந்த வெந்நீர்ப் பானையை எடுத்து வரப் போனேன், புழக்கடைக் பக்கம். சித்தனார் சித்தம் வேறுமாதிரியல்லவா இருந்தது.

வெந்நீர்ப் பானையுடன் திரும்பி வருகிறேன். அருந்தவம் தூங்கி விழித்தவள் மாதிரிப் படுத்திருந்தாள். பக்கத்தில் இருந்த குழந்தையைக் காணோம்.

குழந்தை எங்கேடி?

என்னம்மா, கனாக் கினா கண்டாயா? என்ன, குழந்தை அது இது என்கிறாய்?

எனக்குத் தூக்கிவாரிப் போட்டது. உங்களிடம் வெட்கத்தை விட்டுச் சொல்கிறேன். அவள் புடவையை இடுப்புவரை சடாரென்று வழித்து உயர்த்தினேன். அருந்தவம் கூச்சலிட்டாள்.

ஏ கூறுகெட்ட அம்மா. என்ன செய்கிறாய்?

அய்யா, இப்போது சொல்லும்போதும் உடம்பு பதறுகிறது. குழந்தை இருந்து வெளியேறியதற்கான வரிக்கோடுகள் ஒன்றுகூட இல்லை அவள் அடிவயிற்றில்.

என் மகளைக் கன்னியாகத் திருப்பிக் கொடுத்துவிட்ட சித்தனாரைத் தேடி ஊர்முழுக்க ஓடினேன். ஆலமரத்தடியில் அன்று கண்ட அதே இடத்தில் இருந்தார். அவர் கால்களில் விழுந்தேன்.

அன்று சிரித்த அதே மாதிரி வயிறு குலுங்கச் சிரித்தார், சப்தமே கேட்காமல். இந்த முறை என்னால் சிரிக்க முடியவில்லை. என் உடம்பு முழுக்க உருகிக் கரைந்துவிடும்படி அழுதுகொண்டே இருக்கவேண்டும் என்றுதான் இருந்தது. அவருடைய காலைக் கட்டிக்கொண்டு ரொம்ப நேரம் அழுதுகொண்டிருந்தேன்.

வீட்டுக்கு வந்தேன். வீடு பழைய வீடாக மாறிவிட்டிருந்தது உள்ளுணர்வுக்குத் தெரிந்தது. மறுநாள் வழக்கம்போலப் பூக் குடலையுடன் கோயில் வாசலுக்குச் சென்றேன். யாருக்கும் எந்தக் கேள்வியும் இல்லை. நான் உலகின் கண்ணிலிருந்து மறைக்க ஆசைப்பட்ட ஏழுமாதங்களும், நிஜமாகவே மறைந்துவிட்டன.

இரட்டைப்புலி கிராமத்தின் ஞாபகத்திலிருந்தே, என்னையும் என் மகளையும் மறைத்து வைத்திருந்திருக்கிறார் சித்தனார்.

அவருடைய மகிமையைச் சொல்ல ஒரு பிறவி போதாது அய்யா...

அந்த அம்மாளிடமிருந்து ஒரு நீண்ட பெருமூச்சு வெளியேறியது. கண்கள் கலங்கிச் சிவந்திருந்தன. ஹாலாஸ்யம் முகத்தை அழுந்தத் துடைத்துக்கொண்டார்.

> இப்போ நினைச்சுப் பார்க்கும்போது ஏதோ கனாக் கண்ட மாதிரி இருக்குய்யா. வேற ஒர்த்தரோட கனாவெ நான் கண்ட மாதிரி...

‘எனக்கும் அப்படித்தானம்மா இருக்கு’, என்று நினைத்துக் கொண்டார் ஹாலாஸ்யம்.

> அத்தனை பேர் ஞாபகத்திலிருந்தும் அழிச்சவர் என்னுடைய ஞாபகத்திலே மட்டும் ஏன் விட்டு வைச்சார்ங்குறதுதான் பெரிய ஆச்சரியம்.

என்று சொன்னார் தாயாரம்மாள்.

காலையில், குளித்துச் சாப்பிட்டுவிட்டுத்தான் போக வேண்டும் என்று வற்புறுத்தினார்.

> விலக்குரோடு வரை வந்து பஸ்ஸேத்தி வுடுறேனே.

என்று கூட வந்தார். நடையில் கொஞ்சமும் தளர்ச்சியில்லை. ‘அனுபவத்தின் அமிர்தத்தை ருசித்தவர்’ என்று தோன்றியது ஹாலாஸ்யத்துக்கு.

தார்ச் சாலையிலிருந்து விலகி இறங்கிச் செல்லும் ஒற்றையடிப்

பாதையின் முடிவில் ஒரு சிறு மேடை தென்பட்டது. அதன்மேல் சிமெண்ட்டில் கட்டிய சிறு கூடு போன்ற அமைப்புக்குள் ஒரு அகல் எரிந்து கொண்டிருப்பது தெரிந்தது.

இஞ்சதான் அவரு அடக்கமாயிருக்காரு.

என்றார் தாயாரம்மாள்.

அப்படியா!

ஆமா. அருந்தவத்துக்குக் கொழந்தை பொறந்து ஒரு வாரம்தான் இருந்தாரு. ஒரு நாள் காலையிலே அவருக்குச் சாப்பாடு எடுத்துட்டுப் போறேன். எந் தெய்வம் பொணமாக் கிடந்தது. ஊரறிய அழக்கூட முடியலை அய்யா இந்தப் பாவிக்கு. சுயநலம் தான். யாரோ ஒரு கிறுக்கன் செத்ததுக்குத் தாயாரு ஏன் இப்படிக் கதறுறான்னு ஒருத்தருக்குச் சந்தேகம் வந்தாலும் போதுமே, மொத்தக் கதையும் வெளியே வந்துருமே.

தாயாரம்மாளின் குரல் கமறியது. நின்றுவிட்டார். கண்கள் ததும்பி நிறைந்திருந்தன. ஹாலாஸ்யம் அந்த அம்மாளின் முதுகைத் தொட்டு வருடினார். அந்த அம்மாள் புலம்பும் தொனியில் தொடர்ந்து சொன்னாள்:

ஊர்லே எல்லாரும் கூடி கோவிந்தாக் கொள்ளி போட்டுறலாம்னு பேசினாங்க. ஆளாளுக்கு அனாதைப் பொணம் அநாதைப் பொணம்னு பேசப் பேச எனக்கு அளுகை முட்டுது. மட்டியைக் கடிச்சு அடக்கிட்டு நின்னேன். அப்புறம் கொள்ளி யாரு வைக்கிறதுன்னு பிரச்சனையாயி, பொதைச்சிறலாம்னு முடிவெடுத்தாங்க. அவுரு இன்ன சாதின்னு தெரியாததாலே இடுகாட்டுலே அடக்கம் பண்ண மாட்டாங்களாம். பொறம்போக்குலேதான் பொதைச்சது. நானும் ஒரு கை மண்ணு தள்ளினேன். இப்பொத்தான் ஒரு பத்து வருஷமாச் சின்ன மேடை கட்டி, தினசரி காலையிலே அகல்விளக்கு ஏத்துறேன். என் வயசு ஆளுகல்லாம் போய்ச் சேர்ந்துட்டாங்க. கெழவி என்னமோ செய்யுறான்னு யாரும் கண்டுக்கிர்றதில்லே.

தொலைவில் பஸ் வருவது தட்டுப்பட்டது. திடீரென்று ஞாபகம் வந்தவர் போல,

சென்ன கேசவ முதலியார் விலாசம் பத்திரமாய் இருக்குல்லே,

என்றார்.

இருக்கம்மா.

எதையோ சொல்ல முனைந்து முனைந்து தயங்குகிற மாதிரி இருந்தது அவரது முகம்.

ஏதோ சொல்ல நினைக்கிறீங்க போலிருக்கே.

அது... அது... அது... ஒண்ணுமில்லே. அங்கெ... அதான் படப்பைக்கிப் போனீங்கன்னா... அதான் முதலியார் வீட்டுக்கு... என் பேரனை விசாரிச்சேன்னு சொல்லுங்க...

உங்க பேரனா... யாரு... என்ன பேரு?

அதுதான் தெரியாதேய்யா...

எதையோ நினைத்துக்கொண்டவர்போல,

விட்டுருங்கய்யா. தெரியாம உளறீட்டேன். வயசாயிருச்சுல்ல. கெழவிதானே. புத்தி பெரண்டுருச்சு. மறந்துருங்கய்யா. நான் கேட்டதை உதறிடுங்க...

என்று என் கைகளிரண்டையும் பிடித்துக்கொண்டார்.

புழுதியைக் கிளப்பியபடி பஸ் வந்து நின்றது.

# அத்தியாயம். 36

ஆலாஸ்யம், குமுளி போயிருக்கிறீரா?

போயிருக்கிறேன்.

இப்போது எங்கேயிருக்கிறீர்?

புரியவில்லை.

இந்தக் கணத்தில் எங்கே இருக்கிறீர் என்கிறேன்.

பெரியகுளத்தில், நாயக்கர் தெருவில், உங்கள் முன்னால்.

குமுளி பஸ் ஸ்டாண்ட் ஞாபகம் இருக்கிறதா?

ஆஹா.

நீர் ஆஹா என்று சொல்லும்போது உம்முடைய அகக் கண்ணில் அந்த பஸ் ஸ்டாண்டைப் பார்த்தீரா இல்லையா?

தாங்கள் சொல்ல வருவது விளங்கவில்லை.

அதுதான் ஓய். முந்தின பிறவிகளும் அப்படித்தான். ஒரு முறை அங்கே இருந்திருக்கிறோம் என்ற ஞாபகம் போதும். அந்த ஞாபகத்தை மீட்டு எடுத்துவிட்டால் திரும்பவும் அதை மனசில் கொண்டுவந்து துல்லியமாகப் பார்க்க முடியும்.

***

எல்லாரும், உடம்பு வெறும் சட்டைதான். ஆன்மாதான் அடிப்படையான சரீரம் என்பதாகச் சொல்கிறார்கள். நமக்கு அதில் உடன்பாடில்லை. ஆன்மாவும் வெறும் உள்ளாடைதான். அதற்கும் முந்தின ஆழ்நிலையொன்று இருக்கிறது. இது நமக்கு எப்படித் தெரியவந்தது தெரியுமா? ஒரு சந்தர்ப்பத்தில், ஒரே சமயம் நான்கு இடங்களில் நான்கு வெவ்வேறு நபர்களாய் இருந்தோம்.

***

பூர்வ ஜென்மத்துக்கு மனோ மார்க்கமாகப் பிரயாணம் செய்வது ரொம்பக் கஷ்டமான காரியம் என்று நினைக்கிறீர் அல்லவா? உண்மையில் அது அவ்வளவு கடினம் இல்லை. பின்புறமாகக் கைகளை ஊன்றி மதில் சுவரில் ஏறி உட்கார்வது போலத்தான். மதிலில் இருக்கும்போது மதில் தரையாகவும், தரை ஆழம் கொண்ட பள்ளமாகவும் ஆகிவிடுகிறதல்லவா? அதுமாதிரியே அனுபவமும் பிறழ்ந்துவிடும்.

***

புலியாகவும் பெங்குயின் பறவையாகவும் எடுத்த பிறவிகள் பற்றி நான் சொல்லும்போது, அந்தந்தப் பிறவிகளில் கொண்ட அனுபவத்தை மானுட பாஷையில் சொல்கிறேனே, அது எப்படி சாத்தியம் என்றுதானே நினைக்கிறீர்? நான் பெங்குயின் ஆக இருந்தபோது, சக பெங்குயின் கேட்டிருந்தால் பெங்குயின் பாஷையில் சொல்லியிருப்பேன். அவ்வளவுதான்.

மற்றபடி, ஞாபகங்களுக்கு பாஷை கிடையாது. பிறத்தியாருக்கோ, எனக்கு நானேவோ சொல்லத் தொடங்கும்போதுதான் பாஷை உற்பத்தியாகிறது. மௌனத்தில் ஊறும், தேங்கும் ஞாபகங்களுக்கு யாதொரு பாஷையும் கிடையாது. வெட்ட வெட்ட வளர்கிறதே நகம், அது தன் சரீரத்தின் ஞாபகத்தை எந்த பாஷையில் தேக்கிக்கொள்கிறது? நாய்க்கு மோப்ப சக்தி இருக்கிறதல்லவா? நாயின் ஞாபகம் வாசனையினாலானது.

***

ஒரு பிறவிக்கும் மற்றொன்றுக்குமான இடைவெளியில் எத்தனை காலம் இருந்தேன். எங்கேயிருந்தேன் என்ற கேள்விகளுக்கெல்லாம் பதில் சொல்ல முடியாது. காலம் நகர்வதை நாம் அறிவது வஸ்துக்களால். அல்லது உள்ளுணர்வால். வஸ்துக்களை அறிய தேகம் வேண்டும். உள்ளுணர்வு என்பது மனோதளத்தின் வெளிவிளிம்பு நிலை.

பிறவிகளின் இடைவெளி அல்லது இடைவேளையில் சரீரம் கிடையாது. சரீரத்தை உள்ளடக்கிய மனம் என்ற தாதுவும் கிடையாது. அதற்கும் முந்தின நிலையான, இருக்கிறேன் என்ற அனுபவம் மாத்திரம் இருக்கும். கால - வெளி அற்ற அனுபவம் அது. அல்லது, அந்த அனுபவத்தைக்

கொள்வதற்கு கால தேச வர்த்தமானங்கள் தேவையில்லை. மற்ற அனுபவங்கள் போல அந்த அனுபவம் சேர்வது அல்ல, இருப்பது.

***

இன்னொரு பிறவி எடுப்பது எதற்காக என்று கேள்வி எழுகிறதல்லவா? கர்ம பலன் காரணமாக, இறக்கும் தறுவாயில் தேங்கிவிடும் நிறைவேறாத ஆசை காரணமாக, பூமித்தளத்தில் இன்னும் செய்ய வேண்டிய கைங்கர்யம் பாக்கி இருக்கிறது என்று கிருபை தீர்மானித்துக் கட்டளை பிறப்பிப்பதால்... இன்னும் சொல்லிக்கொண்டே போகலாம்.

உயிர்த்தளத்தில் இனப்பெருக்கம் நடப்பது மாதிரி என்று வைத்துக்கொள்ளுமேன். ஒவ்வொரு உயிர்ப்பொருளும் தன்னுடைய பிரதியை உற்பத்தி செய்கிறது அல்லவா? அவரைக் கொடி, தன்னுடைய ஒட்டுமொத்த பிம்பத்தின் செய்தியை அவரைவிதை என்ற சிமிழுக்குள் பொதிந்து வைக்கிறதல்லவா? மண்ணும், சூரிய வெளிச்சமும், காற்றும், நீரும் சேர்ந்து அந்தச் செய்தியை வாசிக்கின்றன.

***

அடிப்படை அனுபவம் என்றுமே மாறாதது. ஆதிக் குகை மனிதனுக்கும், இன்றைக்கு உள்ள மனிதனுக்கும் பஞ்ச பூதங்களுடன் உள்ள அனுபவம் ஒன்றேதான். என்ன, அவனுக்கு நெருப்பை உண்டாக்கத் தெரியாது. இவனுக்கு அதை உண்டாக்கவும், பத்திரப்படுத்தவும், கையாளவும் தெரியும்.

மற்றபடி, சதையாலான சரீரத்தை நெருப்பு தீய்க்கும் என்பது என்றுமே மாறாது. அந்தந்தப் பிறவி சார்ந்து சிற்சில வித்தியாசங்கள் ஏற்படும்தான். கழுகு என்ற பிறவிக்குச் சாலையாகிவிடுகிற காற்று, மனிதனுக்கு ஆகாயமாகத் தெரிகிறது. ஆனால் சுவாசம் என்று வரும்போது, சகல ஜீவராசிகளுக்கும் வாயு பிராணனாகி விடுகிறது.

***

அன்றாடம் ஏதோ ஒரு நீர்நிலைக்கு வந்தாக வேண்டியிருக்கிறது பட்சிகளுக்கு. வரவும் செய்கின்றன. தாகம் தீர்ந்தவுடன், ஆகாயத்துக்கு மீண்டுவிடுகின்றன. ஆகாயம்தான் பட்சிகளின் இடம். கூடோ, கூட்டை அமைக்கும் சுள்ளிகளோ, கூட்டைத் தாங்கிய விருட்சமோ அல்ல.

***

ஒவ்வொரு பிறவிக்கும் அதற்கேயுரிய ஆதார குணங்கள் இருக்கின்றன. உதாரணமாக யானை என்ற, மகத்தான உடலுடைய, வலுவுடைய பிராணி, சாக பட்சிணியாக இருப்பதும்; சின்னஞ்சிறு பூச்சியான கொசு ரத்தத்தை உண்டு வாழ்வதும். இது, உயிர்த்தளத்தின் மீது இயற்கைக்கு இருக்கும் பகடியான அபிப்பிராயத்துக்குச் சான்று. ஆதார குணங்களிலிருந்து வழுவாமல் ஒரு ஜீவன் தன் ஆயுளைக் கழிக்குமானால், அதுதான் தியானம் தபஸ் எல்லாம். மண்புழுவைப் போல மகோன்னதமான முனி சிரேஷ்டனைப் பார்க்க முடியாது ஆலாஸ்யம்.

***

ஜென்மங்களை, எடுத்த வரிசையில் சொல்லவில்லை. உண்மையில் மனிதப்பிறவி உணரும் அதே கிரமத்தில் கால அமைப்பு கிடையாது. காலமற்ற வெளியில் இருந்துதான் பிற ஜென்மங்களைப் பற்றி ஏதேனும் சொல்ல இருக்கிறது. சில சமயம் தோன்றுகிறது, ஏற்கனவே எடுத்த பிறவிகளும், இனி வரவிருக்கும் பிறவிகளும் குழம்பிக் கிடக்கும் பிராந்தியத்தைத்தான் பார்வை கொள்கிறோமோ என்று.

தவிர, இந்தப் பிறவியில் மனிதனாக அல்லவோ இருக்கிறோம். மிதமிஞ்சிய விருப்புகளும், வெறுப்புகளும், அவை குறித்த ஆலோசனைகளும் இந்தப் பிறவியின் நியதி அல்லவா. நம் உவப்புப் பிரகாரம் சொல்லுகிறோம்.

***

பிற பிறவிகளில் நேர்ந்த அனுபவங்களும் மனித அனுபவங்களை ஒட்டியே இருக்கிறதே என்ற கேள்வி எழக்கூடும். ஒவ்வொரு ஜீவராசியின் வாழ்நிலையும் அந்தந்த அளவில் ஸ்தாபனங்கள்தாம். பிறத்தல், வளர்தல், இணைசேர்தல், இனம்பெருக்குதல், முதுமை கொள்ளல், மரித்தல் என்று எல்லா அளவீடுகளும் ஒன்றாக இருக்கும்போது, புலன் அனுபவமும், அதைச் சார்ந்த மனோ விகாரங்களும் மாத்திரம் எவ்விதம் மாறுபடும்?

என்ன, மனுஷ்ய ஜாதிக்கு, வார்த்தைகளாலான பாஷை என்ற பொது ஒப்பந்தம் இருக்கிறது. அனுபவங்களைக் குறிப்பிட்ட வார்த்தைகள் மூலம் பகிர்ந்துகொள்ள முடிகிறது. பிற ஜீவன்களுக்கு இந்த அமைப்பு

இல்லை. அவ்வளவுதான்.

கன்றைப் பறிகொடுத்த பசுவின் கண்களில் நீர்க்கோடு இறங்கிய வாறிருப்பதைப் பார்த்ததில்லையா நீர். அல்லது, தம் சகபாடியின் மரணத்தை ஊர்முழுக்கக் கதறி அறிவிக்கும் காக்கைகளைப் பார்த்ததில்லையா.

# அத்தியாயம். 37

அந்த அம்மாவை எப்பொ சந்திச்சீங்க?

அப்பிடிக் கேளுங்க. அது ஒரு பெரீய்ய கதை. இந்தப் பய கிடைச்சானா? எங்க வம்முசத்திலே தலைச்சங் குழந்தைக்கிப் பளனியிலே முடியிறக்குறதுதான் வழக்கம். ரெண்டாவது முடி, அருப்புக்கோட்டை பக்கத்திலே' புலியூரான்ங்கிற ஊர்லே.

முதல் முடியிறக்கீட்டு, நேரே மதுரை வந்து மீனாட்சி கோயில்லே, துர்க்கைக்கிப் பக்கத்திலே இருக்கிற சித்தருக்கு வஸ்திரம் சாத்திறணும். எங்க பரம்பரை ஐதீகம் இது. இதைச் செய்ஞ்சீட்டம்னா கொளந்தை ஆயுசு கெட்டிப்படும். இப்பொல்லாம், இங்கிலீஷ் வைத்தியம் வந்திருச்சே நெறைய்ய. எங்க காலத்துலே, மொதல் ரெண்டு மூணு வருசத்துக்கு புள்ள தங்குமா தங்காதான்னு ஒரு உத்தரவாதமும் கிடையாது. கடவுள் காப்பாத்திக் குடுத்தாத்தான் உண்டு.

மாசி மகத்தன்னைக்கிப் பளனியிலே இருக்கோம். முத்துராஜா சத்திரத்திலே ஜாகை. வெடிகாலைலே புள்ளையைத் தூக்கிட்டு மலையேறிட்டோம். அப்பொல்லாம் ராமாமிர்தம் வெடிப்பா இருப்பா. இடுப்பிலே புள்ளெயோட அவ ஏர்ற வேகத்துக்கு நம்மாலே ஈடு குடுக்க முடியாது.

பனிக்காலம் இன்னும் முடிஞ்சிருக்கலே. வெடிகாலைலே மலையேறும்போது, மலையைப் போர்த்தினாப்பலே மஞ்சு மூடியிருக்கு. ஆறு ஆறரைக்கெல்லாம் மேலே போயிட்டோம். மெல்ல வெய்யில் ஏறிக்கிட்டிருக்கு. யானைப்பாதை வழியாத்தான் ஏறி வந்திருந்தோம். ஆனாலும் முழங்காலெல்லாம் துவளுது. கொஞ்ச தூரம்தான் தோளிலே சுமந்து வந்திருந்தேன் பயலெ. தோள் பட்டை வலிக்குது.

மாலை மேலே கூட்டமான கூட்டம். முருகன் சந்நிதிலே கூட்டத்துக்குக் கேக்கணுமா. வருசம் பூராக் கொண்டாட்டம்தான், கோமணாண்டிக்கி. மாசி மகத்தன்னைக்கிக் கேக்கணுமா? அவ்வளவு பிரயாசைப்பட்டு அவ்வளவு கூட்டத்திலே நெரிபட்டு ஒரு நிமிசம் அவனைப் பாக்கக்

கிடைக்கும்போது உள்ளுக்குள்ளே எதுவோ கழண்டுர்ற மாதிரி இருக்குதா இல்லியா. நீங்க பளனி போயிருக்கீங்கல்லே.

போயிருக்கேன்.

சாமியை தரிசனம் செய்ஞ்சிட்டு வெளியே வர்றோம். போகர் சந்நிதித் திண்ணையிலே உக்காந்தோம். பையனுக்குப் புட்டிப்பால் குடுக்குறா அமிர்தம். சுத்திலும் சந்தனமும் விபூதியும் மணக்குது. வெளிப் பிராகாரத்திலே, மேளச்சத்தம் விடாமெக் கேக்குது. காவடிகள் சரஞ் சரமா மலையேறி வருதில்லே. அப்பொத்தான் அந்தம்மா வந்து எங்ககிட்டெ உக்காந்தது. அதான் நீங்க கேட்டீங்களே, தாயாரம்மா, அந்தம்மாதான்.

நெத்தி முழுக்க விபூதியை அப்பி, மத்தியிலே ஈரம் காயாத சந்தனம். தளர்ந்து போயி வந்து சேர்ந்தது. ராமாமிர்தம் கிட்டே பேச்சுக் குடுக்குது. அமிர்தத்துக்கு அன்னையிலேயிருந்து இன்னைய வரைக்கும் ஒரு வியாதி. ஒங்ககிட்டேச் சொன்னாளே, அந்தக் கதையெ, போறவுங்க வாரவுங்க அத்தனை பேர்ட்டெயும் சொல்வா. வார்த்தை விடாமச் சொல்வா. இதுவரைக்கும் ஆயிரந்தடவைக்கி மேலே சொல்லியிருப்பா. எம் மவனைக் கொஞ்சும்போது கூட,

நான் பெறாதெ பெத்த செல்வமே.

ன்னுதான் கொஞ்சுவா.

அந்தக் கதை முடியுறதுக்குள்ளே அந்தம்மாவும் இவளும் ரொம்ப அந்நியோன்னியமாயிட்டாங்க. கொழந்தையை அந்தம்மாகிட்டெக் குடுத்துட்டு பால் புட்டியைக் களுவப் போனா அமிர்தம்.

மடியிலே கிடக்கிற கொழந்தையைப் பாக்குது அந்தம்மா. பயலுக்கு வலதுதொடையிலே ஒரு பெரிய கருமச்சம் இருக்குதா. அதெக் காட்டிக் கேக்குது.

இது என்னாங்க?

மச்சம் மா.

பொறந்ததிலேர்ந்து இருக்கோ.

ஆமாம்மா.

இவன் கிடைச்சது எப்போன்னது ஒங்க பெஞ்சாதி?

போன வருசம் மாசி மகம்.

என்னா நேரம் இருக்கும்?

என்ன, மதியம் ஒரு மூணு மூணரை இருக்கும். அதுக்கென்ன இப்பொ.

அந்தம்மாவுக்குப் பொல்லுன்னு வேர்த்திருச்சு. கையெல்லாம் நடுங்குது. கொழந்தையை நெஞ்சோட அணைச்சுக்கிச்சு. அதுக்குள்ளே அமிர்தம் வந்துட்டா. கொழந்தையை வாங்கிக்கிட்டா. அந்தம்மா ஒரு தூண்லே சாய்ஞ்சி உக்காந்தது. கண்ணு மூடிக் கிடக்கு. மாலை மாலையாக் கண்ணீர் வழியுது.

கோயிலை வலம் பண்ணப் போயிருந்த அந்தம்மாவோட பொண்ணும் மாப்பிள்ளையும் வந்தாங்க. அந்தப் பொண்ணு பேரு கொஞ்சம் வித்தியாசமானது, அருந்தவம்னு பேரு.

எல்லாரும் ஒண்ணா மலையிறங்கி முத்துராஜா சத்திரத்துக்கு வந்தோம். அந்தம்மா மகளையும் மருமகனையும் ஊருக்குப் போகச் சொல்லிருச்சு. எங்களோட மதுரைக்கி வந்து மீனாட்சியைப் பாத்துட்டு அங்கேயிருந்து தஞ்சாவூருக்குப் பஸ்ஸேறிக்கிர்றேன்னிருச்சு. இந்தப் பய தம்பித்தொரைய,

எம் பேராண்டி... பேராண்டி.

ன்னு கொஞ்சித் தீரலே.

ரயில் புடிச்சு மதுரைக்கி வந்தோம். வளி முளுக்க இந்தம்மா கையிலேதான் கொழந்தை இருக்கான். பொதுவா அமிர்தம் யாரு கிட்டேயும் புள்ளையைக் குடுக்க மாட்டா. சீரு தட்டிரும், கைச்சூடு தாக்கிரும்னு ஏதாவது காரணம் சொல்லுவா. தாயாரம்மா கிட்டெத் தயங்காமக் குடுத்துட்டா.

அந்தம்மா மொகத்திலேயே தெரியுதுங்க, அது அப்பிராணின்னு.

அப்பிடீன்னா எங்கிட்டெ.

மதுரை டேசனிலே கூட்டமான கூட்டம். எள்ளு போட்டா எள்ளு விளாது. ஒரு போர்ட்டர் கிட்டே விசாரிச்சேன்.

வண்டியூர்த் தெப்பக்குளத்துக்கிட்டே ஒரு சாமியார் வந்திருக்காரு. அஞ்சுநாளா அன்னந் தண்ணியில்லாமக் கண்ணை மூடி ஒக்காந்துருக்காரு. அவரைப் பாக்கத்தான் இம்புட்டுக் கூட்டம்.

ன்னான்.

ஊருக்குள்ளே போயிராதீங்கய்யா. மீண்டு வர்றது கஸ்டம். கைப்புள்ளையெ வேற வச்சீருக்கீங்க.

ன்னு சொன்னான்.

செரி. நாம என்ன ஊர்சுத்திப் பாக்கவா வந்திருக்கம். நேரா மீனாட்சி சந்நிதி, திரும்ப டேசன். கூட்டத்துக்குப் பாத்தா, திரும்பப் பட்டணம் போயி, அங்கேயிருந்து திரும்ப முடியுமா. காசுக்குக் காசு வேஷ்ட்டு. புள்ளைக்கும் உஷ்ணம்தானே. என்னா சொல்றேன்னு அமிர்தத்துக்கிட்டே கேட்டேன். பொம்பளைகளுக்கு வெளியூர் நெளிவு சுளிவு என்னா தெரியும். ஒரு வார்த்தைக்கிக் கேட்டுக்கிர்றதுதான்.

அவ சரின்னா. அந்தம்மாகிட்டே கேட்டேன்.

நீங்க என்னாம்மா சொல்றீங்க. நாங்க ஊருக்குள்ளே போகப்போறோம்.

நீங்க என்ன செய்றீங்களோ அது எனக்கும் சம்மதம்தான்.

டேசனை விட்டு வெளியே வர்றதுக்குள்ளே இந்தப்பய காச்சு காச்சுன்னு கத்த ஆரமிச்சுட்டான். கூட்டம் பிடிக்கலே அவனுக்கு. பசி வேறே. பொளுது வேற மயங்கிக்கிட்டு வருது. அமிர்தத்தெ,

நீ இங்கேயே உக்காந்திரு. நாம் போயி தங்குறதுக்கு எடம் பாத்துட்டு வந்திர்றேன்.

னு சொல்லிட்டு மங்கம்மா சத்திரத்துக்குப் போனேன்.

பாருங்க. இந்தம்மா எங்களோட வர்றது ஆரம்பத்திலே எனக்குப் பிடிக்லே. இது என்னா ஒட்டுவாரொட்டின்னு. அமிர்தத்துக்கிட்டே சாடையாச் சொல்லவும் செய்ஞ்சேன். சோத்து மூட்டைக்குள்ளே ஏண்டி பெருச்சாளியை வச்சுக் கட்டுறேன்னு. அவதான் இருக்கட்டும்னுட்டா.

வயசானவுங்க ஒருத்தர் கூட இருக்குறது நல்லதுங்க. கைப்புள்ளையோட போறோம். அட, கொஞ்ச நேரம் அளுதிச்சுன்னா கையுங்காலும் ஓட மாட்டேங்குது. அந்தம்மா அஞ்சு பெத்தவளாமே. நாமளா சொமந்துட்டுப் போறோம். ஒரு டிக்கிட்டுச் செலவுதானே. எம்மாம் துட்டுச் செலவளிக்கிறோம். போனாப் போகுது. வரட்டும்.

னுட்டா.

ஹாஸ்யத்துக்குக் கிழவரின் ஞாபக சக்தி பற்றியும் விவரிப்பதில்

உள்ள ஆர்வம் குறித்தும் சந்தோஷமாகவும் இருந்தது. இதே ரீதியில் போனால், ஒரு ராத்திரி முழுக்கக் கதை சொல்வார் போலிருக்கிறதே, இவர் எப்போது முடித்து நாம் எப்போது பஸ்ஸேற என்று சலிப்பாகவும் இருந்தது. தாயாரம்மாள் விழுங்கின வார்த்தைகளை இவரிடம் வாங்கும் ஆர்வமும் தணியாமல் இருந்தது. கொட்டாவி விட்டார்.

> ஆச்சா, இந்தம்மா வந்ததும் நல்லதாப் போச்சு. திருவிளாக் கூட்டத்துக்குள்ள புள்ளையைக் கொண்டுபோனா அலண்டு போகுமா இல்லையா. அந்தம்மாவைக் காவலுக்கு வச்சிட்டு சத்திரத்துக்குப் போனேனா? அவன் ரூம்பு ஒண்ணும் இல்லேன்னுட்டான். அப்பொத்தான் என்ன ஏதுன்னு விசாரிச்சு அந்த வக்கீலு, அதான் நீங்ககூடச் சொன்னீங்களே, அவரு பேரு என்ன...
>
> நீலகண்டன்.
>
> ஆங், அவருதான், அந்த நேரம் பாத்து, எல்லாம் நம்ம யோகம் தான் பாருங்க. அவருகண்டி கால் மணி நேரம் முன்னேயோ பின்னேயோ வந்திருந்தாருன்னு வச்சிக்கங்களேன். நாறியிருக்கும் நம்ம பொளப்பு.

ஹாலாஸ்யம் மறுபடி கொட்டாவி விட்டார். கிழவர் மதியூகி. உடனே கேட்டார்:

> ராத்திரி தூக்கமில்லையோ?
>
> அதெல்லாம் ஒண்ணுமில்லே. நீங்க சொல்லுங்க.
>
> அப்புறம் அந்த வக்கீலுகிட்டெச் சொன்னேன். இந்த மாதிரி, வந்த இடத்திலே கூட்டமாயிப் போச்சு. கைக்குழந்தையோட வந்திருக்கேன். என்னா செய்யுறதுன்னு தெரியலே. இதுதான் வெவரம்னேன். சும்மாச் சொல்லக்கூடாது. தங்கமான மனுசன். என் சிநேகிதாள் வீடு பக்கத்திலே இருக்கு. நீங்க அங்கெ தங்கிக்கோங்க. காலையிலே அம்பாளைப் பாத்துட்டு யோகீசுவரரையும் வந்து பாத்துட்டுப் போங்க. நான் ஜட்கா அனுப்பிவைக்கிறேன்னாரு. இந்தக் காலத்திலே யாரு சொல்லுவா சொல்லுங்க. அப்பிடி ஒரு மனுசன் அவரு.

இதே பலவேசம் கூட்டாளின்னு வைங்க. ஒம் பாடு, ஒம் புள்ளெ பாடு, ஒம் பொஞ்சாதி பாடு ன்னிருவான். எல்லா இடத்திலேயும் சொகுசு தேடக்கூடாதும்பான். நமக்கா சொகுசு தேடுறோம். பொண்டாட்டி புள்ளைகளைக் கவனிக்கத் தாவலை?

வலதுகையால் வாயை இறுக மூடிக் கொட்டாவியை விழுங்கினார் ஹாலாஸ்யம். அடக்கிய கொட்டாவி கண்களில் நீராக வழிந்தது.

முடியுமய்யா...

என்று மனத்துக்குள் கூவினார். பலவேச முதலியார் ஞாபகம் வந்தது. அவருடைய பேச்சு பட்டுக் கத்திரித்த மாதிரி இருந்தது. இவர் என்னமாய்த் தொணதொணக்கிறார். பேச்சு கிளைவிட்டுக் கொண்டே போவது பற்றி லவலேசமும் கவனமில்லை. லௌகீகத்தின் பலம் அப்படி என்று நினைத்துக்கொண்டார்.

என்னா, கவனம் இங்கே இல்லை போலத் தெரியுதே. சும்மா இம் கொட்டிக்கிட்டிருக்கீங்களாக்கும்?

இல்லையே, கேட்டுக்கிட்டுத்தானே இருக்கேன்.

அப்பன்னாச் சரி. கண்ணு சொருகிச்சேன்னு பாத்தேன். பந்தலுக்குள்ளே நொளயுறோமா, எனக்குக் கரண்ட்டு அடிச்சாப்பலே ஆயிருச்சு. இப்பொத்தான் ஆறுமாசத்துக்கு முன்னாலே அடக்கமாயிருக்காரு. அவருதான், பலவேச முதலியோட குருநாதரு. அவன் ஒருத்தனா இருந்து என்னா செய்வான்னு ஒத்தாசைக்கி நானும் போயிருந்தேன். நாங்களெல்லாம் சேந்துதான் பொதைச்சோம்.

அதே ஆளு இங்கே மதுரையிலே உக்காந்திருந்தா எப்படி இருக்கும் சொல்லுங்க. உத்து உத்துப் பாக்கிறேன். கண்ணைக் கசக்கிக்கிட்டுப் பாக்கிறேன். அதே ஆளுதான். அச்சு அசலு அஞ்சு சடையும் அவரேதான். என்னடா இது மாயமா இருக்குன்னு நெனைச்சு முடியலே... இந்தம்மா மயக்கம் போட்டுருச்சு. யாருங்கறீங்க?

தாயாரம்மா.

ஆங். தாயாரம்மாதான். மொகத்திலே தண்ணியைத் தொளிச்சு சோடாவை வாயிலே ஊத்தி நெனவுக்குக் கொண்டுவந்தா... எந்திரிக்கிது. சாமியாரைப் பாக்குது. மறுபடி மயக்கம்.

நாந்தானே மண்ணள்ளிப் போட்டேன், எங் கையாலே போட்டேன்னு மறுகுது.

சரி, நம்ம கேஸு மாதிரித்தான் இதுவும். யாரோ ஒருத்தரை நினைச்சுக்கிட்டு, அதே சாடையிலே இந்தச் சாமியாரு இருக்கிறதைத் தாங்கிக்கிற முடியலே இந்தப் பொம்பளைக்கி ன்னு

புரிஞ்சு போச்சு. அதாங்க இந்தப் பொம்பளைங்களுக்கும் நமக்கும் வித்தியாசம். நம்மாலே உணர்ச்சிகளை அடக்கிக்கிற முடியும். அதுகளுக்குப் பட்டுன்னு நரம்புலே இளுத்துரும். என்னா சொல்றீங்க?

‘இந்த மாதிரி அசட்டுக் கண்டுபிடிப்புகளெல்லாம் இல்லாமல் கதையைச் சொல்லுமய்யா.’ என்று உள்ளுக்குள் அலுத்துக்கொண்டார் ஹாலாஸ்யம்.

வக்கீல் வந்து எங்கிட்டேக் கேக்குறாரு. என்னாங்க ஒங்க ஒறவுக்காரப் பொம்பளை இந்த மாதிரி மயக்கம் போடுதுன்னு. எனக்குச் சிரிப்பு வந்துருச்சு. மாசி மகக் கூட்டத்திலே நான் பாத்த எல்லாரும் எனக்கு ஒறவுன்னா, எம் பையன் கல்யாணத்துக்கு எஞ் சொத்து முச்சூடும் வித்தாலும் வந்தவுங்களுக்குக் காப்பி மட்டும்தாய்யா குடுக்க முடியும்னு நெனச்சுக்கிட்டேன். என்னா சொல்றீங்க.

தன்னுடைய ஹாஸ்யத்துக்கு விழுந்துவிழுந்து சிரித்துக் கொண்டார் சென்ன கேசவ முதலியார்.

ஹாலாஸ்யம் தர்மசங்கடமாகப் புன்னகைத்தார்.

இதுக்கிடையில் ஒரு சின்னப் பையன். ஏதோ கீழ்சாதிப் பையன் போலேருக்கு. அவனுக்குப் பேச்சு நின்னு போச்சு. அவன் பேசுவான். பேசினா ஒரு வார்த்தைதான் பேசுவான்.

அவரேதான். அவரேதான்னு மட்டும் சொல்வான். ஏதோ புத்தி பெரண்டுருச்சு போல. சும்மா சொல்லக்கூடாது அந்த வக்கீலை. அவரு பேரு என்னா சொன்னீங்க?

நீலகண்டன்.

ஆங். அவருதான். டாக்குட்டர்களை வரவளைச்சு, இந்தம்மாவுக்கு அந்தப் பையனுக்கு எல்லாம் வைத்தியம் பாத்தாரு. எனக்கு உள்ளூர ஒரு சந்தேகம் தட்டிருச்சு. தியானத்திலே உக்காந்திருக்கிற ஆளு லேசுப்பட்டவரில்லே. தவுர, அந்த ஆளுக்கும் பலவேசத்தோட குருநாதருக்கும் இந்தத் தாயாரம்மா சொல்ற ஆளுக்கும் அந்தப் பையன் சொல்ற ஆளுக்கும் ஏதோ கனெக்சன் இருக்கு.

சரி, இதுமாதிரி விசயங்களிலே பலவேசம் மாதிரி ஆளுகன்னா உள்ளாற போயி நோண்டித் துருவிப் பாப்பாங்க. நமக்கு அதெல்லாம் முடியுங்களா. பெறகு தோப்பு தொரவெல்லாம் யாரு

மேல்பாக்குறது. ஏதோ வந்தமா, கும்புட்டமா, நம்மால முடிஞ்சத செஞ்சமா, போனமான்னிருக்கணும். சரிதானே. வாங்க, ரொம்பக் களைச்சிருக்கீங்க. ஒரு ஸோடாக் குடிப்பம்.

வாஸ்தவம்தான். ரொம்பக் களைத்துத்தான் போய்விட்டது. ஆனால் நான் கேட்ட விஷயத்துக்கு அருகில்கூட வரவில்லையே இந்த முதலியார். நாசூக்காகக் கேட்டுப் பார்க்கலாம்.

அந்தம்மாவுக்கு ஒங்க மகன் மேலே எப்பிடி அவ்வளவு பிரியம் உண்டாச்சு.

இதுக்கெல்லாம் காரணம் சொல்ல முடியாதுங்க. சில பேருக்குச் சில விசயத்துலே கண்மூடித்தனமா ஒரு பிரியம் விளுந்துரும். அவ்வளவுதான்.

அவ்வளவுதான்ங்கிறீங்க?

ஆமா. பின்னே இதுலே என்ன செதம்பர ரகசியமா இருக்கு? இந்த பாருங்க, அவனை நான் மகனேங்குறேன். அந்தம்மா பேராண்டிங்குது. எல்லாம் எதுனாலே? காரணம் சொல்லத் தெரியாத பிரியம். அவ்வளவுதான். எல்லாத்துக்கும் அப்பாலே, அவன் யாரு பெத்த புள்ளெயோ. ஏதோ நாம புள்ளெயில்லாமெக் கலங்கீட்டு இருந்தோம். கலி தீர்க்க வந்தமாதிரி வந்து சேந்தான். இப்பொ பாருங்க. என் சொத்து எல்லாத்தையும் அவம் பேருக்குத்தான் உயில் எளுதி வச்சிருக்கு. இதுக்கு மேலே என்னாங்க இருக்கு? என்ன நாஞ் சொல்றது? குடிங்க. ஸோடா காத்துப் போகுது பாருங்க.

மௌனமாக சோடாவைக் குடிக்கத் தொடங்கினார் ஹாலாஸ்யம்.

## அத்தியாயம். 38

யாரோ பார்த்துக்கொண்டிருக்கிறார்கள் என்று உணர்வு தட்டியது. திரும்பிப் பார்க்க அவகாசம் இல்லை. குகையில் இருக்கும் என் குழந்தைகளுக்குப் பசி ஏறிவிடும். என் இணை வருவதற்குள் திரும்பிப் போயாக வேண்டும் எனக்கு.

அந்தச் சண்டாளனுக்கு, காட்டில் திரியும் மானுக்கும், தனக்குப் பிறந்த குட்டிக்கும் வித்தியாசம் தெரியாது. அடித்துச் சாப்பிட்டு விடுவான். சூரியன் மறைந்ததும் மிகுந்த பிரயாசைப்பட்டு வேறு குகைக்குக் குழந்தைகளை மாற்றினேன். வாயில் ஒவ்வொன்றாகப் பற்றித் தூக்கிச் சென்ற சிரமம் இன்னும் தாடைகளில் இறுகி இருக்கிறது.

இந்தக் குகை மிக நல்ல இடம். பனைமர உயரம் உள்ள வாசல். குகைக்குள் நாலு பாய்ச்சல் தூரத்துக்குப் பிறகு இருள் அடர்ந்திருக்கிறது. தரையில் ஈரக்கசிவு இல்லை. அடித்துக் குற்றுயிராய் இருக்கும் மிருகத்தை இழுத்துச் சென்று குழந்தைகளுக்கு வேட்டை பழக்கப் போதுமான இட வசதி இருக்கிறது உள்ளே.

குகைவாசலின் கூரையில் தேனடைகள் அடர்ந்திருக்கின்றன. என் உடல் நீளமும் உடல் நீளத்தில் பாதி அகலமும் உள்ள தேனடை ஒவ்வொன்றும். காட்டின் அமைதியில் தேனீக்களின் ரீங்காரம் உரத்து ஒலிக்கிறது. வேறு மிருகம் எதுவும் குகையை அண்ட முடியாது.

சிறு சப்தத்திற்கும் பதறி, பாய்ந்து கொட்டத் தொடங்கிவிடும் காட்டுத் தேனீக்கூட்டம். தன் கொடுக்கையும் உயிரையும் இழந்து தேனடையைக் காக்கப் புறப்பட்டுவிடுவார்கள் தேனீ வீரர்கள். குகைக்குள் இருக்கும்போது உறுமாமல் இருக்கச் சொல்லியிருக்கிறேன் குழந்தைகளை.

அடித்த குரங்கின் மாமிசம் இப்போது சற்று இறுகிவிட்டது. இப்போதே சாப்பிட்டால்தான் உண்டு. பிறகு கல் ஆகிவிடும் மாமிசம். இதை அடிப்பதற்குள் பெரும் அவஸ்தையாகிவிட்டது. கொம்பில் ஏறி உட்கார்ந்து இறுகப் பிடித்துக்கொண்டுவிட்டது.

அதைக் கீழே விழத் தட்டுவதற்காக மரத்தை முட்டு முட்டென்று முட்டி முன்னந்தலையில் கடும் வலி. ஆனால், பட்ட பாட்டுக்கு நல்ல பலன். கொழுத்த குரங்கு. அடுத்த வேட்டை வரை குழந்தைகளுக்குக் கவலையில்லை.

அவர்களுக்குச் செரிக்க வேண்டும் என்பதற்காகப் புது மாமிசத்தை மென்று பாதி செரித்துப் போதுமான அளவு ஊட்டியாகிவிட்டது. அவற்றுக்கு அளவு தெரிவதில்லை. இறைச்சியையும் ரத்தத்தையும் கண்டால் ஏகத்துக்கும் தின்று வயிற்றில் அடைத்துக்கொள்ளும்.

பெண்ணாக இருப்பதில் எவ்வளவு சிரமங்கள். குழந்தைகளைப் பாதுகாக்கவேண்டும். சாப்பாடு கொண்டு தர வேண்டும். புதுக்குகையை இன்னும் சுத்தம் செய்யவில்லை. முன்பு வசித்த கரடி ஏகப்பட்ட அசுத்தம் செய்து வைத்திருக்கிறது. தரை முழுவதும் எலும்புத் துண்டுகளும், மயிர்ப் பிசிறுகளுமாய்க் கிடக்கிறது. அந்தக் கரடியை விரட்டுவதற்குள் பெரும்பாடாகிவிட்டது.

மீண்டும் அந்த உணர்வு உண்டானது. செவிகளைக் கூர்மையாக்கிக்கொண்டேன். யாரோ சுவாசிக்கிறார்கள். அல்லது நான்தான் அப்படி எண்ணிக்கொள்கிறேனோ.

குழந்தைகளைப் பெற்ற பிறகு, இயல்பாக என்னிடமிருந்த தைரியத்தில் பெருமளவு குறைந்துவிட்ட மாதிரி இருக்கிறது. இப்படித் தோன்றிய மாத்திரத்தில் என் உள்ளுணர்வின் கூர்மையை உறுதிப்படுத்தியது அந்தச் சிறு ஓசை. வாயை இறுக மூடிக்கொண்டு யாரோ தும்மும் சப்தம். தலையைத் திருப்பி இருளுக்குள் கூர்ந்து பார்த்தேன்.

அந்த மனிதன் என்னையே பார்த்துக்கொண்டிருக்கிறான். நான் பார்ப்பதை அவன் அறிந்துகொண்டுவிட்டானா என்பது தெரியாத வண்ணம் இருள் மூடியிருக்கிறது. அவன் கையில் நீண்ட குழாய் ஒன்று இருக்கிறது. இந்தக் குழாயை ஏற்கனவே பார்த்திருக்கிறேன்.

நெருப்பைத் துப்பும் அது. அப்போது பேரோசை கிளம்பும். ஒரு முறை அது எறிந்த நெருப்புக்கல்லுக்குத் தப்பி ஓடியிருக்கிறேன். அதன் பிறகு கொஞ்ச காலம் கொலைவெறி கூடி அலைந்தேன். கண்ணில் பட்ட விலங்குகளையெல்லாம் வன்மமாகக் கொன்று கொண்டிருந்தேன். குட்டிகள் பிறந்த பிறகுதான் கொஞ்சம் நிதானம் வந்திருக்கிறது. இப்போது இவன்.

பொதுவாக மனிதர்களிடம் அவ்வளவாக வைத்துக் கொள்வதில்லை. அவர்களுக்கு நான் இரையில்லை. எனக்கு அவர்கள் இரையில்லை.

பிறகு எதற்காகச் சந்திப்பது? பார்க்க நேர்ந்தால், மௌனமாக விலகிச் சென்றுவிடுவேன்.

இந்த முறை இவனைச் சாய்த்துவிட வேண்டியதுதான். குழந்தைகளுக்கும் புதிய வகை இறைச்சியை அறிமுகப்படுத்தின மாதிரி இருக்கும். ஒரே பாய்ச்சல். அவன் தொண்டைக் குழியைக் கவ்வித் தொங்கவேண்டியதுதான்.

யோசித்தவாறே முன்னங்கால்களையூன்றி, புட்டத்தை உயர்த்திப் பாயத் தயாரானேன்.

ஒரு கணம். ஒரே ஒரு கணம். பிந்திவிட்டேன். அவன் நீட்டியிருந்த குழாயிலிருந்து தெறித்த நெருப்புக் கீற்று, பார்க்க முடியாத வேகத்தில் என் காது மடலை உரசிச் சென்று உயர்ந்திருந்த புட்டத்தில் வலியாகப் புதைந்தது.

குழந்தைகளின் ஞாபகம் பொங்குகிறது. குகையை நோக்கிப் பாய்ந்தேன்.

புதர்களையும், முள்செடிகளையும், தலைவிரித்த மரங்களையும், குறுக்கே மறித்த நீரோடையையும், நாலுகால் பாய்ச்சலில் தாண்டி ஓடுகிறேன். குகைவாசலுக்கு வந்து சேரும்போது, உடல் சோர்ந்திருக்கிறது. பார்வை லேசாக மங்கிவிட்டது.

வருகிற வழி முழுவதும் செந்நிறமாகச் சிந்தி வந்திருக்க வேண்டும் என் திராணி. அவன் இந்த இடத்துக்கு வந்து சேர்வதற்கான தடயத்தை நானே பதியமிட்டு வந்திருக்கிறேனே என்று வேதனையாக இருந்தது.

அவன் வருவான். நிச்சயம் வந்து சேருவான். அதற்குள் குகை மாற்றிவிட வேண்டும். குழந்தைகளை பத்திரப்படுத்தி விட வேண்டும்.

ஓசையெழுப்பாமல் குகைக்குள் போனேன். தேனீக்கள் வழக்கம் போல் ஓசையிட்டு மொய்த்துக்கொண்டிருந்தன. என் காவலர்கள்.

என்னைப் பார்த்தவுடன் பாய்ந்து வந்து விளையாட ஆரம்பித்தனர் குழந்தைகள். என் உடம்பின் அவஸ்தை அவர்களுக்கு எப்படித் தெரியும். என் மேலே உரசியும், வலுவேறாத பற்களால் என்னைக் கடித்தும், என் மேல் புரண்டும் விளையாடினர்.

சோர்வாகப் படுத்திருந்தேன். இருள் இருக்கும்வரை கவலையில்லை. வெளிச்சம் பரவியதும், மனிதர்களுக்கு பலம் கூடிவிடும். என்னைத் தேடி வருவது அவனுக்கு மிகவும் சுலபமாகிவிடும். ஆனால், நகர முடியவில்லையே என்னால். என்ன செய்வது?...

வெகுநேரம் அயர்ந்திருக்கவேண்டும் நான். குகையின் உட்புறம் இறுகியிருந்த இருள் வெளிறிவிட்டது. சூரியன் உச்சிக்கு வந்திருக்கவேண்டும். இருள் பரப்பின் எல்லையில் ஏதோ நிழல் படிந்திருந்தது.

இரண்டு வெவ்வேறு சுவாசங்களின் ஒலி கேட்கிறது. அவற்றில் ஒன்று நாயின் இறைப்பு. அவன் திரும்ப வந்துவிட்டான். அவனைத் தாண்டி, வாசலைத் தாண்டி ஓட வாய்ப்பில்லை. ஓடினாலும், ஒரு குட்டியைத்தான் கவ்விக்கொண்டு செல்ல முடியும். மற்றவை சிக்கிக்கொள்ளும். எதிர்த்துத் தாக்க வேண்டியதுதான்.

இருளின் விளிம்பில் அவன் நிற்கிறான். நகர்வதே கடினமாய் இருக்கிறது எனக்கு. பலமனைத்தையும் திரட்டிக் கால்களை அழுந்த ஊன்றி எழுந்து, நிற்கிறேன். அவன் கையிலிருந்து தடி போலப் பாயும் வெளிச்சக் கற்றை என் கண்களைக் கூச வைக்கும் தருணம், பலமான ஓசை வெடிக்கிறது.

என் இரு கண்களுக்கும் மத்தியில் நெற்றிப் பொட்டின் மேல்ஓரம் துளைக்கிறது அந்த வலி. நேற்றிரவு புட்டத்தில் பாய்ந்த அதே வலி, துள்ளிச் சாயும் என் வயிற்றில் அடுத்துத் துவாரமிடுகிறது.

அமைதி குலைந்த தேனீக்கள் தாக்கத் தொடங்கும் ஓசை நீரருவி போலக் கேட்கிறது. குகைக்கு வெளியில் பாய்ந்து ஓடும் அவனுக்கு முன்னால் பாய்கிறது நாய். இனி அவர்களைத் தேனீக்கள் பார்த்துக்கொள்ளும்.

அனுபவமற்ற ஓசையில் மிரண்டு குகைச் சுவரில் ஒண்டியிருக்கின்றன என் செல்வங்கள். அவர்களைப் பார்த்துக்கொண்ட சரிகிறேன். பார்வையில் திரை படர்கிறது. குழந்தைகள் மறைகின்றன. நிசப்தத்தில் மெல்ல மெல்ல ஆழ அமிழ்கிறேன்...

**ஆ**லாஸ்யம், இப்போது சொன்னதில் முத்துச்சாமி சொன்னது எவ்வளவு. புலி சொன்னது எவ்வளவு என்று பிரித்துப் பார்க்க முடியும் என்று நினைக்கிறீரா?

சிரித்தார், நானும் சிரித்தேன்.

முடியாதுதான். ஆனால் முதல் பார்வைக்கே ஒரு வித்தியாசம் துலக்கமாகத் தெரிகிறது.

என்ன?

இந்த ஒரு சந்தர்ப்பத்தில் மட்டும்தான் நீங்கள் பெண்ணாக இருந்திருக்கிறீர்கள்.

எமகாதகனய்யா நீர்.

தொடர்ந்து சிரித்துக்கொண்டேயிருந்தார். சிரிப்பு அடங்கி, முகம் தீவிரம் கொண்டது. சொன்னார்:

நம்முடைய தகப்பனார் காலமானபோது நீர் வந்திருந்தீர் இல்லையா. இரண்டு முழு நாள் இருந்த அனுபவத்தை இப்போது சொல்லச் சொன்னால் பத்து நிமிஷத்தில் சொல்லிவிட மாட்டீர்? அது போலத்தான், முழுசாக இருந்து கடந்த ஒரு ஜென்மத்தை ஓரிரு மணி நேரங்களில் சொல்லிவிட முடிகிறது.

நீங்கள் சொல்வது புரிகிற மாதிரி இருக்கிறது. ஆனால் புரிந்து விட்டது என்று சொல்ல முடியவில்லை.

ரொம்பச் சமர்த்தராகி வருகிறீரய்யா! நீர் ரயிலில் போகிறீர் என்று வைத்துக்கொள்ளும். அப்போது ரயில் என்னவாக இருக்கிறது.

அதே, நிலையத்தை விட்டு வெளியேறும் ரயிலைப் பார்க்கிறீர் என்று வைத்துக் கொள்ளும். ஒவ்வொரு ஜன்னலாக உம்மைத் தாண்டிப் போகிறது. ஒரு பார்வைக்குள் மொத்த ரயிலும் வந்துவிடுகிறதா இல்லையா. நிதானமாக நகரும் ரயிலின் ஜன்னல் வழியாகத் தெரிபவற்றை உமக்குச் சொல்லிக்கொண்டிருக்கிறோம். அவ்வளவுதான். அந்த ரயிலில் நாம் பிரயாணம் செய்திருக்கிறோம் என்பதால், விவரங்களை நம்மால் துல்லியமாகச் சொல்ல முடிகிறது. இப்போது புரிந்ததா?

இன்னும் கூட விளக்கமாகச் சொன்னால் தேவலை.

ஆலாஸ்யம். முத்துச்சாமி நமக்குக் காட்சியாகத் தெரிவதில்லை. முத்துச்சாமியின் காட்சிகளைத்தான் அனுபவமாகக் கொள்ள வேண்டியிருக்கிறது - புலியாக இருந்தபோது புலியின் புலன் உணர்வுகள் நம்முடைய உணர்ச்சிகளாய் இருந்ததுபோல. ஆனால், புலி என்கிற அத்தியாயம் முடிந்தபிறகு அனுபவமாக இருப்பதில்லை புலி. காட்சியாக மாறிவிடுகிறது. குறிப்பு வசதிக்காக ‘நான் நான்’ என்று சொல்லிக்கொண்டு வந்தாலும், இப்போது நாம் புலி இல்லை என்ற ஞாபகம் அழுத்தமாக வழி நடத்திச் செல்கிறது.

குளக்கரையை நீங்கி, தார்ச்சாலைக்கு இறங்கினோம். தொலைவில் பெரியகுளம் நகரின் தெருவிளக்குகள் ஒரே சமயத்தில் பூத்தன. அந்த இடங்களில் மட்டும் அகலமான வட்டங்களாக இருள் விலகியிருந்தது.

சுப்பிரமணியசாமி கோயிலின் கொடிமரத்தருகிலிருந்து ஓதுவாரின் குரல் உயர்கிறது. சாலைவரை கேட்கும் கணீர்க் குரலில் திருவாசகம் ஓங்கி எழுந்து பின்தொடர்ந்து வருகிறது...

புல்லாகிப் பூடாய்ப் புழுவாய் மரமாகிப்

பல்விருக மாகிப் பறவையாய்ப் பாம்பாகிக்

கல்லாய் மனிதராய்ப் பேயாய்க் கணங்களாய்

வல்லசுரராகி முனிவராய்த் தேவராய்ச்

செல்லாஅ நின்ற இத் தாவர சங்கமத்துள்

எல்லாப் பிறப்பும் பிறந்திளைத்தேன்! எம்பெருமான்!

# அத்தியாயம். 39

அய்யனார் கோயில் வாசலில் நிற்கும் குதிரை இரண்டாள் உயரம் இருக்கும். உருட்டி விழிக்கும் கண்கள். கறுப்பாகத் தீற்றி நீட்டப்பட்டிருக்கும் புருவங்கள். அடுக்கிய சோழிகளைப்போல பற்களை இளித்துத் திறந்த வாய். விறைத்த காதுமடல்கள். முன்னங்கால் இரண்டையும் தூக்கிப் பின்னங்கால்களில் நிற்கும் குதிரையை, அடிவயிற்றின் முன்பகுதியில் ஊன்றிய தூண் தாங்குகிறது. அடிவயிற்றோடு ஒட்டிய புடைப்பாக நீண்டிருக்கிறது குதிரையின் பிறப்புறுப்பு.

பார்த்துக்கொண்டிருக்கும்போதே சுதைக் குதிரை சலனம் கொள்கிறது. புருவங்களை நெரிக்கிறது. ஆழ்ந்த சுவாசத்தின் ஓசை கோயில் முன்னுள்ள திறந்தவெளியை நிறைக்கிறது. முன்னங்கால்களை இறக்கி நடந்து வருகிறது.

ஒட்டுப் போட்டுத் தைத்த தாமரை இலைபோல மனித மனங்களைத் தைத்து விரித்த பரப்பில் தடதடதடவென ஓடத் தொடங்குகிறது குதிரை. திசையெங்கும் நிறைகிறது அதன் பாய்ச்சலோசை.

வெய்யில் குறைந்துவிட்டது. வெக்கை குறையவில்லை. ஊருணிக்கரை மரங்களில் ஒரு இலைகூட அசையவில்லை. பார்வைக்குப் புலப்படாத யாரோ ஒருவனின் மூர்க்கமே பிற்பகல் பொழுதாக ஆகியிருக்கிறது என்று நினைத்துக்கொண்டார் பழனியப்பன்.

மாடியறையின் ஜன்னல் வழி அய்யனார் கோயில் தெரிகிறது. நேர்த்திக்காகக் கொண்டுவைத்த குட்டிக்குட்டிப் புரவிகள் சுற்றிலும் நிற்கின்றன. சிகப்பிக்குக்கூட ஒரு நேர்த்திக்கடன் இருக்கிறது. இந்த அய்யனாருக்கு ஒரு புரவி வைப்பதாக நேர்ந்து கொண்டிருக்கிறாள். குட்டிப்புரவிகளின் நடுநாயகமாக உயர்ந்த பிரம்மாண்டக் குதிரை பாயத் தொடங்கினால், முதல் பாய்ச்சலிலேயே நூலக மாடியில்தான் வந்திறங்கும்... கவனத்தைக் கலைத்தான் மணிகண்டன்.

ஸார். ஒரு நிமிஷம்.

அவன் திறந்துகொண்டு வந்த கதவின் மறுபக்கம் விரிந்த ஹாலில் காலி மர பெஞ்ச்சுகளின் வரிசையை ஒட்டி, ஒண்ணாம் நம்பர் புத்தக ரேக்கு தெரிந்தது. பெஞ்ச்சுகளுக்கெல்லாம் வார்னீஷ் அடிக்கவேண்டும். எவ்வளவு பழசாகிவிட்டன. சிகப்பி, ‘நல்ல நாளிலேயே நாழிப் பால் கறக்காத மொட்டைப்பசு’ என்பாள் சடகோபய்யங்காரை…

என்னப்பா.

இந்தப் புஸ்தகம் நாலு காப்பின்னு என்ட்ரி போட்டிருக்கீங்க. மூணுதான் இருக்கு.

ஆமாப்பா. ஒண்ணை நான் கொண்டுபோயிருக்கேன். படிக்கிறதுக்காக.

அப்பன்னாச் சரி. இதை எந்த வரிசையிலே இண்டெக்ஸ் பண்றது ஸார்.

ஏது. நீ இன்னும் படிச்சுப் பாக்கலையா!

அவன் புன்னகைத்தான். குறும்பாக மடிந்த உதடுகள், இப்போதுதான் மீசை முளைக்க ஆரம்பித்திருக்கிறது. தேங்காய் எண்ணெய்ப் பளபளப்புடன் படிய வாரிய தலை. எல்லாரையும் மாதிரி, கல்யாணம் ஆன மறுவருஷமே எனக்கும் குழந்தை பிறந்திருந்தால், அதற்கும் இவன் வயதுதான் ஆகியிருக்கும்.

இல்லே சார். பரிட்சை வருதில்லையா.

நல்லாப் படிச்சிட்டிருக்கியா.

ஒரு ரிவிஷன் முடிச்சிட்டேன் ஸார். இன்னும் நாள் இருக்கே.

நீ என்னைலேர்ந்து லீவு வேணும்னே.

பதினேழாம் தேதியிலேர்ந்து.

சரி. போ. நல்லாப் படி.

ஆகட்டும் ஸார்.

மடியில் விரித்த ரிஜிஸ்தருக்குப் பார்வையைத் திருப்பினார் பழனியப்பன்.

ஸார், இந்தப் புஸ்தகத்தெ இண்டெக்ஸ் பண்றதுக்குக் கேட்டேன்.

ஓ… ஆமா. இதெ எதுலே கொண்டு போயிச் சேர்க்குறது…

நீங்க படிச்சிட்டீங்களா ஸார். குள்ளச்சித்தன் சரித்திரம்னு போட்டிருக்கே. பயாக்ரஃபியா?

பயாக்ரஃபி மாதிரிதான். ஆனா எளுதுனவரே சொல்றாரு, நாவல் மாதிரி எளுதியிருக்கேன்னு. படிக்கிறதுக்கும் நாவல் மாதிரித்தான் இருக்கு. உள்ளே நடக்கும் பல சம்பவங்கள் நம்ப முடியாமெ இருக்கு. எளுதினவரோட கற்பனை எத்தனை பெர்ஸன்ட்டுன்னு சொல்ல முடியலே!

மணிகண்டன் சிரித்தான்.

எல்லா பயாக்ரஃபியும் அப்படித்தானே ஸார்!

பழனியப்பனும் சிரித்தார்.

ஆமாமா. ஆட்டோபயாக்ரஃபிகளுமே அப்படித்தான்!

இரண்டு பேரும் சிரித்தார்கள். பழனியப்பன் சொன்னார்,

போட்டு வைய்யி. கமலாம்பாள் சரித்திரம், பத்மாவதி சரித்திரம், பிரதாப முதலியார் சரித்திரம் இதெல்லாம் இருக்கால்லியா. அதுகளோட வையி இப்போதைக்கி... அப்புறம் மணி, நம்ம கிட்டே confessions of an english dreamer ன்னு புஸ்தகம் இருக்கா பார்க்கணுமே. இங்லீஷ் புஸ்தக ரிஜிஸ்தர் ஒண்ணுமே இங்கே இல்லே பாரு.

எல்லாம் பைண்டிங்குக்குப் போயிருக்கு ஸார். புஸ்தகங்கள்லே தேடிப் பார்க்குறேன். முக்கியமான புஸ்தகமா ஸார்?

போன வாரம் செய்யது வந்திருந்தான். அவனுக்கு வேணுமாம்.

அப்படியா? அண்ணன் வந்திருந்தாரா. ஒடனே போயிட்டாரோ?

ஆமா. மக்யா நாளே திரும்பீட்டான்.

மணிகண்டன் உள்ளே போனான். சூட்டிகையான பையன். வறிய குடும்பம். காலையில் வீடு வீடாகப் பேப்பர் போட்டும், நூலகத்தில் பகுதி நேரமாக வேலை பார்த்தும் சம்பாதித்துப் படிக்கிறான். குளித்துவிட்டு, அடர்த்தியான விபூதிப் பட்டையுடன் இவன் வந்தவுடனே நூலகம் வெளிச்சமாகி விடுவதாகத் தோன்றும் பழனியப்பனுக்கு. காலேஜ் சேர்ந்தால் ஏதாவது பணம் கொடுத்து உதவவேண்டும்.

ஸார். இந்தப் புஸ்தகத்தைப் பாருங்க. நீங்க சொன்ன புஸ்தகம்

நம்மகிட்ட இல்லே. அதோட தமிழ் மொழிபெயர்ப்பு இது.

மீகாமனின்... யாத்திரைக்... குறிப்புகள்... மூலப் புஸ்தகத்தோட பேரு போட்டிருக்கா இதுலே.

என்று கேட்டவாறே புரட்டினார். போட்டிருந்தது.

ஜஹாங்கீர் காலத்தில் ஈஸ்ட் இந்தியா கம்பெனியைத் துவக்க வந்த ஆங்கில வணிகர்களில் ஒருத்தனின் நாட்குறிப்பு அது. அவனுடைய பெயரில் ஒரு சுவாரசியம் இருக்கிறது. அவன் பெயரும் மௌண்ட்பேட்டன்தான்! கொட்டை கொட்டையான அச்சில், அறுபத்துநாலே பக்கங்கள். இங்கிலீஷ் தலைப்புக்கும் தமிழ்த் தலைப்புக்கும் எவ்வளவு தொலைவு! தாணுமாலயன் என்று ஒரு ஆர்.எஸ்.எஸ்.காரர் மொழிபெயர்த்திருக்கிறார்... மணிகண்டன் கேட்டான்:

ஸார். மௌண்ட்பேட்டன்னு போட்டிருக்கே. வைஸ்ராயா இருந்த மௌண்ட்பேட்டனா சார்?

இல்லே மணி. இந்த ஆளு ஜஹாங்கீர் பீரியட்லே வந்தவர்னு போட்டிருக்கே. பாக்கலையா.

படிச்சுப் பாக்கணும் ஸார்...

என்றவாறு உள்ளே போகத் திரும்பினான் மணிகண்டன்.

ரொம்பத் தாங்க்ஸ் மணி.

நோ மென்ஷன் ஸார்.

மணி, நான் கொஞ்சம் வெளியிலே போயிட்டு வந்திர்றேன். பெரிய கருப்பன் செட்டியார் கடையிலே ஒரு சின்ன வேலை. அக்கா சொல்லியனுப்பிச்சா.

வாங்க ஸார்.

மரப்படிகளில் இறங்கி, வாசலுக்கு வந்தபோது பூனை பின்னால் இறங்கித் தாண்டி ஓடியது. பழனியப்பன் இறங்குவதைப் பொருட்படுத்தாத மாதிரி. கடைசிப் படியில் கால் வைத்தபோது அந்த இளைஞன் எதிர்ப்பட்டான். மணிகண்டனைவிட நாலைந்து வயது பெரியவனாய் இருக்கலாம். வலது காதிலிருந்து ஹியரிங் எய்ட் ஒயர் இறங்கிச் சட்டைப்பைக்குள் நுழைந்திருந்தது.

வாசிக்க வந்தவன் போல. ஒதுங்கி வழிவிட்டார் பழனியப்பன்.

அவன் நின்றுவிட்டான்.

இங்கே பழனியப்பன்ங்கிறது...

நாந்தான். சொல்லுங்க.

பிச்சாண்டி ஐயர் அனுப்பினார்.

கேள்விப்படாத பெயராக இருக்கிறது.

யாரு?

பிச்சாண்டி ஐயர், சிங்காநல்லூர்.

யாரைச் சொல்றீங்கன்னு தெரியலையே தம்பீ.

திருவண்ணாமலையிலே சந்திச்சோம்னு சொல்லு. புரிஞ்சுக்குவாருன்னு சொன்னார்.

ஆ! அந்தச் சவண்டிப் பிராமணன். 'காசெதுவும் வேண்டாம், கைங்கர்யம்' என்று சொல்லிப் போனவர்.

ஆங்... ஞாபகம் வந்திருச்சு. சொல்லுங்க, நான் ஏதாவது பண்ணணுமா ஒங்களுக்கு?

நீங்க இன்னக்கி வேல் ஒண்ணைக் கடையிலே போடப் போறீங்களாம். காலைலே வர்ற அவசரத்திலே கோமியத்திலே கழுவ மறந்து கொண்டாந்துட்டீங்களாம். கோமியத்தெக் கொண்டு குடுக்கச் சொல்லி ஐயர் உத்தரவு குடுத்தாரு. இந்தாங்க. பிடிங்க... நீங்க அழிக்கிற பொருளை வாங்குறவுங்க நல்லா இருக்கணும் இல்லியா.

பழுப்பு வண்ண சீசாவை நீட்டினான். பழனியப்பனுக்கு உள்ளுக்குள் உதறியது.

நீங்க எங்கேருந்து வர்றீங்க.

காரைக்குடியிலேர்ந்து.

அய்யர் வந்திருக்காரா அங்கே.

இல்லையே. அவரு கோயமுத்தூர்லே இருக்காரு.

பிறகெப்பிடி...

வந்தவன் சிரித்தான். கொஞ்ச நேரம் மோட்டுவளையைப் பார்த்துக்கொண்டு நின்றான்.

சரி, நான் வர்றேன்.

இருங்க. காபி சாப்பிட்டுட்டுப் போகலாம்.

இல்லைங்க. இன்னைக்கு அஸ்தமனத்துக்குப் பிறகுதான் பச்சைத் தண்ணி பல்லுல படலாம். வரேன்.

நடந்து போய்க்கொண்டேயிருந்தான்.

**ஊ**ருணிக்கரை அய்யனார் கோயிலுக்குப் பின்னால் மறைந்து காணாமல் போகும்வரை அவனைப் பார்த்துக்கொண்டிருந்தார் பழனியப்பன். மெல்ல நடந்து கோயில் வாசலுக்கு வந்தார். தலை சுற்றுகிற மாதிரி இருந்தது. மரத்தடியில் கிடந்த குத்துக்கல்லில் உட்கார்ந்தார். என்ன நடக்கிறது என்னைச் சுற்றி?

திருவண்ணாமலையில் பிச்சாண்டி அய்யரைப் பார்த்த பிறகுதான் கரட்டுப்பட்டி போனது. யந்திரங்களையும் தாயத்துகளையும் கோமியத்தில் நனைத்து விற்கச் சொன்னது கரட்டுப்பட்டியிலிருந்த பார்வையில்லாத இளைஞன்.

அவன் சொன்னது பிச்சாண்டி அய்யருக்கு எப்படித் தெரியும் என்பது ஒரு புறம். இன்றைக்கு, சரியாக இத்தனை மணிக்கு அதை விற்கப் புறப்படுவேன் என்பது அவருக்கு எப்படித் தெரியும் என்பது இன்னொரு புறம்.

இதெல்லாம் போக, கோயமுத்தூரில் இருப்பவர் காரைக்குடிக்கு எப்படித் தொடர்பு கொண்டார் என்பது இன்னொரு மர்மம். வந்த இளைஞன் காது சரியாகக் கேட்காதவன். எதிரிலிருந்த பழனியப்பனே சத்தம் போட்டுத்தான் பேசினார். கோயமுத்தூரில் இருப்பவர் உத்தரவிடுவது இவனுக்குக் காரைக்குடியில் கேட்கிறது.

ஒரு வேல் மீந்துவிட்டது என்பது பழனியப்பனுக்கும் சிகப்பிக்குமே நேற்றுச் சாயந்திரம்தான் தெரியும். அதைக் கோமியத்தில் நனைக்க மறந்தது இருவருக்குமே தெரியாது.

எந்த விதமான தர்க்கத்துக்குள்ளும் அடங்க மறுக்கும் ஒன்று நடந்திருக்கிறது. காரண காரியங்களுக்கு அப்பாற்பட்ட ஒரு சுழலின் மையத்தில் சிக்கி மூச்சுத் திணறுவதாக உணர்ந்தார் பழனியப்பன்.

தர்க்கமயமான கேள்விகளை அடுக்கிக்கொண்டே போன மனம் சடாரென்று சொடுக்கிக்கொண்டது. அது சரி, பெரியகருப்பன் செட்டியாரிடம் வாங்கி உருக்கப் போகும் தட்டானுக்கும் சரி,

செட்டியாருக்கும் சரி, இந்த வேல் யாரிடம் போய்ச் சேரப் போகிறது என்பது தெரியாது. வாங்கப் போகிறவனுக்கே தெரியுமா என்பதும் ஊர்ஜிதமில்லை. சமூகத்தின் அளவீடுகளில் அவன் நல்லவனா கெட்டவனா என்பதற்கான ஒரு குறிப்பும் இந்தக் கணத்தில் இருக்க வாய்ப்பில்லை.

முகமும் அடையாளமும் அற்ற யாரோ ஒருவன் மேல் கரட்டுப்பட்டிக்காரருக்கும் பிச்சாண்டி ஐயருக்கும் என்ன அக்கறை? கரிசனம்?

கோவிலடி அரசமரம் வலுத்து அசைகிறது. கிளைகள் ஊதும் காற்று பழனியப்பனை வருடுகிறது. உள்ப் புழுக்கத்தினால் வியர்த்திருந்த உடலை இதப்படுத்துகிறது காற்று.

மரத்தின் கிளையிலிருந்து எம்பி உயர ஏறும் கருடன் வானத்தில் வட்டமிட ஆரம்பிக்கிறது. பொன்னமராவதியின் கீழ்க் கோடியையும் மேல்க் கோடியையும் ஒரே சமயத்தில் காண முடியும் கருடனுக்கு. அது பறக்கும் உயரம் அப்படி.

பழனியப்பனின் உடல் ஒருமுறை சிலிர்த்துக்கொண்டது. செய்யதுவுக்கு நேற்றிரவு எழுதின கடிதத்தில் ஓடிய வரிகள் நினைவில் வந்தன.

யாரோ நம்மைக் கவனிக்கிறார்கள் என்று தெரிந்த மாத்திரத்தில் இயல்புநிலை பிறழ்ந்துவிடுகிறது.

அப்படிச் சொல்வது தவறு. யாரோ நம்மைப் பொறுப்பாகப் பார்த்துக்கொள்கிறார்கள். நம்மைப் போலவே ரத்தமும் சதையும் நரம்புமாக உருவானவர்கள். சூரியனுக்குக் கீழுள்ள சகலத்தையும் நம்முடன் பகிர்ந்துகொள்பவர்கள்.

நம்மைப் போலவே புலன்கள் குவியும் மையம் ஒன்று அவர்களுக்குள்ளும் இருக்கிறது. அதிலிருந்து உயரக் கிளம்பும் துரட்டி, எட்டா உயரத்திலிருந்து கனிகளைக் கொய்து விநியோகிக்கிறது, யாரும் உண்டு பசியாறும் வண்ணம்.

கோமிய சீசாவைத் திறந்தார் பழனியப்பன்.

## அத்தியாயம். 40

இடையறாது நிகழும் சுவாசமென நீக்கமற நிறைந்திருக்கிறது அர்த்தமின்மை. போர்களும், பூக்களும், காதலும், பிறப்பும், மரணமும், ஓய்வும், வேலையும் யாவும் நிகழ்வது, அவை நிகழும் பாழ்வெளி என்னும் வெற்றுத் திரையை ஞாபகப்படுத்துவதன் பொருட்டே.

***

விழிப்புத் தட்டும்போது மீண்டும் ஒரு முறை உறுதியாகிறது. நான் கப்பலில்தான் இருக்கிறேன் இன்னமும். சுவரில் தொங்கும் நாட்காட்டியில் என் உதவியாளன் தேதியை மாற்றிவிட்டுப் போயிருக்கிறான். இன்று ஞாயிற்றுக்கிழமை. ஆனால் ஞாயிற்றுக்கிழமை போலவே இல்லை. மிதக்கும் கப்பலில் ஒரு தினத்துக்கு எந்தவிதமான தனித்துவமும் கிடையாது.

தரையில் மட்டும் என்னவாம்? அங்கும் எல்லா தினங்களும் சமமானவைதான். அனுபவம் கொள்ளும் மனித மனத்தில்தான் அடையாளங்களும் பேதங்களும் உற்பத்தியாகின்றன. கிழக்குத் திசை, தான் கிழக்கு என்று அறியுமா என்ன? இல்லை ஆடுகளுக்கும் மாடுகளுக்கும் கிழக்கும் மேற்கும் தெரியுமா. ஆடுமாடுகளின் அனுபவத்தில் சூர்யோதயமும் சூர்யாஸ்தமனமும் உண்டே தவிர, அவற்றைக் குறிக்கும் பெயர்கள் கிடையாது.

ஜன்னல் வழி வெட்டுகிறது ஒரு மின்னல். அதன் கணநேரப் பிரகாசத்தில் மரணத்தின் செய்தி பொதிந்திருக்கிறது. அலைகளில் நகரும் கப்பலின் மரச்சுவரில், மிதக்கும் செத்தை குப்பைகளில், நான் பிறந்தேன் என்ற தகவலில்... மரணத்தின் செய்தி இல்லாத இடமே இல்லை. அது என்னை நோக்கி விடுக்கப்பட்ட செய்தி என்பதால், பொறுப்பாக என்னை வந்து அடைகிறது.

மரணம் அடர்த்தியான, ஊடுருவிப் பார்க்க முடியாத பின் திரையாக இருக்கிறது. அதன் முன்னிலையில் மனிதர்கள் போகிறார்கள்,

வருகிறார்கள், தூங்குகிறார்கள், விழிக்கிறார்கள். சம்போகம் செய்கிறார்கள். வியாபாரம் செய்கிறார்கள். உடுத்துகிறார்கள், களைகிறார்கள், உண்கிறார்கள், கழிகிறார்கள்... ஆனால், மரணம் என்ற ஒன்றே இல்லாதது போன்ற பாவனையுடன் எல்லாவற்றையும் செய்கிறார்கள்.

அன்று மைக்கேல் என்ன செய்தான்? பூமி அதிர்ச்சி உண்டானவுடன் படகைத் தூக்கிக்கொண்டு கடலை நோக்கி ஓடினான். தப்பிப் பிழைக்கிறானாம். கடல் என்பது நீர் போர்த்திய தரை என்பது அவனுக்குத் தெரியாமல் போயிற்று. அசடன். மரணம், வெளியில் இல்லை. பிறந்து, வளர்சிதை மாற்றத்துக்கு ஆளானபடியிருக்கும் மனித சரீரத்தில் இருக்கிறது. அது பற்றிய அச்சம் மனத்தில் இருக்கிறது. மரணத்திடமிருந்து தப்பிக்கவேண்டு மானால், உள்ளுக்குள் அதனிடமிருந்து விடுபடவேண்டும்.

கர்த்தரே... ஏன் பொழுது இப்படி விடிகிறது. மரணவாசனையுடன்.

விடியட்டுமே. ஒரு நாளுக்கும் இன்னொரு நாளுக்கும் அவற்றின் அகப் பெறுமானத்தில் பேதம் இல்லை என்பதுபோல, ஒரு நிலைக்கும் இன்னொரு நிலைக்கும் கூட பேதம் இல்லைதான். உறக்கம், விழிப்பு, கனவு என்ற மூன்று நிலைகளும் ஒன்றுக்கொன்று விரோதமானவையல்ல. மூன்றையும் தன்னகத்தே கொண்ட ஒரே நிலையின் பகுதிகள்தாம். பிறப்பும் மரணமும் கூட இரண்டு எதிர்நிலைகள் அல்ல. ஜீவத் தொடர்நிலையின் இரண்டு வெவ்வேறு கண்ணிகள். அவ்வளவுதான்.

அந்த பைராகியின் தயவால் தெரிய வந்தது இது. அவன் வாய் திறந்து எதுவுமே சொல்லித் தரவில்லை. நானாக அறிந்து கொள்ளும்படி விட்டுவிட்டான். புலன்களுக்கு அப்பாற்பட்ட தளத்தில் தன்னுடைய விளையாட்டுகளை நிகழ்த்தும் அதிமனிதன் அவன். அவனுடைய சிரிப்பு வான்வெளியில் நிறைந்து கிடக்கிறதே. தெரிகிறதா? அதோ வான்திரையில் வர்ணங்கள் குதித்துக் கும்மாளமிடுவதைப் பாருங்கள். அத்தனை வர்ணங்களும் வெறும் தோற்ற மயக்கங்கள். உண்மையில் வானத்துக்கென்று சுயமான நிறம் உண்டா என்ன?

வயிற்றில் மீண்டும் அதை உணர்கிறேன். உலகத்தின் கடைசிநாள் போல ரகளையாய்ப் புரட்டித் தள்ளுகிறது.

அறையை விட்டு வெளியே வரத் தடை விதித்திருக்கிறான் கப்பல் தலைவன். எனக்கு நேற்றுக் காலையில் தொடங்கிய வயிற்றோட்டம்

கடுமையாய் இருக்கிறது. கடுமையான ஜுரம் வேறு. மருந்து மாத்திரைகளை ஜன்னல் வழியாகக் கொடுத்துவிட்டு விலகிக்கொண்டார் மருத்துவர். உஷ்ணமான சுவாசத்தின் காரணமாக நாசித் துவாரங்கள் நெருப்புப் பட்டதுபோலக் காந்துகின்றன. கண்களைத் திறக்க முடியாதபடி நிரந்தர எரிச்சல்.

மூடின கண்களின் உட்புறம் மாபெரும் நிலப்பரப்பு விரிகிறது. பசுந்தரைகளும், அடர்வனங்களும், வான்முட்டும் கோபுரங்களின் கலசங்களில் அமர்ந்த கழுகுகளும்... காட்சி மாறும்போது பொன்னாலான முகபடாம் அணிந்த யானைகள் முன்வர, தங்கப் பல்லக்கில், அலங்கரிக்கப்பட்ட ஐம்பொன் சிற்பங்கள் பவனி வருகின்றன. அவற்றின் முன்பாக இடவலச் சுழற்சியில் ஏறித் தாழ்கிறது ஒரு ஜ்வாலை.

பொன்னாபரணங்களின் மினுமினுப்புக்கு முரணாக, கழுத்தெலும்பு புடைத்திருக்க, ஒட்டிய வயிறும் ஒழுங்குபடுத்தப்படாத கேசமுமாகச் சூழ்ந்துகொள்ளும் ஸாதுக்கள். இறைஞ்சும் கண்களுடன் ஊனமுற்ற அங்கங்களுடன் குற்றவுணர்ச்சியை ஏற்படுத்தியவாறு தொடர்ந்து வரும் யாசகர்கள். தொடுக்கப்பட்ட பூக்களும், புகையும், தணல் துண்டுகளும் வெளியேற்றும் நறுமணம். கேட்பவர் நரம்புகளை முறுக்கேற்றும்வண்ணம் திடும்திடும்திடும் என்று அதிரும் தோற்கருவிகள், உச்சஸ்தாயியில் கதறும் காற்றுக் கருவிகள்.

வெண்கல நிற ராஜகுமாரிகள், பட்டுடுத்திய சிற்றரசர்கள், மயிற்பீலி மீதும் தந்தங்களின் மீதும் வைரங்களின் மீதும் அடங்காக் காதல் கொண்ட மன்னர்கள். ஓசையின் சீரான பிரவாகத்தை வர்ஷிக்கும் வித்வான்கள், ஒரு ஜில்லா ஆட்சிக்காகப் பரம்பரை பரம்பரையாய்ப் போரிட்டு மடியும் மாவீரர்கள்.

உச்சிவெயிலில், நிலக்கரிபோலப் பளபளக்கும் கருஞ் சருமத்துடன் கட்டட வேலையோ வயல்வேலையோ செய்து கொண்டிருக்கும் கூலியாட்கள், காற்றுடன் இசைவாய் நடனமிடும் ஒளிர்பச்சை நாற்றுகள், யுகயுகமாய்த் தொடரும் மர்மம் போல ரகசியமாய் நகரும் நதிகள். விசித்திரமான நெடியுடன், ஒரு மிடறு விழுங்கிய மாத்திரத்தில் குடல் கருகும் உணர்வுடன் போதையேற்றும் நாட்டு மது...

என்ன தேசம் இது. மர்மங்கள் சூழ்ந்த மாயாலோகம் போல, பித்தனின் கனவில் ஊறிய நிலவெளி போல, வசீகரப் பிசாசுகளின் நடனமேடை போல, எவ்வளவு காலம் வசித்த பின்னும் புதிதாகவே தோன்றும் வேற்றுக் கிரகம்.

திரும்பத் திரும்ப வரவேண்டும் என்று நினைத்தேனே... நோய்க்குப் பலியாகி, சுறாமீன்களுக்கு உணவாகிச் செரிப்பதற்கா இந்த மண்ணுக்கு வந்தேன். மிளகு விலையைக் கூட்டின தரகர்களால் உந்துதலுற்று இந்தியாவுக்கு வந்தோம். நானோ, ஐந்து ஷில்லிங் விலை உயர்வுக்கு என் உயிரைக் காவு கொடுத்திருக்கிறேன். என்னவொரு அபத்தம். ஒரு பவுண்டு மிளகுக்கு ஐந்து ஷில்லிங் அதிகம் தர மாட்டோம்; கப்பலில் ஏறிக் கண்காணாத தொலைவு வந்து உயிர்களைப் பறிகொடுப்போம்.

சிறு திருட்டுக்காகத் தலைகொய்யும் இந்திய அரசர்களின் நீதியை விடக் கொடிய நீதி இது. அதோ என் இங்கிலாந்து... மேன்மை தங்கிய அரசியாரே, தங்கள் கீழ்ப்படிதலுள்ள பிரஜையாகிய மௌண்ட்பேட்டன், முறையாகப் பொருள் ஈட்டி, நியாயமாக வரி கட்டி, வாணிகத்தின் விரிவாக்கமாக இந்தியா வந்து, காசியின் கொசுக்களுக்குத் தன் ரத்தத்தைப் படையலிட்டு, உயிர் குடிக்கும் காய்ச்சலை விலையாகப் பெற்றுக்கொண்டு திரும்பி வருகிறான். என்ன அற்புதமான வியாபாரம்... எவ்வளவு அதிக லாபம்.

மேன்மை தங்கிய அரசியாரே, இதோ காற்றில் கரைகிறேன். சமுத்திரத்தின் அலைகளில் மோதுண்டு,மறுகரையின் சூட்சும நிலப்பரப்பில் சரீரமற்ற ஜீவத் துகளாக நடமாட விரைகிறேன். இந்தியா என்னும் ஆவல் நிலத்தில் வேரூன்றும் கனவுக்குள் மெல்ல மெல்லச் சரிந்திறங்குகிறேன். கிண்ணம் கவிழ்ந்து சொட்டிய துளி அதலபாதாளம் நோக்கிப் போய்க்கொண்டிருக்கிறது. தன் பயணத்தின் எந்த ஒரு புள்ளியிலும் அந்தரத்தில் மிதந்து தொங்குவது போன்று காட்சியளித்தவாறு.

ஓ... இந்தியா... என் இந்தியா... இந்தியா... என் காதலீ...

## அத்தியாயம். 41

சில உதிரிச் சம்பவங்களைச் சொல்லவேண்டும். உதிரி என்ற சொல், ஸ்ரீ முத்துச்சாமியின் ஞாபகத்தை இழுத்து வருகிறது. அவர் சொல்வார்:

தனித்தனிச் சொட்டுகள் ஒன்று கூடித் தாரையாவது போல, பல்லாயிரம் உதிரிச் சம்பவங்களின் தொகுப்புதான் வாழ்க்கை.

1948-ம் வருஷம். ஜனவரி மாதம் 30ஆம் தேதி வெள்ளிக்கிழமை அன்று. வழக்கமாக வெள்ளிக்கிழமைகளில் மடம் உற்சவக்கோலம் பூண்டுவிடும். அந்த வெள்ளிக்கிழமை விசேஷ பூஜைக்கான ஏற்பாடுகள் எதுவும் நடைபெறவில்லை. மடத்துக்கு அடுத்திருந்த எண்ணெய்ச் செக்கின் முதலாளியான குடுமிச்செட்டியார் அன்று மதியம் காலமாகிவிட்டார். பிரேத ஸம்ஸ்காரம் நிறைவேறும் வரை, தெருவில் பூஜைகளோ, சமையலோ நடக்கக்கூடாது என்று நியதி.

ஊஞ்சலில் ஸ்ரீ முத்துச்சாமி உட்கார்ந்திருந்தார். நான் வழக்கம் போலத் தரையில். சாயங்கால நேரம். சந்நிதியை விட்டு விலக மனமற்றுப் பிரியும் பக்தனைப் போல, மெல்ல அகல்கிறது பகற்பொழுது. பெரியபுராணம் வாசிக்கிறார் நாகநாத செட்டியார். சிவனடியார் வேடத்திலிருந்த முத்தநாதன், குருவின் ஆசனத்திலமர்ந்து, தலைவணங்கிய மெய்ப்பொருள் நாயனாரை, பனையேட்டுக் கட்டிலிருந்து உருவிய குறுவாளால் குத்துகிறான். ஸ்ரீ முத்துச்சாமி,

போதும்.

என்கிறார். செட்டியார், புத்தகத்தை மூடி அலமாரியில் கொண்டு வைத்துவிட்டு, ஸ்ரீ முத்துச்சாமியை வணங்கி உத்தரவு வாங்கிக்கொள்கிறார். நாங்கள் இருந்த கூடமும் அந்தச் சாயங்காலமும் ஒருவித அவஸ்தையான நிசப்தம் மேற்கொள்கின்றன. எனக்கு நெற்றிப் பொட்டில் விண்விண் ணென்று தெறிக்கிற மாதிரித் தலைவலி ஏறுகிறது. ஓரிரு நாழிகைகள் இப்படிக் கழிந்திருக்கும். ஸ்ரீ முத்துச்சாமி கண்களை மூடி அமர்ந்திருக்கிறார். கண் திறந்தவர், தனக்குத்தானே

பேசிக்கொள்பவர்போல,

அடேடே, கிளம்பிட்டாரே.

என்றார்.

மடத்தின் பின்கட்டிலிருந்து கண்ணாடிச் சாமான் எதுவோ விழுந்து நொறுங்கும் சப்தம் கேட்கிறது. ஸ்ரீ முத்துச்சாமி சிரித்துக்கொள்கிறார். சற்றுக் கசப்பூறிய சிரிப்பு. பொசுங்கும் வாசனை நிறைகிறது கூடத்தில். நான் எழுந்து பூஜைஸ்தலம் அருகில் செல்கிறேன். பஞ்சமுகக் குத்துவிளக்கில், சுடர் அணைந்து, புகைந்துகொண்டிருக்கிறது ஒரு திரி.

ஆலாஸ்யம், கிட்டே வாரும்.

சொல்லுங்கள்.

தணிந்த குரலில் சொல்கிறார்.

காந்தியைச் சுட்டுவிட்டார்கள்.

என்ன சொல்கிறீர்கள்!

சுதேசிதான் சுட்டது. ஸ்தலத்திலேயே மாண்டுவிட்டார். நீர் புறப்படும். தாயார் தனியாக இருப்பார்கள்.

அடுத்த ஒரு மணி நேரத்தில் பெரியகுளம் நகரமே துயரக்கோலம் பூண்டுவிட்டது. பாரததேசம் துஷ்டி வீடாகி விட்ட செய்திகள் வரத் தொடங்கின.

***

பெரியகுளம் நகரின் மேற்கு எல்லையில் சுப்பிரமணியசுவாமி கோயில் இருக்கிறது. கோயில் மதிலையொட்டிய சாலையின் மறுசிறகில் பெரிய குளம் ஒன்றிருக்கிறது. சமுத்திரம் போல நீர் ததும்பும். குளத்தின் மகா நீர்ப்பரப்பின் நடுவே கருவேலமரங்கள் மண்டிய இருட்புதர் இருக்கும். நவநவமான பட்சிகள் வந்து செல்லும் அங்கு.

சில நாட்கள் சாயங்காலங்களில் அந்த இடத்துக்கு நடந்து செல்வோம். நடக்கச் செல்லும்போது ஸ்ரீ முத்துச்சாமி மற்றவர்களைத் தவிர்த்துவிடுவார். நானும் அவரும் மட்டும் செல்கிற மாதிரி பார்த்துக்கொள்வார்.

கரையில் உட்கார்ந்திருந்தோம். சாதுவான வளர்ப்புப் பிராணி போலக் கிடந்தது நிசப்தம். குளத்தின் மையத்தில் வந்து அடையத்

தொடங்கியிருந்த பட்சிகளின் கெச்சட்டம் வேற்றுக் கிரக சங்கீதம் போலக் கேட்டது. காட்சியின் அமைதியிலும் வனப்பிலும் கரைபவர் போல, நீர்ப்பரப்பில் ஒரே இடத்தை வெறித்துப் பார்த்துக்கொண்டிருந்தார் ஸ்ரீ முத்துச்சாமி. சடாரென்று பேச ஆரம்பித்தார்.

> ஆலாஸ்யம். அந்த அம்மாளுக்கு ஒரு நினைப்பு. கண்ணை விட்டுக் காட்சியை மறைத்துவிட்டால் எல்லாம் சரியாகிவிடும் என்று. கண்ணை மூடுவதற்கு இமை இருக்கிற மாதிரி, மனசை மூடுவதற்கு இமையுண்டா. அந்த அம்மாள் புலம்புவதைப் பார்த்து நமக்குச் சிரிப்புப் பொத்துக்கொண்டு வந்துவிட்டது. நாம் சிரிக்கிறோம். காரணம் புரியாமல் அவளும் சிரிக்கிறாள்.

> அந்த அம்மாள் என்கிறீர்களே, யார் அது?

ஸ்ரீ முத்துச்சாமியின் முகம் இறுகிவிட்டது. சற்று மௌனமாக இருந்தார். பிறகு சொன்னார்:

> தேவரகசியங்களைப் பேசிக்கொண்டிருக்கிறோம் உம்மிடம். லோகாயதமான விபரங்களைக் கேட்காதீர். அவசியம் வரும் போது நீரே தெரிந்துகொள்வீர்.

என் கண்களுக்குள் தீர்க்கமாகத் தன் பார்வையைச் செலுத்தினார்.

> ஒரு குழந்தையைக் காட்சியிலிருந்து மறைக்கவேண்டும் என்பது அவள் ஆசை. அவளுடைய பூர்வ ஜென்மப் பலன் அது. கருவாக வந்து அவள் மகளின் உதரத்தில் புகுந்திருக்கிறது. தன் கண்ணிலிருந்து மட்டும் அல்ல. ஊரார் கண்ணிலிருந்தும் மறைக்க ஆசைப்படுகிறாள். நடத்திக் கொடுத்தோம். குழந்தையையும், அவள் வீட்டில் வந்து அது ஜனித்ததற்கான தடயங்களையும் ஒருங்கே மறைத்துவிட்டோம். ஆனால், பாவம், சாகிற நாள்வரை அந்தக் குழந்தையை நினைத்துப் புழுங்கித்தான் ஆகவேண்டும் அவள். ஜென்மாந்திரக் கணக்கை வாழ்ந்துதான் தீர்க்கவேண்டும். வேறு விமோசனமில்லை.

எங்கள் தலைக்குமேலாகக் கடந்து போனது வாலாட்டிக்குருவியொன்று. எத்தனை வேகமாக அசைந்தும், இரண்டாகப் பிளவுபட்ட வால் துலக்கமாகத் தெரிந்தது.

> முந்தின ஜென்மத்தில், பாடலிபுத்திரத்தில் அரசகுலத்தவளாக இருந்தாள் அந்த அம்மாள். யானைப்பாகன் ஒருவனுடன் சம்போகித்து உண்டான கருவை, ரகசியமாக அழித்துவிட்டாள்.

அழிந்த கரு, தன் ஆயுளைத் தொடர்வதற்காக, இவளுடைய மகளின் வயிற்றுக்குள் புகுந்திருக்கிறது.

மறுபடி மௌனம். சுப்பிரமணியசுவாமி கோயிலின் ஆலாட்சமணி திசைகளை அதிர்விக்கிறது. மேற்கிலிருந்து கிழக்காகச் செல்லும் வண்டியில் பூட்டிய மாடுகளின் கொம்பிலிருந்து கிளம்பும் குறுமணிச் சப்தம் கோயில் மணி ஓசையுடன் இசைகிறது. சீரான லயத்தில் மாறி மாறி ஒலிக்கும் மணிகளின் ஒத்திசைவில் தோய்கிறது அந்தி.

அந்தப் பெண்ணைக் காப்பது என்று முடிவெடுத்ததுக்கு இன்னொரு காரணம் உண்டு. கணவன் மனைவி, ஒருத்தனுக்கு ஒருத்தி என்பதெல்லாம் வெறும் ஏற்பாடுகள்தாமே. திறப்பது, பெண்ணுடம்பின் இயல்பு. யோனியை விளையாட்டுத் திடலாகக் கொள்வது, புருஷேந்திரியத்தின் இயல்பு. தனக்கான முகூர்த்தத்தில் அது அது நடந்து முடிகிறது. இதில் சரியென்ன, தவறென்ன. செயற்கையான வரப்புகளுக்குள், எத்தனை மனோவதைகள்.

விநோதமான கேள்வியொன்று உதித்தது எனக்குள்.

தவறில்லையென்றால் ஒரு கேள்வி கேட்கலாமா?

ஆஹா.

முந்தின ஜென்மத்தில் நான் யாராக இருந்தேன்.

ஆலாஸ்யம். தகவலின் சுவாரசியம் கருதிக் கேட்கிறீர். லௌகீக வாழ்வின் உபாதைகளுக்கு அப்பால் ஏதேனும் விசனங்கள் உண்டா உமக்கு?

இல்லை.

பிறகு, எதற்காகத் தெரியவேண்டும்? இதோ பாரும். ஆடு, புழுக்கை போடும். யானை லத்தி போடும். மாற்றிப் போட நேர்ந்தால் யானை தப்பித்துவிடும். ஆட்டின் கதியென்ன!

சொல்லிவிட்டு, குழந்தை போலச் சிரித்தார். என்னையும் தொற்றியது சிரிப்பு.

கோபித்துக் கொள்ளாதேயும். விளையாட்டாய் உதாரணம் சொன்னேன்.

***

அன்றிரவு அவருடன் தங்குவதாகிவிட்டது. வெளியூரிலிருந்து வந்த

பக்தர்களில் சிலருடன் பேசிக்கொண்டிருந்ததில், நேரம் போனதே தெரியவில்லை. நிசி தாண்டிக் கொஞ்ச நேரம் போயிருக்கும். யாரோ தொட்டு எழுப்புவது போல உணர்ந்தேன். ஸ்ரீ முத்துச்சாமி. வாசல் திண்ணைக்குச் சென்று அமர்ந்தோம்.

நல்ல தூக்கமோ.

அப்படியெல்லாம் இல்லை. லேசாகக் கண்ணை அமட்டியது...

தாட்சண்யமாய்ச் சொல்கிறீர். போகட்டும். உம்மிடம் ஒன்று சொல்லத் தோன்றுகிறது. அதுதான் எழுப்பினோம். பொறுத்துக் கொள்ளுவீர்தானே?

என்ன இதெல்லாம் சம்பிரதாயமாக...

கேளும், ஆலாஸ்யம். அவர்கள் துரத்துகிறார்கள். நாம் ஓடிக் கொண்டிருக்கிறோம். தலைகீழாய் நின்றாலும் அவர்களால் நம்மைப் பிடிக்க இயலாது. நம்முடைய வேகமே வேறு. வாயு வேகம், மனோ வேகம் என்று சொல்லத்தக்கது. உண்மையில், நாம் ஓடவில்லை. இருந்த இடத்திலேயே இருக்கிறோம். தரை எதிர்ப்புறமாக விரைகிறது, நம்மைக் காப்பாற்றும் பொருட்டு.

என்ன சொல்கிறீர்கள் என்று புரியவில்லையே.

நான் சொல்வதை மட்டும் கேட்டு வைத்துக்கொள்ளும். காலம் பழுக்கும்போது தானாகப் புரிந்துவிட்டுப் போகிறது. மேலே சொல்லட்டுமா.

சொல்லுங்கள்.

ஓடிக்கொண்டிருக்கும்போதே உதயமானது. என்ன பித்துக்குளித் தனம் இது. துரத்துபவர்களிடமிருந்தா தப்பி ஓடுகிறோம். மரணத்திடமிருந்து காத்துக் கொள்ள அல்லவா ஓடுகிறோம். அப்படி அறுதியாகக் காத்துக்கொண்டுவிட முடியுமா? இத்தனை கால ஞானப் பழக்கமும், யோகப் பயிற்சியும் கற்றுக் கொடுத்தது வெறும் ஓட்டத்தைத்தானா? ஜனனம் என்றிருந்தால் மரணம் நிச்சயம் என்ற சாமான்ய சூத்திரம் கூட எட்டாத சிற்றறிவா? நின்ற இடத்தில் அப்படியே நின்று விட்டோம். காற்றும் மழையும் பட்சிகளும் பருவமாற்றங்களும் வந்து போகும் ஸ்தலமாக நின்றுகொண்டிருக்கிறோம்.

***

இத்தனை விஷயங்கள் சொல்கிறீர்கள். இவ்வளவு கருணை இருக்கிறது. இந்தியதேசம் முழுக்க இந்த மாதிரி ஞானிகளுக்கும், சித்தர்களுக்கும் குறைச்சலேயில்லை. அப்படியிருந்தும், சாப்பாட்டுக்கில்லாமல் மனிதர்கள் சாகிறார்கள். வியாதி வந்துவிடுகிறது. ஒருத்தரையொருத்தர் கொன்றுகொள்கிறார்கள். பிறத்தியான் பெண்சாதி மேல் இச்சைப்படுகிறார்கள். பொருளுக்காகக் கொலை செய்கிறார்கள். தோலின் நிறத்தை வைத்து எஜமானர்களும் அடிமைகளும் நிர்ணயமாகிறார்கள். ஒரு தேசம் ஆண்டானாகிறது. மற்றதை அடிமை கொள்கிறது. நீங்கள் எல்லாரும் சேர்ந்தால், இதையெல்லாம் சரிசெய்துவிட முடியாதா.

என்னய்யா பேசுகிறீர்? வருஷம் பூராவும் கூட இருந்துவிட்டு இப்படி அரிச்சுவடிக் கேள்வி கேட்கிறீரே.

வருஷம் பூராவும் கூட இருந்ததாலும், உங்கள் மார்க்கத்தின், ஸித்திகளின் மகத்துவம் தெரிந்ததாலும்தான் கேட்கிறேன். நான் கேட்டது தவறென்றால் மன்னித்துவிடுங்கள். ஆனால் என் கேள்வி தவறென்று நினைக்கவில்லை நான்.

ஆலாஸ்யம், யானைப்பாகன் ஒருத்தன் இருந்தான். விடிந்தும் விடியாததுமாக அவன்கிட்டே ஒருத்தன் ஓடிவந்தான். வந்தவன் கிட்டே இவன் கேட்டான், ‘என்னப்பா, என்ன விஷயம்?’ அவன் சொன்னானாம். ‘பெரிய சிக்கலாயிருச்சுங்க. வீட்டுல வச்சிருந்த குண்டூசி ஒண்ணு வைக்கோல் போரிலே விழுந்து காணாமெப் போயிருச்சு. அதைக் கண்டுபிடிச்சுத் தர்றதுக்கு ஒங்க யானையைக் கொஞ்சம் அனுப்புறீங்களா’ன்னானாம்.

வெகுநேரம் சிரித்துக்கொண்டேயிருந்தார் ஸ்ரீ முத்துச்சாமி. சிரித்து முடியும் வரை காத்திருந்து மறுபடியும் கேட்டேன்:

என்னுடைய கேள்வியின் ஆதங்கம் உங்களுக்குப் புரியாமலிருக்காது. நேரடியான பதில் சொல்வீர்கள் என்று எதிர்பார்த்தேன்.

சொல்கிறோம். நீர் கேட்பது மிக மிக நியாயமான கேள்வி. ஒரு தர்க்கத்தின், ஒரு தரிசனத்தின், குழந்தைகளும் பேரக் குழந்தைகளுமே இந்தச் சிக்கல்கள் எல்லாம். இவற்றை அதே பிராந்தியத்தில் வைத்துத் தீர்ப்பதில் அநேகர் ஈடுபட்டிருக்கிறார்கள். செம்மையாகவோ குளறுபடியாகவோ அவரவர் வழியில் செய்தும் வருகிறார்கள். இது ஒரு வகை. ஆனால், நீர் சொல்கிற

சிக்கல்களைப் பூண்டோடு அழிக்க வேண்டுமென்றால், இவற்றின் அடிப்படையான ஆதி தர்க்கத்தை வேரறுக்கவேண்டும். தரிசனத்தின் அந்தரங்கத் தடங்களில் மாற்றம் உண்டாக்க வேண்டும். இந்த இரண்டாவது வகைச் சேவையில் ஈடுபட்டிருக்கிற பணியாட்கள்தாம் நாமும் நம்மைப் போன்றவர்களும். நம்மைப்போய் முதல்வகைப் பணியை மேற்கொள்ளுங்கள் என்று கேட்பது, யானையைப் பிச்சையெடுக்க வைப்பது போலத்தான். திருப்திதானா.

பகல்போலப் படர்ந்திருக்கிறது நிலாவெளிச்சம். குளத்தின் கரையோர மரவரிசையிலிருந்து ஒரு தனிப் பறவையின் கூவல் கேட்கிறது...

***

சிகாமணியைப் பற்றிச் சொல்லியிருக்கிறேனில்லையா?

ஆமாம். கண்ணாடிச் சில்லுகளைத் தின்பார் என்றீர்களே.

நீர் கெட்டிக்காரரய்யா. அவருடன் ஒரு தடவை பாணதீர்த்தம் போயிருந்தேன். பாறைகளும் நீர்ச்சுழிகளும் நிறைந்த இடம் அது. குளிக்க இறங்கிவிட்டேன். சிகாமணி ஒரு பாறையில் உட்கார்ந்து பார்த்துக்கொண்டிருக்கிறார். ஆனந்தமான குளியல். நீரில் மூழ்கித் திளைக்கத் திளைக்க மிருதுவாகிக்கொண்டே போகிறது. மனமும் நனைந்து இதமாகி வருகிறது.

திடீரென்று காலடியில் தரை நழுவிவிட்டது. என்ன நடக்கிறதென்று தெரிவதற்குள், நீரின் வசப்பட்டுவிட்டேன். என்னைப் புரட்டிப் போடுகிறது. உடலின் உட்புறம் முழுவதும் பயத்தால் நிரம்புவதுபோல உணர்கிறேன். தண்ணீர் என்னைத் தூக்கி மேற்செலுத்தும்போது, பாறையில் சிகாமணி தெரிகிறார். நான் கைகளை உயர்த்தி ஆட்டும்போதே தனக்குள் அமிழ்த்திக்கொள்கிறது நீர். ஒரு கணம் காட்சியாகத் தெரிவது, மறுகணம் நீராக நிரம்பிவிடுகிறது.

உயிர் பிரிவதற்கான தருணம் நெருங்கிவிட்டதை அறிகிறேன். நேரம் நீண்டுகொண்டே போகிறது. வருஷங்கள் ஓடுகின்றன.

யாரோ என் முடியுச்சியைப் பற்றி இழுக்கிறார்கள். இழுப்பவரின் உடலைப் பற்றத் துழாவுகிறேன். என் கைகளுக்குச் சிக்காத தொலைவில் இருந்தபடி என்னை நீருக்கு வெளியில் இழுத்துச் செல்கிறார்கள். நீருக்குள் இழுத்துச் செல்லப்படும் நீர்த்துளியாகிவிட்டேன் என்பதுதான் கடைசியாக ஞாபகமிருக்கிறது.

நினைவு திரும்பும்போது சிகாமணி எனக்கருகில் உட்கார்ந்திருக்கிறார். நான் பாறையில் கிடக்கிறேன். பிரியமாகச் சிரிக்கிறார். படுத்தவாறே மெல்லப் புரண்டு அவரை அணைத்துக்கொள்கிறேன். உயிரோடிருக்கிறேன் என்ற ஆறுதல் வயிற்றின் அடியாழத்திலிருந்து கிளம்பிப் பெருமூச்சாய் வெளியேறுகிறது. அவர் கேட்கிறார்.

ரொம்பப் பயந்துவிட்டாயோ!

ஆமாம்.

அவர் சிரிக்கிறார். அட சிறுவனே... என்கிற மாதிரிச் சிரிப்பு.

சிரித்தபடியே எழுந்து நீருக்குள் இறங்குகிறார். நீர்ப்பரப்புக்கு மேல் தெரியும் அவருடைய உடம்பு மெல்லக் குறுகி வருகிறது. கழுத்து வரை நீரில் நின்றவாறு என்னைப் பார்த்துப் பிரியமாகச் சிரிக்கிறார். இன்றுவரையும், ஒவ்வொரு தரிசனம் ஸித்தித்த பிறகும் உடனடியாக எனக்குள் விரிந்துவிடுகிற சிரிப்பு அது.

சிகாமணியின் தலை நீருக்குள் புதைகிறது. தலை மறைந்த இடத்தில் மிகப் பெரிய காற்றுக் கொப்புளம் தோன்றி இருந்து மறைகிறது.

சிகாமணி மறைந்துவிட்டார். கரைக்குத் திரும்பவில்லை அவர். திரும்பவேயில்லை...

காற்று கனத்திருக்கிறது. இருள் அடர்ந்து வருகிறது. கூடு நோக்கித் திரும்பும் ஒற்றைப் பறவை, தன் தனிமையிலிருந்து சிந்திச் செல்லும் ஒரு சொட்டு எங்கள் தலையில் வீழ்கிறது.

***

ஸ்ரீ முத்துச்சாமியுடன் ஒரே ஒருமுறை பிரயாணம் செய்யக் கிடைத்தது. சோழவந்தான் செல்லவேண்டும் என்று விரும்பினார் அவர். அருணாசலம் செட்டியாரின் ஆஸ்டின் காரில் பயணப்பட்டோம். ஓட்டுநருக்கருகில் செட்டியார். பின்னிருக்கையில் நானும் ஸ்ரீ முத்துச்சாமியும். சோழவந்தானில் தன் பால்ய காலம் கழிந்த விதம் பற்றி சுவாரஸ்யமாகச் சொல்லிவந்தார் ஸ்ரீ முத்துச்சாமி. பருவம் தோறும் மாறும் விளையாட்டுகள், விவேகானந்தா ஆரம்பப் பள்ளியில் பாடம் எடுத்த ஆசிரியர்கள், வகுப்புத்தோழர்கள் என்று மிகுந்த ஹாஸ்யத்துடன் விவரித்துக்கொண்டுவந்தார்.

பாண்டியராஜபுரம் விலக்கில் ரயில்வே கேட் மூடியிருந்தது. காரை

நிறுத்தி இறங்கினோம். இரண்டு கதவுகளுக்கும் மத்தியில் தண்டவாளத்தின் மேல் நின்றுகொண்டிருந்தது ஒரு காளை மாடு. அதன் கழுத்துக் கயிற்றைப் பிடித்து இழுத்துக்கொண்டிருந்தான் ஒரு கிழவன். மாடு ஏன் வர மறுக்கிறது?

அடடா, குளம்பு சிக்கியிருக்கிறது. செட்டியார் கதவு தாண்டிப் போனார். புதியவரைக் கண்டதும் மாடு மிரண்டு திமிறியது. கால் விசித்திரமாகப் புரண்டு முருங்கைக்காய் ஒடிவது போன்ற சப்தமும், அடிவயிற்றிலிருந்து எழுந்த பரிதாபமான ஓலமும் கிளம்பி லெவல் க்ராஸிங் வட்டாரத்தைக் கலக்கியது.

ஸ்ரீ முத்துச்சாமி அவசரமாகக் காருக்குள் ஏறிக்கொண்டார். முகமும் முன்னங்கைகளும் கடுமையாக வியர்த்துவிட்டன. காளையின் அவஸ்தையை அகலத் திறந்த கண்களால் வெறித்துப் பார்த்தவாறிருந்தார். ஓரிரு கண்ணீர் முத்துக்கள் வழிந்து சொட்டின.

எங்கோ வெகுதொலைவில் என்ஜினின் கூவல் கேட்டு, எதிரொலிக்கிறது. ஸ்ரீ முத்துச்சாமி பதற்றமாகச் சொன்னார்:

> அருணாசலம், வண்டியைத் திருப்பச் சொல்லும். வாடிப்பட்டி வழியாகப் போய்விடலாம்.

வண்டியை அவசரமாகத் திருப்பிக்கொண்டு விரைந்தோம். சோழவந்தான் வரும்வரை வண்டியில் யாரும் ஒரு வார்த்தை கூடப் பேசவில்லை.

ஸ்ரீ முத்துச்சாமி அன்றும் மறுநாளும் உபவாஸமிருந்தார்.

***

அருணாசலம் செட்டியாரின் கடைப் பேரேட்டில் முந்தின நாள் பற்று வரவுகளைப் பதிந்துகொண்டிருந்தேன். ஸ்ரீ முத்துச்சாமி என்னை அழைப்பதாக ஆள் வந்தது. பொதுவாகப் பகல் பொழுதில் கூப்பிட்டனுப்ப மாட்டார். அப்படியே போட்டுவிட்டு, செட்டியாரிடம் சொல்லிக்கொண்டு வடகரையில் நாயக்கர் தெருவுக்கு விரைந்தேன்.

கூடத்திலிருந்த ஊஞ்சலில் அமர்ந்திருந்தவர்,

> வாருமய்யா...

என்றவாறு எழுந்தார். மடத்தின் கொல்லைப்புறம் பசுமாடுகள் இருந்த தொழுவத்தைத் தாண்டிப் புல்லும் புதரும் மண்டிய வெட்டவெளிக்கு

இட்டுச் சென்றார். இரண்டு பேர் அமர்கிற மாதிரியான சிமெண்ட்டுப் பெஞ்ச்சில் அமர்ந்தார்.

ஆலாஸ்யம், கூழைப் பலா அழுகத் தொடங்கிவிட்டது.

என்றார். எதையுமே முதல் தடவை கேட்டதும் புரிந்துகொள்ள முடியாத என் மௌடீகம் பற்றிய ஆதங்கம் உதித்தது எனக்குள்.

நம் பிடரியில் பாரும்.

அவருடைய வலது கை தொட்டுக் காட்டின இடத்தில் தடவிப் பார்த்தேன். நெல்லிக்காய் பருமனுள்ள ஒரு கழலை உருள்கிறது சருமத்துக்கடியில்.

நம்முடைய உயிர் முடிச்சு குவிந்துவிட்டது இந்தக் கட்டியில். என்னவெல்லாம் கிரியைகள் நடந்திருக்கிறது. சாமான்ய எலும்பும் சதையும் தோலும் தாங்குமா.

அவருடைய பேச்சில் ஒளிந்திருந்த பயங்கர முனை ஒன்று பிடிபடுகிற மாதிரி இருந்தது. தலையை உதறிக்கொண்டேன்.

சிறு குழந்தை மாதிரி தலையை ஆட்டாதேயும். அடுத்துச் செய்ய வேண்டியது பற்றிப் பேசத்தான் உம்மை அழைத்தது.

கண்கள் பெருக்கெடுத்தன எனக்கு. என் வயதுதான் அவருக்கு. முப்பதைத் தாண்டவில்லை இன்னும்.

மனுஷ சரீரத்தின் கால அனுபவம் ஒரே சீரானது இல்லை அய்யா. நபருக்கு நபர், இடத்துக்கு இடம், மாறுபடக்கூடியது. நாம் சொன்னோமே சில கிரியைகள், அதைத் தாங்க வேண்டுமானால், பாதரசத்தால் ஆன சரீரம் வேண்டும்.

ஸ்ரீ முத்துச்சாமி சிரித்தார்.

சரி. விடும். மடத்துக்கு ஆயுள் காலக் காரியஸ்தராக உம்மை நியமிக்கிறோம். மடத்தின் அசையும் சொத்துக்கள் அசையாச் சொத்துக்கள் எல்லாம் உம்முடைய பொறுப்பில்தான் இருக்கும். அருணாசலம் செட்டியாரை உதவிக் காரியஸ்தராகப் போட்டுவிடலாம். நம்முடைய சிவபுண்ணியம் ஓதுவாரை அடுத்த பட்டமாகத் தேர்ந்திருக்கிறோம். சரியென்று படுகிறதா உமக்கு? எல்லாவற்றையும் எழுத்து மூலமாகப் பதியவிருக்கிறோம். அதற்கு முன் உம்மிடம் ஒரு வார்த்தை கலந்துகொள்ள வேண்டுமென்றுதான்...

ஸ்ரீ முத்துச்சாமியின் குரல் மிருதுவாக இருந்தது. என்னிடமிருந்து நகரத் தொடங்கிவிட்டார் என்று தோன்றியது. சுவாசப்பாதையில் இரும்புக் குண்டு அடைத்ததுபோலத் திணறலாக இருந்தது எனக்கு. அவர் தொடர்ந்து சொன்னார்:

ஆலாஸ்யம், நமக்கு ஒரு உபகாரம் செய்யவேண்டுமே.

என்ன உபசாரம் இது? சொல்லுங்கள்.

திருவண்ணாமலையில் குள்ளச் சித்தர் மடம் என்று ஒன்றிருக்கிறது. ஸமாதிக்குப் பிறகு, அங்கேபோய் ஒரு நெய் அகல் ஏற்றவேண்டும்.

எனக்கு வாய் குழறியது.

அவசியம் செய்கிறேன். ஆனால், எதற்கு இந்தப் பேச்செல்லாம்?

ஸ்ரீ முத்துச்சாமி எழுந்தார். நானும் எழுந்தேன். அவர் என்னை ஆலிங்கனம் செய்துகொண்டார். விபூதியின் மணம் கமழ்ந்த ஸ்ரீமுத்துச்சாமியின் உடம்பில் இறுகப் பதிந்தது என் உடம்பு. நான் குமுற ஆரம்பித்தேன். கண்ணீரை அடக்க முடியவில்லை. திமிறும் உணர்ச்சியின் வேகத்தில்,

முத்து...

என்று அரற்றினேன்.

ஆமாம். உம்முடைய முத்துவேதான். உம்முடைய முத்து. உம்முடன் கல்லூரியில் படிக்க வந்த முத்துச்சாமி.

அடுத்த ஆறாம் நாள் அதிகாலையில், மடத்துப் பசுக்களைப் பார்த்துக்கொள்ளும் சிங்காரம் வடக்கு அக்ரஹாரத்திலுள்ள என் வீட்டுக் கதவைத் தட்டினான். அவன் சொல்லுமுன்பே எனக்குத் தெரிந்துவிட்டது. அவன் சொல்லுகிற விதமாகக் காதில் விழுந்தது.

அய்யா, சாமி தூக்கத்திலேயே அடங்கிருச்சு.

என் காலடியில் தரை நழுவ ஆரம்பித்தது. இன்றுவரையும் நழுவிக்கொண்டேயிருக்கிறது.

## அத்தியாயம். 42

விளையாட்டுத் திடலில் கூட்டம் நடந்துகொண்டிருக்கிறது. மேடையிலிருந்து சுமார் இருநூறடி தூரத்துக்குச் சீரான இடைவெளி விட்டு நடப்பட்ட சவுக்குத் தடிகளில் குழல்விளக்குகள் கட்டப்பட்டிருக்கின்றன. நல்ல கூட்டம் என்றுதான் சொல்லவேண்டும். ஐநூறு அறுநூறு பேர் இருப்பார்கள். நாடக பாவனையில் கைகளையும் தலையையும் அசைத்துப் பேசிக்கொண்டிருப்பவன், தூரத்துப் பார்வைக்கு பொம்மலாட்ட பொம்மை போலத் தெரிகிறான். அவனது கணீர்க்குரல் ஒலிபெருக்கியின் வழி பிரவகிக்கிறது.

ஒலிபெருக்கும் அமைப்பில் ஏதோ கோளாறு நேர்ந்து, பெரும் ஊளை கிளம்புகிறது. அவித்த கடலை விற்கக் கூட்டத்திற்குள் நுழைந்தவனின் கைமணிச் சத்தம் உரக்கிறது. பக்கத்தில் நின்றிருக்கும் ஜட்காக் குதிரை கால்மாற்றிக் கனைக்கிறது. ஒலிபெருக்கியை நேராக்கிவிட்டார்கள். பேச்சாளனின் குரல் அர்த்தமிழந்த ஓசையாய்க் கேட்கிறது. பொருள் இழந்த ஓசைக் குவியலிலிருந்து 'அற்புதம்' என்றொரு வார்த்தை தனித்து வெளியேறித் தலைக்குள் வந்து புதைகிறது.

இருளில் ஒரு ஓரமாகச் சைக்கிளை நிறுத்தினார். புதரோரம் குந்தினார். சிறுநீர் கழித்து முடியும்போது உடம்பு விதிர்த்துக்கொண்டது. அடர்ந்து கிடக்கும் இருளைத் துளைத்துக் கவனத்தை ஈர்த்துப் பாய்ந்து மறைகிறது ஒரு விண்கல். உடனே பச்சைமரத்தைப் பார்க்க வேண்டுமென்பார்கள். கருவேலம் புதர்களாய் இருக்கும் பூமியில் பச்சை மரத்துக்கு எங்கே போவது?

சைக்கிளை நகர்த்தும்போது தோன்றியது. மினுங்கும் வைரம் போல மிதந்து மறைகிறதே எரிகல், இது அற்புதமில்லையா? ஆழாக்குப் பாலில் நாலைந்து சொட்டு மோர் ஊற்றி, ஹார்லிக்ஸ் பாட்டிலில் கொடுத்துவிடுகிறாள் சிகப்பி. மதியம் உணவு நேரத்தில் பாட்டிலைத் திறந்தால் பதமாக உறைந்து தயிராகி இருக்கிறதே. தண்ணீரும் உரமும் பக்குவமாய்க் கிளையேறிப் பழுத்துத் தொங்குகிறதே. அதெல்லாம்

அற்புதமில்லையா.

காரணம் கண்டுபிடித்துவிட்டதால் அற்புதம் அற்புதமாக இல்லாமல் போய்விடுமா?

அம்மான் செத்ததை முன்கூட்டியே கனவில் கண்டார்களே அம்மா, அது மர்மமான அற்புதம் இல்லையா.

அற்புதம் அற்புதம் என்று எண்ணற்ற தடவைகள் உச்சாடனமாகும்போது, அந்தச் சொல் அர்த்தமிழந்த வெற்று ஒலியாக வெளிறியது. வீடு வந்துவிட்டது.

விழிப்புத் தட்டியபோது, ‘அட, இருட்டீருச்சா’, என்று தோன்றியது. கடிகாரத்தைப் பார்த்தார். மணி நாலரைதான் ஆகிறது. மோடம் போட்டிருக்கிறது. இன்று முழுவதுமே இதமாய்த்தான் நிலவுகிறது. சிகப்பி எப்போது எழுந்து போனாள் தெரியவில்லை. அடுப்பங்கரையில் பாத்திரச் சப்தம் கேட்கிறது. எழுந்து முகம் கழுவப் போனார்.

திரும்பி வந்தபோது, கட்டிலருகில் ஒரு தட்டில் தேன்குழலும், கருப்பட்டிக் காப்பித் தம்ளரும் இருந்தன. ‘என்ன இவ, கண்ணாமூச்சி ஆடுறா’, என்று நினைத்தபடியே முகத்தைத் துண்டால் துடைத்துக்கொண்டு உட்கார்ந்தார். தலையை வாரியபடி அறைக்குள் வந்தாள் சிகப்பி. முகம் கொஞ்சம் அதைத்த மாதிரி இருந்தது. அசந்து தூங்கியிருப்பாள் போல.

> இந்தா ஆத்தா, நீயும் எடுத்துக்க.

தேன்குழலை நீட்டினார்.

> வேணாங்க, மதியம் சாப்புட்டதே நெஞ்சிலேயே கெடக்கு. எதுத்து எதுத்து வருது. நீங்க தின்னுக்கிட்டிருங்க. குளிச்சிட்டு வந்துர்றேன். கசகசன்னு இருக்கு.

அந்தப் புத்தகத்தில் இன்னும் நாற்பது ஐம்பது பக்கங்கள்தான் பாக்கி இருக்கும். இன்னைக்கி முடிச்சிறலாம். புத்தகத்தை எடுத்தார். அடையாளத்துக்காகச் செருகியிருந்த அட்டையை உருவியபோது, சில உதிரிச் சம்பவங்கள் என்ற அத்தியாயத்தில் விரிந்தது. கடைசியாய் எங்கே விட்டோம்? இதோ, அந்த வரி வந்துவிட்டது.

…என் காலடியில் தரை நழுவ ஆரம்பித்தது. இன்று வரையும் நழுவிக்கொண்டேயிருக்கிறது.

***

பௌர்ணமி. முழு நிலாவின் அதிகாரத்தில் ஆகாயவெளி முழுவதும் பகல்நிறம் கொண்டிருக்கிறது. நிலாப் பரப்பின் கருமச்சங்கள் துல்லியமாகத் தெரியுமளவு பெரிதாய்க் கிடந்தது நிலா. நேரமாகிவிட்டதை நினைவுபடுத்தினேன்.

இருக்கட்டுமய்யா. இன்றைக்கு இந்த இடம் எவ்வளவு லட்சணமாய் இருக்கிறது. விட்டு விட்டுப் போகத்தகுமா?

பிறகு நான் பேசவில்லை. குளத்தின் மையத்தில் அடைந்துவிட்ட பறவைக் கூட்டத்தின் கூச்சல் ரகளையாய் அமளிப்படுகிறது. நீர்ப்பரப்பில் விழுந்த நிலா நெளிகிறது. நீர்விளிம்பிலிருந்து தவளைகள் அவ்வப்போது க்ளக்கென்று நீரில் பாயும் சப்தம் கேட்கிறது. மையத்திலிருந்து கிளைத்து வரும் நீர்வரிகள் எதிர்ப்புக்காளாகின்றன. ஸ்ரீ முத்துச்சாமி தொண்டையைச் செருமினார். ஏதோ விஷயம் வரவிருப்பதன் குறிப்பு அது.

சொல்லுங்கள்.

ஆலாஸ்யம். அந்த உடம்புக்கு இறுதி நேரம் நெருங்கிவிட்டது. சுவாசம் தப்புகிறது. நாடி மெல்ல அடங்கி வருகிறது. ரத்த ஓட்டம் மந்தமாகிறது. பார்வையில் ஒளி குன்றுகிறது. இதோ கட்டிலில் கிடப்பதான உணர்விலிருந்து விடுபட்டு மேலேறுகிறோம். கப்பல் அறையின் உத்தரத்திலிருந்து பார்த்துக் கொண்டிருக்கிறோம். அந்த உடம்பு தன் இறுதித் துடிப்பை வெளிப்படுத்துகிறது.

அறையின் ஜன்னல் வழியாக யாரோ பார்க்கிறார்கள். செய்தி பரவுகிறது. கப்பல் தலைவன் அறைக்கதவைத் திறந்து உள்ளே வருகிறான். உடலை நெருங்காமல் நிலையருகிலேயே முழந்தாளிட்டுக் கண் மூடிக் கைகளை ஏந்திப் பிரார்த்தனை செய்கிறான். தன் வலதுகையை, தலையில் தொடங்கிச் செங்குத்தாகக் கீழிறக்கி, வலது இடது தோள்களைத் தொட்டுப் பாவனையாகச் சிலுவை வரைந்த பின் கண்களைத் திறக்கிறான்.

அறைக்குள் சிலர் வருகிறார்கள். தொற்றுநோய்க்குப் பலியான அந்த உடம்பை நீண்ட கழிகளால் புரட்டி ஓலைப்பாயில் புரட்டிச் சுருட்டுகிறார்கள். அந்த உடம்புக்குப் பாத்தியமான பாத்திரங்கள், துணிமணிகளைக் கைபடாமல் கோணியிலிட்டுக் கப்பலின் வெளித் தளத்துக்குக் கொண்டுவருகிறார்கள்.

ஒரேயொரு நாட்குறிப்புப் புத்தகம் மேஜையின் இழுப்பறையில் தங்கிவிட்டதை யாரும் கவனிக்கவில்லை. உடலைச் சுற்றிக் கூட்டமாக அமர்ந்து பிரார்த்தனை செய்கிறார்கள். உடம்பை அதன் சொத்துக்களுடன் கயிற்றில் கட்டிக் கடலில் இறக்குகிறார்கள்.

சற்று முன் நாமாக இருந்த அந்த உடம்பு பிரேதம் என்ற ரசமாற்றம் பெற்று நீரில் அமிழ்கிறது. உடனடியாகச் சூழ்ந்து கொள்கிறது மீன் கூட்டம்.

காலமும் இடமுமற்ற பெருவெளியில் இருந்து சகலத்தையும் பார்த்துக்கொண்டிருக்கிறோம் நாம்...

தன் நெஞ்சின் இடப்பகுதியில் வலதுகையைப் பதித்துக்கொண்டார். விரைந்து ஓடும் காட்சியைப் பார்ப்பதுபோல இடவலமாக வேகமாகப் பாய்ந்தன விழிகள். தொடர்ந்து சொன்னார்:

இதோ, இறந்தவனின் நண்பன் அந்த நாட்குறிப்பைப் படிக்கிறான். இதோ, பழுக்காய் மசியால் எழுதப்பட்ட அந்தக் குறிப்புகள் அச்சு யந்திரத்தில் பல்லாயிரம் பிரதிகளாகப் பெருகுகின்றன...

குறிப்புகளை எழுதின உடம்பை மவுண்ட்பேட்டன் என்று அழைப்பார்கள். இப்போதைய உடம்பை முத்துச்சாமி என்று அழைப்பது மாதிரி.

எழுந்து விசையுடன் நடந்தார். ஓடுவதுபோலக் கால்களை எட்டிப் போட்டுப் பின்தொடர்ந்தேன்.

***

ஆலாஸ்யம், அருணாசலம் வற்புறுத்திக் கூப்பிட்டதால் இந்த ஊருக்கு வந்தோம். ஆரம்பத்தில், கேட்பவர்களுக்கு ஆரூடம் போலச் சொல்லிக்கொண்டிருந்தோம். நம் குருநாதர் சிகாமணியை மாதிரித்தான். தட்சிணை எதுவும் பெற்றுக் கொள்வதில்லை. பின் ஒருநாள் தோன்றியது. எதிர்காலத்தைப் பார்த்துச் சொல்வதன் மூலம் இயற்கையின் இயல்பு விதியை மீறுகிறோம் என்று. அது அவசியமில்லையே என்றும் தோன்றியது. தானாய்ப் பழுக்கும் பழத்துக்கும் புகை போட்டுப் பழுத்த பழத்துக்கும் ருசிபேதம் எவ்வளவு இருக்கிறது.

அவ்வளவுதான், நிறுத்திவிட்டோம்.

கூடத்தில் மாட்டியிருந்த சுவர்க்கடிகாரம் கண்டாமணிபோலக் கனத்து

ஒலித்தது. பதினொரு தடவைகள் கடிகாரம் அடித்துமுடியும் வரை காத்திருந்துவிட்டு, நாகநாத செட்டியார் சொன்னார்:

> சாமி, தெற்கு அக்ராரத்திலே ஒரு சாமியார் தண்டு இறங்கியிருக்காரு.

அதிகாலையில் அம்மாவிடம் வனஜா பேசிக்கொண்டிருந்தது ஞாபகம் வந்தது எனக்கு. பேரழகான பெண் அது. பாலக்காட்டுக்காரர்கள். அவளுடைய அப்பா ஹிந்தி பண்டிட். பள்ளிக்கூடத்தில் வேலை பார்ப்பது போக, தனியாகவும் வகுப்புகள் எடுத்து வருகிறார். எங்கள் வீட்டுக்கு நாலு வீடு தள்ளிக் குடியிருக்கிறார்கள். கோடாலி முடிச்சிட்ட கூந்தலும், சந்தனக் கீற்றுமாக வெண்கல விக்கிரகம் மாதிரி நின்று அந்தப் பெண் கையை ஆட்டி ஆட்டிப் பேசிக்கொண்டிருந்தாள் அம்மாவிடம்.

கொல்லைப்புறத்தில் இருக்கும் பவளமல்லிகை மரத்தில் பூப்பறித்துப் போவதற்காக வந்திருந்தாள். அந்தச் சாமியாருக்காகத்தான். வனஜாவின் நீண்ட விரல்களே பவளமல்லிக் காம்புகள் மாதிரித்தான் இருந்தன.

> ஆலாஸ்யம், சாயங்காலம் போய்ப் பார்த்து வருவோமா?

அந்த வீட்டை நெருங்கும்போதே ஸ்ரீ முத்துச்சாமியின் நடை தயங்கிவிட்டது.

> ஓய். நீர் சென்று வாரும். நாம் இந்தத் திண்ணையில் இருக்கிறோம்.

நான் போனேன். வாசலில் தகரப்பலகையில் அறிவிப்பு இருந்தது.உஜ்ஜயினி ஸ்ரீஸ்ரீஸ்ரீ தேஜோமயானந்த ஸரஸ்வதீ ஸ்வாமிகள் ஸ்ரீமடம். முகாம் பெரியகுளம்.

இருபது முப்பது பேர் கூடிய சிறு சபையிடம் பேசிக் கொண்டிருந்தார் அந்த இளைஞர். வசீகரமானவர். சுத்தமாக மழித்த மோவாயில் பச்சை போர்த்தியிருந்தது. சற்றே விலகிய முக்காட்டின் அடியில் கருகருவென்று அடர்ந்திருந்தது வெல்வெட் போன்ற முடி. அவருடைய முகத்துக்கு அசந்தர்ப்பமாகத் தென்பட்டது காவி நிற உடை. சபையிடம் பேசினாலும், சீரான இடைவேளைகளில், முதல் வரிசையில் இருந்த வனஜாவின் மேல் பட்டுப்பட்டு விலகியது அவரது பார்வை.

மிஞ்சிப் போனால், இரண்டு நிமிஷங்கள் இருந்திருப்பேன். வெளியேறிவிட்டேன். ஸ்ரீ முத்துச்சாமி காத்திருந்தார். நான் அருகில் சென்றதும்,

குளக்கரைக்குப் போவோமா?

என்றார்.

ஆஹா.

நடக்கும்போது தானாகச் சொன்னார்:

நீர் பார்த்தீரே துறவி. அவருக்கு நான்கு குழந்தைகளுக்குப் பிராப்தம் இருக்கிறது.

என்ன சொல்கிறீர்கள்!

சிரித்தவாறு சொல்லத் தொடங்கினார்...

கவனத்தைக் கலைத்தது ஒரு சப்தம். வாந்தியெடுக்கும் சப்தம். சிகப்பிதான். புத்தகத்தில் அடையாளம் வைத்து மூடிவிட்டு கொல்லைப்புறம் விரைந்தார் பழனியப்பன். தென்னைமரத்தில் கையையூன்றி ஓங்கரித்து வாந்தி பண்ணிக்கொண்டிருந்தாள். அருகில் சென்று அவள் தலையை இறுகப் பிடித்தார். காறித் துப்பிவிட்டு நிமிர்ந்தவளின் கண்கள் கடுமையாகச் சிவந்து நீர் கோத்திருந்தன.

என்னம்மா செய்யிது.

திக்கித் திணறிச் சொன்னாள்:

வயித்தெக் கடுமையாப் பொரட்டுதுங்க. காலைலேர்ந்து இதோட அஞ்சாவது தடவை.

பித்தமா இருக்கும். இஞ்சியைத் தட்டிச் சாறு குடியேன்.

இல்லேங்க. பித்த வாந்தி மாதிரி இல்லே. தலைவேற சுத்துது.

வேலுச்சாமி டாக்டர் கிட்டெப் போவமா?

வேணாங்க. சவுந்தரவல்லிகிட்டெப் போவோம்.

ம்.

மீண்டுமொருமுறை முகம் கழுவிக்கொண்டார். சட்டையைப் போட்டுக்கொண்டு தயாரானபோது, சிகப்பி அறைக்குள் வந்தாள். சற்று முன் வாந்தி பண்ணிய முகம் போலில்லை. புத்துணர்வுடன் இருக்கிறது. கண்களில் சிகப்பு காணாமல் போயிருந்தது. அருகில் வந்து உரசிக்கொண்டு நின்றாள்.

ஏங்க, ஏங்கிட்ட ஒரு வித்தியாசம் இருக்கு. கண்டுபிடிங்க பாப்பம்.

தலைமுதல் கால்வரை ஒரு தடவை அவளைப் பார்த்தார். முகத்தில் குழந்தைத்தனம் கூடிவிட்டது மாதிரி இருக்கிறது. சமீபகாலமாக அவளைத் தொற்றியிருக்கும் உற்சாகம் இன்னும் அளவு கூடியிருக்கிறது.

ஒண்ணும் தெரியலயேத்தா.

இந்தா பாருங்க.

கழுத்தில் கிடந்த இரட்டை வடம் சங்கிலியை எடுத்துக் காட்டினாள்.

உள்ளேயிருந்து எடுத்துப் போட்டுக்கிட்டேன்.

டாக்டர்ட்டக் காமிக்கிறதுக்கா!

சிரித்தவாறே கதவை இழுத்துச் சாத்திப் பூட்டினார்.

குளிர்ந்த காற்று நிரம்பியிருக்கிறது தெருவில். கொசுத்தூறல் போடுகிறது. எங்கிருந்தோ ஒரு பறவைச் சத்தம் மிதந்து வருகிறது. முந்தின நாள் மழை கழுவித் துடைத்திருக்கிறது தெருவை. மழைக்காலச் சாயங்காலம் மனத்தை நிறைக்கிறது. மழையைக் கொண்டாடுகிறது பூமி.

மேலவீட்டு உண்ணாமலை ஆச்சி வெற்றிலை உரலில் இடித்தவாறு பழனியப்பனைப் பார்த்துப் பிரியமாகச் சிரிக்கிறாள்.

பழனியப்பன் புன்னகைத்தார். ஆச்சியின் சிரிப்பு தொடர்கிறது. சிகப்பியைப் பார்க்கிறாள். சிகப்பியும் புன்னகைக்கிறாள் ஆச்சியைப் பார்த்து!

மழைக் காலத்தில் எல்லாமே குளிர்ந்துவிடுகிறது. ஜடப்பொருட்களும் உயிர்ப்பொருட்களும் தண்மையுறுகின்றன. குழந்தையின் உற்சாகத்துடன் துள்ளலாக நடந்து உடன் வருகிறாள் சிகப்பி. பழனியப்பனின் மனதில் இனம் தெரியாத சந்தோஷம் பொங்குகிறது.

இந்தக் கணம், குளிர்ச்சியின் கணம். இந்த ஒரு கணத்தில் வாழ்க்கை உறைந்துவிட்டால் எவ்வளவு நன்றாக இருக்கும் என்று எண்ணிக்கொண்டார் பழனியப்பன்.

---

# பின்னுரை

ராமநாதபுரத்தில் சென்று பணியில் அமர்ந்த வருடம். மதுரைக்கு மாற்றல் பெற்றுவிடவேண்டும் என்று மிகவும் ஆவலாய் இருந்தேன். மேலதிகாரிகளையும் தொழிற்சங்கத் தலைவர்களையும் திரும்பத் திரும்பச் சந்தித்துச் சோர்வடைந்திருந்த சமயம், 'மாப்பாளையத்தில் எனக்குத் தெரிந்த ஒருத்தர் இருக்கிறார். அவரிடம் போய்க் கேட்கலாம் வா' என்று அழைத்துப் போனான் என் நண்பன்.

தடிமனான மூக்குக் கண்ணாடி அணிந்திருந்தார் அவர். வில்லைகளின் வழி, மிளகுகள் போலத் தெரிந்தன விழிகள். அந்தக் கண்ணாடியையும் கழற்றி வைத்துவிட்டு, என் வலது உள்ளங்கையைத் தன் முகத்தருகில் கொண்டு பார்த்துவிட்டு, படபடவெனப் பேச ஆரம்பித்தார்.

முதன் முதல் தடவையாக நான் சந்திக்கிற ஒருவருக்கு என் இருபத்தோரு வருடக் கடந்தகாலம் திரைப்படம் போலத் தெரிகிறது. உடன் வந்தவன் மிக நெருங்கின நண்பன் எனக்கு. அவனுக்குக்கூடத் தெரிவிக்காமல் நான் அந்தரங்கமாக வைத்திருந்த விஷயங்களை நேரில் பார்ப்பதுபோல ஒப்பித்தார்.

ஒரு கட்டத்தில், நான் அம்மணமாக நிற்பது போன்ற உணர்வேற்பட்டது. 'போதும், போதும். இனி ஒன்றும் சொல்லவேண்டாம். எனக்கு மாற்றல் எப்போது கிடைக்கும் என்று மட்டும் சொன்னால் போதும்', என்றேன்.

அந்த வருட டிசம்பருக்குள் கிடைத்துவிடும் என்றார்.

அவருடனான அன்றைய சந்திப்பும், வீட்டுக்குத் திரும்பும்போது மனதில் பொங்கிய நம்பிக்கையும் உற்சாகமும் இன்றும் பசுமையாக நினைவிருக்கின்றன. இந்த நாவலுக்கான முதல் விதை அப்போதுதான் விழுந்திருக்கவேண்டும்.

இதில் உபரியான தகவல் என்னவென்றால், அடுத்த ஆறு வருட டிசம்பர்களும் ராமநாதபுரத்திலேயேதான் கழிந்தன. அதற்குப் பிறகு கிடைத்த மாற்றலும் கோவில்பட்டிக்குத்தான். மதுரைக்கு அல்ல!

கோவில்பட்டியில் இருந்த சமயம் கார்லோஸ் காஸ்டெனெடாவின் புத்தகங்கள் படிக்கக் கிடைத்தன. எனக்கு மிகவும் பிடித்த எழுத்தாசிரியர் அவர். தனது ஆசான் என்று காஸ்டெனெடா குறிப்பிடும் டான் ஜுவானுக்கும் அவருக்கும் இடையில் நிகழும் உரையாடல்கள் சமூக வாழ்வின், பூமித்தலத்தின் பௌதீக அலகுகளில் பொதிந்த அர்த்தங்கள், அனர்த்தங்கள், அபத்தங்கள் பற்றிய விசாரணையும் விவாதமுமாக விரிவடைந்துகொண்டே போகும்.

ஆனால், காஸ்டெனெடா விவரிக்கும் சம்பவங்கள், விஞ்ஞான மனோபாவம் ஏற்றுக்கொள்ள முடியாத மாயத்தன்மையுடன் இருக்கும். ஒரு முழுமையான மாந்திரீகப் பயிற்சிமுறை பற்றிய விரிவான குறிப்புகள் இருக்கும் - அபாரமான நம்பகத்தன்மையுடன்.

எழுத்தாள நண்பர் ஒருவருடன் பேசிக்கொண்டிருக்கும்போது, காஸ்டெனெடாவின் நூல்களைச் சிலாகித்தேன்.

‘டான் ஜுவான் என்று ஒரு நபரே உண்மையில் இருந்தது கிடையாது என்றும் காஸ்டெனெடாவின் எழுத்துகள் அனைத்துமே வெறும் புரளி என்றும் கட்டுரைகள் வந்திருக்கின்றன தெரியுமா’, என்றார்.

‘அப்படியிருக்கும் பட்சத்தில் காஸ்டெனெடாவை முதல்தரமான இலக்கிய ஆசிரியன் என்று கொள்வேன்’ என்று பதிலிறுத்தேன்.

மாற்று மெய்ம்மை சம்பந்தமாக யோசனைபூர்வமான சலனங்கள் எனக்குள் உண்டானதற்குக் காஸ்டெனெடாவின் புத்தகங்களை முதன்மையான காரணமாகச் சொல்லவேண்டும்.

தொண்ணூறுகளின் மத்தியில், நோபல் பரிசு பெற்ற விஞ்ஞானியாகிய டாக்டர் அலெக்ஸிஸ் காரெல்லின் கட்டுரை ஒன்றை உள்முகக் காலம் என்ற தலைப்பில் மொழிபெயர்த்தேன். மையம் இதழில் தொடராக வெளிவந்த அந்தக் கட்டுரையில், ஆரூடம் சொல்பவர்களைப் பற்றி டாக்டர் காரெல் குறிப்பிடுகிறார்.

அவர்களுடைய கால அனுபவம் முழுக்க முழுக்க வேறானது. சாதாரண மனிதர்களைவிட உயரமான தளத்திலிருந்து கொள்ளப்படுவது. இதன் காரணமாக, ஏற்கெனவே நடந்து முடிந்தவற்றை நடக்கப் போகிறவை என்றும், நடக்கப் போகிறவற்றை நடந்தவையாகவும் அவர்கள் தரிசிக்கும் சாத்தியம் இருக்கிறது’ என்று டாக்டர் காரெல் எழுதியிருந்தது, கிளர்ச்சியூட்டுவதாக இருந்தது.

அப்படியென்றால், காலம் என்ற பரப்பு, சாதாரணக் கண்களுக்குத் தரை

தெரிவதுபோல, பருண்மையான பௌதிகப் பரப்பு ஆகிவிடுகிறது என்றல்லவா ஆகிறது!

மாற்று மெய்ம்மையின் மெய்த்தன்மையைவிட அதில் கலந்திருக்கும் ஃபேன்ட்டஸி அம்சம் எனக்குக் கவர்ச்சியூட்டுகிறது. வேற்றுக் கிரகங்கள் அல்லது வேறு காலங்களுக்குப் பயணிக்கும் விஞ்ஞானப் புனைகதைகளுக்கு ஈடான சுவாரசியத்தைக் கொண்டிருக்கிறது இந்த விதமான சிந்தனைப் போக்கு.

இந்த மாற்றுத் தளத்துக்கும் முறையாக ஒழுங்கமைக்கப்பட்ட கணித சூத்திரங்கள், கருதுகோள்கள், தர்க்க நியாயங்கள், மரபுவழி வளர்ச்சி ஆகியவை உள்ளன. தவிர, அறிவியலின் வழிப்பட்ட காண்முறைக்கு பதிலியானது அல்ல இது. தன்னளவிலேயே முழுமையான ஒரு அனுபவப்புலம் என்பதற்கும் நிரூபணங்கள் தரப்படுகின்றன.

இதுபோன்ற தர்க்கபூர்வ ஆதாரங்களை விடவும், என் எதிரில் இருக்கும் மனிதனுக்கும் எனக்கும் பகிர்ந்துகொள்ளக் கிடைத்த காலவெளி அனுபவம் ஒன்றேயானதோ, சமமானதோ அல்ல என்பது சுவாரசியமான விஷயமாய் இருக்கிறது.

அதைப் பரிசோதிப்பதும் உறுதி செய்வதும் வேறு துறைகளின் பணி. இந்த அனுபவக் கோணத்தில் இயல்பாகவே பொதிந்திருக்கும் புனைவுத் தன்மையின் மீதுதான் எனக்குக் கவனம்.

பல்வேறு புத்தகங்கள், நண்பர்களுடனான உரையாடல்கள், விவாதங்கள் என்று எத்தனையோ காரணிகள் ஒன்றுசேர்ந்து இந்த நாவலுக்கான உந்துதலை அளித்தன.

நேரடியாக உதவிகரமாக இருந்த நூல்களைக் குறிப்பிட வேண்டும்.

இலஞ்சியைச் சேர்ந்த திரு. சொக்கலிங்கம் எழுதி, 1930களில் வெளியான, வினையும் பயனும் அல்லது மறுபிறப்பு வரலாறுகள்.

வெ.சாமிநாத சர்மாவின் எனது பர்மா வழிநடைப் பயணம்.

வீராசாமி செட்டியார் எழுதிய விநோதரச மஞ்சரி.

மதுரையைச் சேர்ந்த ஸ்ரீ ஸ்வாமி ஸிவானந்த சரஸ்வதிஜீ மஹராஜின் தரிசனங்களும் ஜீவித சரிதமும்.

கென்னத் ஆண்டர்ஸன் எழுதி, தமிழில் மொழிபெயர்க்கப்பட்ட சீவனப்பள்ளியின் கருஞ்சிறுத்தை.

ஜிம் கார்பெட் எழுதித் தமிழில் மொழிபெயர்க்கப்பட்ட குமாவும் புலிகள்.

இன்னும், சிறு சிறு தகவல்களை அளித்த பல்வேறு நூல்கள்.

என்னுடைய இரண்டாவது கவிதைத் தொகுதியான வேறொரு காலம் தயாரானது திரு. வசந்தகுமாரின் பொறுப்பில். அதன் அட்டைப் படம் தயாராகி வந்திருந்த ஒரு சாயங்காலத்தில், வசந்தகுமார், பஷீர் இவர்களுடன் வெகுநேரம் பேசிக் கொண்டிருந்தேன். என்னுடைய பள்ளிப் பருவம், என் தந்தையார் பற்றிய ஞாபகங்கள், பன்னிரண்டு வயதுவரை நான் வளர்ந்த கரட்டுப்பட்டி கிராமத்தைப் பற்றிய சித்திரங்கள் என்று ஓடியது பேச்சு.

கிளம்பும் நேரத்தில், நான் புனைகதை எழுதவேண்டும் என்று மிகவும் உற்சாகமூட்டிப் பேசினார் வசந்தகுமார். எனது சிறுகதைத் தொகுதியான ஒளிவிலகல் எழுதப்படுவதற்கான ஆரம்பக் காரணங்களில் ஊக்கிகளில் ஒன்றாக அந்தச் சாயங்காலம் அமைந்தது. அன்று வசந்தகுமார்,

> நாவல் எழுதுங்கள் சேகர், உங்களுடைய நாவலை நான் வெளியிடுகிறேன்.

என்றார்.

அப்போது எனக்குத் தெரியாது. நான் நாவல் எழுதுவேன் என்று.

மூன்று வருடங்களுக்கு முன்பு யதேச்சையாகக் கூறியவாறு, இந்த நாவலை தமிழினி வெளியிட்டது சந்தோஷமாக இருந்தது.

யுவன் சந்திரசேகர்
சென்னை
16.12.2002

